# அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்.

பேராசிரியர்
டாக்டர் ந. சுப்புரெட்டியார்



# அறிவியல் நோக்கில்
# இலக்கியம், சமயம், தத்துவம்

நிமிஷகவி கே. சுப்பைய நாயுடு அறக்கட்டளை
சென்னைப் பல்கலைக் கழகச் சொற்பொழிவுகள்
1996-97


'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
'கலைமாமணி' 'வைணவ இலக்கிய மாமணி' 'தமிழ்ச்செம்மல்'

**பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்,**
எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பிஎச்.டி. ,டி.லிட்.,

இயக்குநர், தெற்கு - தென்கிழக்கு ஆசிய நாடுகளின்
மரபுவழிப் பண்பாட்டு நிறுவனம்,
சென்னைப் பல்கலைக் கழகம்





**பழனியப்பா பிரதர்ஸ்**

***'கோனார் மாளிகை'***

14, *பீட்டர்ஸ் சாலை,* *சென்னை* - 600 014

***கிளைகள் :***

*திருச்சி* - 620 002 *சேலம்* - 636 001
*கோயமுத்தூர்* - 641 001 *மதுரை* - 625 001
*ஈரோடு* - 638 001.



டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன்
உயர்வுறு தத்துவ ஆய்வு நிறுவன முதல் இயக்குநர்
பேராசிரியர் **T.M.P. மகாதேவன்** அவர்கட்கு

## அன்புப்படையல்

தத்துவத் துறையில் விளக்கினை இட்ட
சால்பினர்; பண்பினால் உயர்ந்தோர்;
சித்திரம் சான்ற நூல்களைப் பண்பு
திகழ்தரும் ஆங்கிலத் தளித்தோர்;
வித்தக ஆழ்வார் பகர்ந்தஅத் துவிதம்
விளக்கென ஈனைமுனம் பணித்தோர்;
புத்தனே அனைய மகாதேவ நம்பி
பொன்னடிக் குரியதிந் நூலே.

Justice N.K. KRISHNASWAMY REDDY (Retd.) Ph : 6211044
AD-47, Anna Nagar
Chennai - 40

12-6-2000

# அணிந்துரை

பேராசிரியர் பெரும்புலவர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் பல்லாண்டுகளாகத் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் ஆற்றியுள்ள பணி மகத்தானது. பல துறைகளிலே பல நூல்கள் எழுதிப் பல பரிசுகளும் பட்டங்களும் விருதுகளும் பெற்றிருக் கிறார்கள். இத்துணை புகழ் பெற்றும் செருக்கின்றி, ஆரவார ஆடம்பர வாழ்க்கையை அறவே ஒதுக்கி, எளிமையான வாழ்க்கையை ஏற்றுக்கொண்டு ஒழுக்க சீலராய் வாழ்கின்றார்கள்.

**"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்பது அறிவு"** (424)

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க டாக்டர் ரெட்டியார் அவர்கள் மிகவும் கடினமான மறைபொருள்களையும் எளிமை யாக மக்கள் புரிந்துகொள்ளும் வகையில் எழுதுவதில் வல்லுநர் இவர்தம் தமிழ்ப்பணியில் அறிவியல் வாடை - ஒளி வெகுவாக இருக்கும்; ஆதிக்கம் பெற்றிருக்கும்.

பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் நிமிஷகவி திரு.கே. சுப்பைய நாயுடு அறக்கட்டளையின் ஆதரவில் **"அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம், சமயம், தத்துவம்"** என்ற பொருளில் 1996-97ஆம் ஆண்டிற்குரியனவாய், சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆற்றிய இரண்டு சொற்பொழிவுகளே இன்று நூல் வடிவம் பெற்றுள்ளன.

**"அறிவியல் தோற்றமும் வளர்ச்சியும்'** என்னும் தலைப்பில் ஆதிமனிதன் அநுபவத்தில் படிப்படியாய்க் கூட்டுவாழ்க்கை, சமுதாய வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளான உண்டி, உடை, உறையுள், பாதுகாப்பு இவைகளை வேளாண்மை மூலமாய் நிறைவு செய்துகொண்டான் என்பதையும், அறிவியல் போக்கில் உயிரியல், மருத்துவம், கணிதம், வானியல், போக்கு வரத்து முறைகள் எப்படிப் படிப்படியாய் வளர்ந்தன என்பதையும் தெளிவாய் எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

**"சமயங்களின் தோற்றமும் வளர்ச்சியும்"** என்னும் தலைப்பில் பல்வேறு சமயங்களைக் குறிப்பிட்டுப் பஞ்சபூதங்களாலாகியது இந்த உலகத்தின் தோற்றம் என்பதைச் சுட்டி, வைதிகச் சமயங் களாகிய வைணவம், சைவம் ஆகியவைபற்றியும் புறச்சமயங்க ளான சார்வாகம், சமணம், பௌத்தம் முதலியவைபற்றியும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளார்கள். வைதிகச் சமயங்கள் யாவும் இறைவன் படைப்பிற்கு இறைவனையே நிமித்த காரணமாய்க் கொள்வதையும், புறச்சமயங்கள் யாவும் அணுக்களிலிருந்துதான் உலகம் தோன்றியது என்பதையும் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

**'அறிவியல் நோக்கில் சமயம் த்த்துவம்'** என்னும் தலைப்பில் அண்டங்களின் அமைப்பையும் அணுவின் அமைப்பையும் ஒப்பிட்டு விளக்கி, 'ஆதவனே ஆற்றலின் மூலம்' என்பதையும், அவ்வாற்றலை ஆருயிர்கள் பல்வேறு பொருள் வடிவங்களின் மூலம் நுகர்கின்றன என்பதையும், இதற்கு அறிகுறியாகத்தான் பொங்கல் திருநாளை உழவர்கள் "தமிழர் திருநாளாகக்" கொண் டாடுகிறார்கள் என்பதையும் விளக்கமாய்த் தெளிவாக்கி யுள்ளார்கள்.

அணுவாற்றலே சக்தி தத்துவமாய் உருவெடுத்தது என்றும், அறிவியல் யுகத்தில் தோன்றிய பாரதியார் அறிவியல் அடிப்படையில் தம் பாடல்களைப் படைத்துள்ளார் என்றும் பெருமையுடன் சுட்டியுள்ளார்கள்.

இந்த அருமையான, அறிவியல் நோக்கில் - போக்கில் - அமைந்த பனுவலை உலகத் தத்துவ மேதை **டாக்டர் T.M.P. மகாதேவன்** அவர்கட்கு அன்புப்படையலாக்கியிருப்பது மேலும் இதற்குப் பெருமை சேர்ப்பதாய் அமைகின்றது. இச்சீரிய நூலைத் தமிழ்ப்பெருமக்கள் படித்துப் பயன்பெறவேண்டும் என்பது என் விழைவு.

டாக்டர் ரெட்டியார் அவர்கள் மேலும் மேலும் தமிழ் மக்கட்குப் பயன்படுமாறு அறிவியல் சார்ந்த நூல்களை **எழுதிக் கொண்டே** பல்லாண்டுகள் மனவளமுடனும் உடல் நலத்துடனும் வாழ்வாங்கு வாழ எல்லாம் வல்ல எம்பெருமானைப் பிரார்த்திக் கின்றேன்.

**- என். கிருட்டிணசாமி ரெட்டி**

# நூல் முகம்

'ஒருமொழியே பலமொழிக்கும் இடங்கொ டுக்கும்;
ஒருமொழியே **மலம்ஒழிக்கும் ஒழிக்கும்'** என்ற
ஒருமொழியைக் கருத்தினிலே நிறுத்தும் வண்ணம்
ஒருமொழி 'ஓம் நமச்சிவாய' என்பர்;
'அரிஅரி'என் றிடினும்அஃதே; 'ராம ராம'
'சிவசிவ'வென் றிட்டாலும் அஃதே யாகும்;
தெரிவுறவே 'ஓம்சக்தி' என்று மேலோர்
செபம்புரிவது அப்பொருளின் பெயரே யாகும்[1]

- பாரதியார்

டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன் உயர்வுறு தத்துவ ஆய்வு நிறுவன இயக்குநர் டாக்டர் இரா. **கோபாலகிருட்டிணன்** அவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க, **நிமிஷகவி கே. சுப்பைய நாயுடு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்** - 1996-97 திட்டத்தில் (1) அறிவியல் நோக்கில் - தமிழ் இலக்கியம், (27-1-1997), (2) அறிவியல் நோக்கில் - சமயம், தத்துவம் (28-1-1997) என்னும் தலைப்புகளில் நிகழ்த்திய **இரு** சொற்பொழிவுகள் இப்போது அச்சேறி நூல் வடிவம் பெறுகின்றன.

இப்பொழிவுகளின் கைப்படியைப் **'பழனியப்பா பிரதர்ஸ்'** நிறுவனத்தின் பங்காளர் **திரு. செ.மெ. பழனியப்பச் செட்டியார்** அவர்கள் அன்புடன் ஏற்று, அழகிய முறையில் அச்சிட்டு, நூல் வடிவமாக்கித் தமிழ்கூறு நல்லுலகில் உலவ விட்டமைக்கு அச்சான்றோருக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள் உரியன.

---

1. பா.க. சுயசரிதை - 63

இந்த அரிய நூலுக்கு அழகியதோர் அணிந்துரை நல்கி நூலுக்குப் பொலிவும் சிறப்பும் பெருமையும் ஏற்படுத்திய பெரியார் நீதியரசர் **என். கிருட்டிணசாமி ரெட்டியார்**, ஒய்வு பெற்ற சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாவார். அரசு வக்கீலாக இருந்தபோது நீதிக்கு வாதாடியவர். நீதிபதியான பின்னர் நீதி வழங்கியவர். எண்பது அகவையைக் கடந்து நிற்கும் இப்பெருமகனார் பதினைந்துக்கும் மேற்பட்ட கல்வி, மருத்துவ, சமூக, சமய நிறுவனங்களின் தலைமையாக இருந்து கொண்டு ஆற்றிவரும் தெய்வப்பணிகள் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெறவேண்டியவை. இவற்றுள் குறிப்பிடத்தக்கவை சுமார் ஐம்பது கோடி மதிப்புடைய பதினைந்து உயர்நிலை, மேனிலைப் பள்ளிகளைக் கொண்ட விவேகாநந்த கல்வி நிறுவனம், தாம்பரம் இந்து மருத்துவப் பணி மன்றம், சங்கர நேத்திராலய நிறுவனம், காஞ்சி காமகோடி மடத்தைச் சார்ந்த இந்து சமயப் பணிமன்றம் ஆகியவை ஆகும். இத்தகைய நிறுவனங்களின் பணியைத் தம் இகவாழ்வுக் குறிக்கோளாய்க் கொண்டு பணிபுரியும் நீதி அரசரின் அணிந்துரை பெற்றது இந்த நூலின் பேறு; என் பேறுமாகும்; அணிந்துரை நல்கி ஆசி கூறிய பெருமகனாருக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள் உரியவை.

இந்த நிறுவனத்தின் முதல் இயக்குநர் **திரு.T.M.P. மகாதேவன்** அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய அத்துணைத் தத்துவ நூல்களிலும் அடியேன் ஆழங்கால்பட்டு மிகுபயன் பெற்றவன். தத்துவத்தைத் தெளிவான எளிய ஆங்கில நடையில் எழுதிய மாபெரும் மேதை. அடியேன் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ஓய்வு பெற்று சென்னைக்கு வந்த அதே ஆண்டு (1978) அவர் இல்லத்தில் நடைபெற்ற சிறப்புக் கூட்டமொன்றில் சில ஆழ்வார் பாசுரங்களைக்கொண்டு அத்வைதத் தத்துவத்தை விளக்குமாறு பணித்தார். கடந்த இருபதாண்டு காலமாய் (1960-1980) ஆழ்வார் பாசுரங்களை விசிட்டாத்வைத நோக்கில் ஆய்ந்த அடியேனை இப்பணி திக்குமுக்காடச் செய்தது. பரம்பொருளின் அருளாலும் பணித்த பெருமகனாரின் ஆசியின் கனத்தாலும் நான்கைந்து பாசுரங்களைக்கொண்டு விளக்க முயன்றேன். என் பேச்சை உன்னிக் கவனித்த பெருமகனார் ‘நன்று நன்று’ என்று பாராட்டி ஆசி கூறினார்.

அப்பெருமகனார்பால் அடியேன் கொண்டிருக்கும் பெருமதிப்பிற்கும் மரியாதைக்கும் அறிகுறியாய் இந்தப் பனுவலை அவருக்கு அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்கின்றேன். முத்தியுலகில் இருக்கும் அவருடைய ஆன்மா அடியேனுக்குத் தொடர்ந்து ஆசி கூறிக்கொண்டிருக்கும் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை.

நூல் அச்சாகும்போது, மூலப்படியுடன் பார்வைப்படியை ஒப்பிட்டு நோக்கி உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் **மு. ப. சியாமளா**வுக்கு என் ஆசியுடன் கூடிய நன்றி.

இந்த நூலை உருவாக்கி வெளியிட என் இதய கமலத்தில் நிரந்தரமாய் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலையானின் இணைத்தாமரை அடிகளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன்.

"புல்லும் பசுவிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;
கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம் - தொல்லுலகில்
ஏழை எளியேன் எதற்காவேன்? செந்திநகர்
வாழும் வடிவேல வா!"

- தேசிகவிநாயகம் பிள்ளை

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்,
சென்னை - 40.
9-03-2001
தொ.பே. 6211583

**- ந. சுப்பு ரெட்டியார்**

---

2. தே.வி. மலரும் மாலையும் - முருகன் புகழ்மாலை - 1. அடியேனுக்கு எல்லாக் கடவுளரின் வடிவங்களும் பரப்பிரம்மமாகவே (பெரிய பொருளாகவே) காட்சியளிக்கும்.



# இந்நூலாசிரியரைப்பற்றி ......

85 அகவையைக் கடக்கும் நிலையிலுள்ள இந்நூலாசிரியர் எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பிஎச்.டி. பட்டங்கள் பெற்றவர்.

ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளி நிறுவனர் தலைமையாசிரியராகவும் (1941-50), காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியர் - துறைத் தலைவராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் நிறுவனர் பேராசிரியர் - துறைத்தலைவ ராகவும் (1960-77) பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

1978 சனவரி 14இல் சென்னையில் குடியேறிப் பதினைந்து மாதங்கள் (1978 பிப்பிரவரி - ஜூன் 1979) தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் முதன்மைப் பதிப்பாசிரியராகப் பணி யாற்றியவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் மூன்று மாதங்கள் மதிப்பியல் பேராசிரிய ராகவும் 1989 மே முதல் 1990 அக்டோபர் முடிய 18 திங்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் - காஞ்சித் தத்துவ மையத்தில் தகைஞராகவும் பணியாற்றி 1200 பக்கத்தில் **'வைணவச் செல்வம்'** என்ற ஒரு பெரிய ஆய்வு நூலை உருவாக்கி வழங்கியவர். முதற்பகுதி 1995இல் 575 பக்கத்தில் வெளி வந்துள்ளது. இரண்டாவது பகுதி அச்சேறும் நிலையில் உள்ளது. (த.ப.க. வெளியீடு) 1996-பிப்பிரவரி முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப் பண்பாட்டு நிறுவனத்தில் மதிப்பியல் இயக்குநராகவும் பணியாற்றுபவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறையில் மதிப்பியல் பேராசிரியராக (வாழ்நாள் வரை)வும் இருந்து வருபவர். ஆய்வு மாணவர்கட்கு வழி காட்டியாகவும் இருப்பவர்.

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆய்ந்து டாக்டர் (பிஎச்.டி) பட்டம் பெற்றவர். அந்த ஆய்வு நூல் ஆங்கிலத்தில் 940 பக்கங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழக வெளியீடாய் வெளிவந்துள்ளது. எம்.ஃபில்., பிஎச்.டி. மாணாக்கர்களை உருவாக்கியவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல் வடிவம் பெற்றுள்ளன, பெற்றும் வருகின்றன. தவிர, ஆசிரியம், கல்வி உளவியல் (5), இலக்கியம் (22), சமயம், தத்துவம் (35), வாழ்க்கை வரலாறு, தன் - வரலாறு (13), திறனாய்வு (21), அறிவியல் (20), ஆராய்ச்சி (6) ஆக 122 நூல்களை வெளியிட்டவர்.

இவர்தம் அறிவியல் நூல்களுள் மூன்றும், சமய நூல்களுள் நான்கும் தமிழக அரசுப் பரிசுகளையும், அறிவியல் நூல்களுள் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசினையும், அறிவியல் நூல்களுள் ஒன்று தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசினையும் ஆக 10 நூல்கள் பரிசுகள் பெற்றன.

இவர்தம் அறிவியல் நூல்களைப் பாராட்டிக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 'அருங்கலைக்கோன்' என்ற விருதினையும் (1968), வைணவ நூல்களைப் பாராட்டிப் பண்ணுருட்டி வைணவ மாநாடு 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' என்ற விருதினையும் (1987), தமிழ்ப்பணியைப் பாராட்டித் தமிழக அரசு திரு.வி.க. விருதினையும் (10,000 வெண்பொற் காசுகள் - 1987), இவர்தம் தமிழ்ப்பணியைப் பாராட்டி மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற விருதினையும் (1991), இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளை கல்வி, இலக்கியம், அறிவியல் என்ற மூன்று துறைகளில் இவர்தம் பணியைப் பாராட்டி இராஜா சர் முத்தையவேள் விருதினையும் (50,000 வெண் பொற்காசுகள் - 1994), இவர்தம் கம்பன் பணியைப் பாராட்டிச் சென்னைக் கம்பன் கழகம் பேராசிரியர் இராதாகிருஷ்ணன் விருதினையும் (1994 - 1000 வெண்பொற்காசுகள்), சென்னை ஆழ்வார்கள் ஆய்வு மையம் இவர்தம் வைணவ வெளியீடுகளைச் சிறப்பிக்கும் முறையில் ஸ்ரீ இராமாநுஜர் விருதையும் (1996 - 25,000 வெண் பொற்காசுகளையும்) வழங்கிச் சிறப்பித்துள்ளன.

அண்மையில் இவர்தம் இயற்றமிழ்ப் பணியைப் பாராட்டித் தமிழ் இயல் இசை நாடக மன்றம் (அரசு) 'கலைமாமணி' என்ற விருதினையும் (1999 - 3 சவரன் தங்கப் பதக்கம்), இவர்தம் தமிழ்ப்பணியைப் பாராட்டிச் சென்னை கோயம்பேடு மனிதநேய வைணவ இயக்கம் 'வைணவ இலக்கிய மாமணி' என்ற விருதினையும் (2001), மதுரை காமராசர் பல்கலைக்கழகம் டி.லிட் (கண்ணியம்) என்ற பட்டத்தையும் (1999), காஞ்சி காமகோடி பீட அறக்கட்டளை 'சேவாரத்னா' விருதினையும் (1000 வெண்பொற்காசுகள் - 1999 இவர்தம் வைணவப் பணியைப் பாராட்டி வழங்கிச் சிறப்பித்துள்ளன.

இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்பியல்புகள் ஆகும்.

# உள்ளுறை

| என் | | | பக்கம் |
|---|---|---|---|

முதற்பொழிவு

# 1. அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம்

*"ஆங்கொரு கல்லை வாயிலிற் படிஎன்(று)*
*அமைத்தனன் சிற்பி; மற்றொன்றை*
*ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்(று)*
*உயர்த்தினான்; உலகினோர் தாய்நீ!*
*யாங்கணே, எவரை, எங்ஙனம் சமைத்தற்(கு)*
*எண்ணமோ, அங்ஙனம் சமைப்பாய்;*
*ஈங்குனைச் சரண்என்று எய்தினேன்; என்னை*
*இருங்கலைப் புலவன்ஆக் குதியே.*

*"இடையின்றி அணுக்களெலாம் சுழலுமென*
*இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்;*
*இடையின்றிக் கதிர்களெலாம் சுழலுமென*
*வானூலார் இயம்பு கின்றார்;*
*இடையின்றித் தொழில்புரிதல் உலகினிடைப்*
*பொருட்கெல்லாம் இயற்கை யாயின்*
*இடையின்றிக் கலைமகளே! நினதருளில்*
*எனதுள்ளம் இயங்கொ ணாதோ?"[1]*
*- பாரதியார்*

அன்பு நிறைந்த பேராசிரியப் பெருமக்களே! மாணவச் செல்வங்களே!

வணக்கம்.

இன்று, **நிமிஷகவி திரு. கே. சுப்பைய நாயுடு அறக்கட்டளை சொற்பொழிவுத்** திட்டத்தில் 1997ஆம் ஆண்டுக்குரிய சொற்பொழிவுகள் நிகழ்த்த உங்கள் முன் நிற்கின்றேன். இதனைநிறுவியவர் பேராசிரியர் டாக்டர், சங்கரராஜு நாயுடு

1. *பாரதியார் : பாஞ்சாலி சபதம், (இரண்டாம் பாகம்)* - 205, 206

அவர்கள். இவர் தம் அருமைத் தந்தையார் நினைவாக இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுத் திட்டத்தை நிறுவியவர். பேராசிரியர் டாக்டர் நாயுடு அவர்கள் இந்தப் பல்கலைக் கழகத்தில் இந்தித் துறையில் முதல் பேராசிரியர் - துறைத் தலைவராய் அமர்ந்து துறையைச் சிறப்புற வளர்த்து, ஓய்வு பெற்றவர்கள்; பல கருத்தரங்குகளை நடத்தியவர்கள்; வெவ்வேறு இடங்களில் பல்வேறு கருத்தரங்குகளிலும் இலக்கிய மாநாடு களிலும் கலந்துகொண்டு துறைக்குப் பெரும்புகழ் ஈட்டியவர்கள். காரைக்குடியில் அடியேன் அழகப்பர். பயிற்சிக் கல்லூரியில் (1950ஆம் ஆண்டுகளில்) பணிபுரிந்த காலம் முதல் இவருடன் நெருங்கிப் பழகியுள்ளேன். பழகும் போது இன்முகத்துடன் இனிமையாய் உரையாடி நண்பர்களை மகிழ்விப்பார்கள்.

நான் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர் - துறைத் தலைவராய்ப் பொறுப்பேற்றிருந்த காலத்தில், அனைத்திந்திய கீழ்த்திசை மொழி மாநாடுகளில் தவறாமல் பங்கேற்று ஆய்வுக் கட்டுரைகளை (ஆங்கிலத்தில்) வழங்குவதுண்டு. பேராசிரியர் டாக்டர் நாயுடு அவர்களும் தவறாமல் இம்மாநாடுகளில் பங்கேற்று ஆய்வுக் கட்டுரைகளை வழங்குவதைக் கடமையாய்க் கொண்டவர்கள். 1960-80ஆம் ஆண்டுகளில் நாங்கள் தில்லி, கல்கத்தா, சாந்திநிகேதம், வாரணாசி (உத்திரப்பிரதேசம்), தார்வார் (கர்நாடகம்), குரு சேத்திரம் (ஹரியானா), பூனா (மராட்டியம்), உஜ்ஜயினி (மத்தியப்பிரதேசம்) ஆகிய இடங்களில் நடைபெற்ற இம்மாநாடுகளில் கலந்துகொண்ட நாள்கள் இன்னும் என் உள்ளத்தில் பசுமையாகவே உள்ளன. குருட்சேத்திரத்தில் நடைபெற்ற மாநாட்டில், அடுத்த மாநாட்டுக்குத் திராவிடப் பகுதிக்கு நடைபெறும் தலைவர் தேர்தலில் என்னை வேட்பாளராய் நிற்க வைத்து வெற்றி பெறச்செய்தவர்கள். இந்தி வழங்கும் பகுதியிலிருந்து வரும் அன்பர்களிடம் இவர்தம் செல்வாக்கு நன்கு இருந்தமையால், அவர்தம் வாக்குகளால் வெற்றி பெற முடிந்தது.

இத்தகைய அன்பர் பேராசிரியரின் தந்தையார்தாம் நிமிஷ கவி.கே. சுப்பைய நாயுடு என்பார். இவர்தம் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பையும் உங்கள் முன் வைப்பது பொருத்த மாகும் என நினைக்கின்றேன். இப்பெரியார் திக்கெல்லாம்

புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில், பாளையங்கோட்டையில் பிறந்து வளர்ந்து, தமிழக மாநிலத்தில் காவல் துறையில் 38 ஆண்டுகள் அரும்பணியாற்றி 1928ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றவர். கடைசிக்காலப்பணி சேரன்மாதேவியில். பணிக் காலத்தில் துப்பாக்கிச் சூட்டில் முதல் நிலை பெற்றவர். 1932ஆம் ஆண்டில் ஆக்ரா தயால்பாக்கில் (உத்திரப்பிரதேசம்) வாழ்ந்த 12 ஆண்டு காலத்தில் பேராசிரியர் டாக்டர் நாயுடு அவர்கள் ஆக்ரா முஸ்லிம் பல்கலைக் கழகத்தில் பயின்று, இந்தியில் எம்.ஏ. பட்டம் பெற்றவர். ஆக்ராவில் வாழ்ந்த காலத்தில், கருவிலே திருவுடைய திரு. சுப்பைய நாயுடுவின் நாட்டம் ஆன்மிக வாழ்வில் ஈடுபட்டது. அதில் பக்குவம் அடைந்து, நல்லோர் கூட்டுறவு அதிகமிருந்தமையால் 'சத்சங்கி' (நல்லோர் கூட்டுறவாளர்) என்று பெருமையுடன் குறிப்பிடப்பெற்றவர். இறுதி வாழ்வு தூத்துக்குடியில் (நெல்லை மாவட்டம்) 78 ஆண்டுகள் நிறைவாழ்வு வாழ்ந்து 1946, சனவரி 30இல் திருநாடு அலங்கரிக்கும் நிலையில் இறைவனடி சேர்ந்தார்.

திரு. சுப்பைய நாயுடுவின் கவிதைத்திறன் அவருடைய இளவயதிலேயே அரும்புவிட்டுத் தளிர்த்து வளர்ந்தது. இளவேனிற்காலத்தில் வழக்கமாய் நடைபெறும் காமன் திருவிழாவில் மிகுசிறப்புடன் நடைபெறும் 'எரிந்த கட்சி - எரியாத கட்சி' நிகழ்ச்சியில் ஏதோ ஒரு பக்கம் சார்ந்து நின்று, நேருக்கு நேர் கவிதையில் விவாதம் செய்து மிகுபுகழ் பெற்றவர். பொது மக்களிடம் 'நிமிஷ கவி' என்ற விருதினைப் பெற்றவர்.

இப்பெரியாரின் நினைவாய் இவர்தம் அருமை மகனார் பேராசிரியர் டாக்டர் நாயுடு அவர்களால் இப்பல்கலைக் கழகத்தில் நிறுவப்பெற்ற அறக்கட்டளையின் சார்பாய் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதை 81 அகவையில் உள்ள அடியேன் பெரும் பேறாய்க் கருதுகின்றேன். என்னுடைய தமிழ்ப்பணியில் அறிவியல் தாக்கம் அதிகமிருப்பதை அறிந்தவர், துறைத்தலைவர் டாக்டர் ஆர். கோபாலகிருட்டினன். அவர் அறிவியல் நோக்கில் என் பொழிவு அமைய வேண்டும் என்று விரும்பியதால் என்னுடைய இரு சொற்பொழிவுகளை

(1) அறிவியல் நோக்கில் இலக்கியம்

(2) அறிவியல் நோக்கில் சமயம், தத்துவம்

என்று அமைத்துக்கொண்டு முதற்பொழிவை இன்று நிகழ்த்து கின்றேன்.

நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலமாய்த் தமிழர்கள் நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கினர் என்பது வரலாற்று அறிஞர்கள் ஒப்புக்கொண்ட உண்மை. அறிவியற்கலைகள் அவர்களிடம் பயன்முறைக் கலைகளாய் மிளிர்ந்தன என்பதற்குப் பல்வேறு சான்றுகள் உள்ளன. இன்று மேனாட்டார் **'சயன்ஸ்'** (Science) என்று குறிப்பதைத்தான் நாம் **'அறிவியல்'** என்று வழங்குகின்றோம். **'சயன்ஸ்'** என்னும் சொல் **'அறிவு'** (Knowledge) எனப் பொருள்படும் கிரேக்கச் சொல்லினின்றும் தோன்றியது. மனிதன் வாழும் சூழ்நிலை, சுற்றியுள்ள உலகம், பிற அண்டங்கள் முதலியவற்றின் தன்மைகளைத்தாம் அறிவியற்கலைகள் உணர்த்துகின்றன. பண்டைய தமிழர்கள் இன்று இருப்பன போன்ற அறிவியல் துறைகளைத் தனித்தனிக் கலைகளாய் வளர்த்து வைத்திருந்தனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லாது போயினும், அவர்கள் அக்கலைகள்பற்றி ஓரளவு அறிந்திருந்தனர் என்பதற்கும், அவை அவரது வாழ்வில் பயன்முறை அறிவியல் துறைகளாய் (Applied Science) மிளிர்ந்தன என்பதற்கும் பல்வேறு இலக்கியச் சான்றுகள் உள்ளன. அவற்றினை இன்றைய பொழிவில் விளக்குவேன்.

பண்டைத் தமிழர்கள் வானநூல், உயிரியல், இயற்பியல், பொறியியல் முதலிய பல்வேறு துறைகளிலும் வல்லுநர்களாய்த் திகழ்ந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. என்ன காரணத்தாலோ அவர்கள் இன்றுள்ளன போல் அத்துறைகளைத் தனித்தனியாக வரையறை செய்து பாதுகாக்கவில்லை. ஒருகால் அவ்வாறு வரையறுத்து வைக்கப்பட்டிருந்து அவை அழிந்துபட்டிருக்கவும் கூடும். அஃது எங்ஙனமாயினும், அவர்கள் அத்துறைகளில் வல்லுநர்களாய் இருந்தனர் என்பது மட்டிலும் உறுதி.

நாகரிகமடைந்த நாடுகள் எங்ஙணும், நாள், திங்கள், ஆண்டுகள் ஒரே மாதிரி கணக்கிடப்பெற்று வருகின்றன. தமிழ்நாட்டில் பகல் முப்பது நாழிகை; இரவு முப்பது நாழிகை.

ஆங்கிலக்கணக்குப்படி பகல் 12 மணி; இரவு 12 மணி. இரண்டரை நாழிகை ஒரு மணி எனக் கணக்கிடுகின்றோம். சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி என மாதங்கள் பன்னிரண்டாய்க் கணக்கிடுதல் தமிழ் மரபு. கலியுகாதி, சாலிவாகன, ஹிஜ்ரி, கொல்லம், பாத்ரபத, தட்சிணாயனம் என்ற முறைகளில் ஆண்டுக்கணக்கு ஏட்டு முறையில் பஞ்சாங்கத்தில் இருந்து வருகிறது. அண்மையில், திருவள்ளுவர் ஆண்டை நடைமுறைக்குக் கொண்டுவரும் முயற்சி நடைமுறை யில் உள்ளது. ஆனால், கி.மு. கி.பி. என்னும் ஆங்கில முறைதான் புழக்கத்தில் இருந்து வருகின்றது. வரலாற்று ஆசிரியர்கள் மேற்கொள்ளும் முறை இதுவேயாகும். இஃதுடன் இது நிற்க.

*பண்டைய அறிவியலறிஞர்கள்*

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர், அறிவியலறிஞர்கள் அக்காலத்தில் திகழ்ந்தனர் என்பதை,

> *"செஞ்ஞா யிற்றுச் செலவும்அஞ் ஞாயிற்றுப்*
> *பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்*
> *வளிதிரிதரு திசையும்*
> *வறிது நிலைஇய காயமும் என்றிவை*
> *சென்றளந்து அறிந்தோர் போல என்றும்*
> *இனைத்துஎன் போரும் உளரே"*[2]

(செலவு - வீதி; பரிப்பு - இயக்கம்; மண்டிலம் - வட்டம்; வளி - காற்று; வறிது நிலைஇய் - 'ஆதாரமின்றித் தானே நிற்கும்; காயம் - ஆகாயம்; இனைத்து - இத்துணை அளவு)

"ஞாயிற்றின் வீதியும், அந்த ஞாயிற்றினது இயக்கமும், அவ்வியக்கத்தால் சூழப்படும் பார் வட்டமும், காற்று இயங்கும் திக்கும், ஓர் ஆதாரமுமின்றித் தானே நிற்கும் ஆகாயமும் என்று சொல்லப்பெற்ற இவற்றை ஆண்டாண்டு போய் அளந்தறிந்தவர் களைப்போல் நாளும் இத்துணையளவையுடையன என்று சொல்லும் கல்வியுடையோரும் உளர்" என்ற புலவர் கூற்றில் அத்தகைய அறிஞர்கள் இருந்தமை பெறப்படுகின்றது.

---

2 புறம் - 30; அடி - 1-7)

## 1. வானநூலறிவு

*பண்டையோர் வானநூல் துறையில் அறிவுமிக்கு விளங்கினர் என்பதைப் புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களால் அறிகின்றோம். விண்ணில் மதி செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தேழு பிரிவுகளாய்ப் பிரித்து, அப்பிரிவுகளை அறிந்து கொள்ளும் அடையாளமாய் "எறிகடல் ஏழின் மணல் அளவாக"வுள்ள விண்மீன்களுள் இருபத்தேழு விண்மீன் தொகுதிகளைக் குறித்து அமைத்தனர், பண்டைய அறிஞர்கள். புறநானூற்றில் "மதிசேர் நாண்மீன் போல்"[3] என வரும் சொற்றொடருக்கு உரையாசிரியர் 'திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனையொப்ப' எனக் கூறும் உரையால் இதனையறியலாம். குமணனின் வள்ளன்மையை விளக்க வந்த இடத்தில் வருவது இது. பொன்னால் செய்யப்பெற்ற நன்கலத்தில் உணவும், அதனைச் சுற்றி வைக்கப்பெற்ற வெள்ளியால் செய்யப்பெற்ற பல சிறுசிறு கலங்களில் கறியமுதும் படைக்கப்பெற்றதாய் விளக்குவார், பெருஞ் சித்திரனார். தொண்டைமான் இளந்திரையன் விருந்தோம் பலைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,*

> *"மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி*
> *மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து*
> *ஆனா விருப்பிற் றானின் றூட்டி*
> *மங்கும் வானத்துத் திங்கள் எங்கும்"*[4]

என்று விளக்குவர்.

கோள்களின் இயக்கத்தால் இயற்கை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வெள்ளி என்பது ஒரு மழைக்கோள். அது தெற்கே விலகியிருப்பது மழை இல்லாமைக்கு அறிகுறி என்னும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

> *"வெள்ளி தென்புலத் துறைய விளைவயல்*
> *பள்ளம் வாடிய பயனில் காலை"* [5]

3 புறம் - 160, அடி-8.

4 பெரும்பாண். அடி - 477 - 480.

5. புறம் - 388, அடி 1-2

என்ற மள்ளனார் பாடற்பகுதி விளக்குகின்றது. இதைப் போலவே வால் வெள்ளி தோன்றுவதும், சனிமீன் (கோள்?) புகைவதும், எரிகொள்ளி வீழ்தலும் தீக்குறிகளாய்க் கொள்ளப் பெற்றிருந்தன. இவற்றை,

> "மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
> தென்திசை மருங்கில் வெள்ளி ஓடினும்
> வயலகம் நிறையப் புதற்பூ மலர" 6
> (மைம்மீன் - சனி; தூமம் - வால் மீன்)

என்ற பாட்டின் பகுதியால் அறியலாம். பாரியின் நாடு புன் புலமானது கண்டு வருந்தி வந்த கபிலர், அவன் மகளிர் இருந்த பார்ப்பார் மனையடைந்து தாம் கண்டதைக் கூறுகின்றார். "இம்மகளிர்க்குத் தந்தையாகிய வேள்பாரியின் நாடு அவன் இருந்த காலத்தில் அவன் செங்கோன்மையால் மழை பிழையாது இருந்தது; சான்றோர் பலர் நிறைந்ததாய் இருந்தது; அத்தகைய நாடு இன்று 'பெயல்பிழைப் பறியாப் புன்புலத்த' தாயிற்று என்று இரங்கிப் பாடியதே இப்பாடல்.

இதே கருத்து சிலப்பதிகாரம் நாடுகாண் காதையிலும்,

> "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
> விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"[7]

(கரியவன் - சனி; புகைதல் - பகை வீடுகளில் சென்று மாறுபடுதல்; புகைக்கொடி - தூமகேது)

என்ற அடிகளால் அறிகின்றோம். "சனி புகைதலாவது இடபம், சிங்கம், மீனம் இவற்றோடு மாறுபடுதல்; இவற்றுள் சனி தனக்குப் பகை வீடாகிய சிங்கராசியிற்புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பான் என்பதை 'மகத்திற் புக்கதோர் சனி எனக் காணாய்' (தேவாரம் 7.54:9) என்பதனால் உணர்க.[8] தூமம் புகைக்கொடி என்றும் கூறப்படும்; தூமகேது என்பதுவும் இதுவே; வட்டம், சிலை, நுட்பம், தூமம் என்னும் கரந்துறைகோள்கள் நான்கனுள் ஒன்று; இதன் தோற்றம்

---

6. புறம் - 117, அடி 1-3
7. சிலப்.10; அடி 102-3
8. விண்மீன்களுள் மகம், பூரம், உத்திரத்தின் முதல் கால்பாகம் ஆகியன சிங்க ராசிக்கு உரியவை.

உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிக்கும் என்பர்"[9] என்ற உரைப் பகுதி இதனை நன்கு விளக்குகின்றது. கோள்களின் முரணிய நிலையில் உலகின் பிற பகுதிகளில் மழை இல்லையாயினும் குடகு மலையில் மழை பெய்வதும், காவிரியில் நீர் பெருக் கெடுத்து வருவதும் தப்பா எனக் காவிரியின் சிறப்புக் கூற வேண்டிய இடத்தில் இக்கருத்து வருகின்றது.

"குளமீ னொடு தாட்புகையினும்
மிக்க வானுள் எரிதோன்றினும்" 10

என்ற புறநானூற்றுப் பாடற்பகுதியும், "எரி, குளமீன், தாள் என்பன வான்மீன் விசேடங்கள்; இவை முறையே தோன்றுதலும் புகைதலும் உலக வறுமைக்கு ஏதுக்கள்" என்ற அதன் உரைப்பகுதியும் இக்கருத்தினை உணர்த்துகின்றது.

இன்னோரன்ன குறிப்புகளினின்று பண்டைத் தமிழ் மக்கள் கோள்களின் நிலையிலிருந்து மழை முதலியவற்றை அறியும் குறிநூற்புலமையுடையவராயிருந்தனர் என்பது பெறப்படு கின்றது.

**சோதிடக்கலை :** சங்கப்புலவர்களுள் சிலர் கணியர்க ளாகவும் இருந்தனர். "விளைவெல்லாம், கண்ணியுரைப்பான் கணி" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.[11]

கூடலூர்கிழார் என்ற புலவர் ஒரு கணி. மலை நாட்டிலுள்ள கூடலூரை இருப்பிடமாய்க்கொண்டு வாழ்ந்த புலவர்.[12] இவருடைய பாடல்கள் இன்சுவையை நல்குபவை. இவர் ஒரு நாள், வானத்தில் ஒரு விண்மீன் தீப்பறக்கக் காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து வீழ்ந்தது கண்டார். கார்த்திகை, அனுடம், உத்தரம், மிருகசீரிடம் முதலிய விண்மீன்களின் நிலையினையும் கண்டார். இந்த நிகழ்ச்சிக்கு ஏழாம் நாளில், உலகாளும்

9. சிலப்.10. அடி 102-3 என்பதன் அடியார்க்கு நல்லார் உரைப்பகுதி.
10. புறம் - 395, அடி 34-35
11. புறப்.வெண்.மாலை-174
12. இவர் புலத்துறை முற்றிய கூடலூகிழார் என்று ஆன்றோரால் சிறப்பித்துக் கூறப்பெற்றவர். **'ஐங்குறுநூறு'** என்ற தொகை நூலைத் தொகுத்தவர் இவரே.

வேந்தன் உயிர் நீப்பன் என்று உணர்ந்தார். அந்த வேந்தன் தம்மை ஆதரித்த கோச்சேரமான் யானைக்கண்சேஎய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பானாக இருந்ததனால் கலக்கம் எய்தினார். அவர் கலங்கியவாறே ஏழாம் நாளில் சேரமான் விண்ணாடு புக்கான். இதற்கு அறிகுறியாய் – உற்பாதங்களாய் - யானைகள் கையை நிலத்தே நீட்டி வைத்து உறங்கின; முரசும் தானே கண் கிழிந்து போயிற்று; வெண் குற்றக் குடை கால் துணிந்து வீழ்ந்தது; குதிரைகள், செல்லும் கதியின்றிக் கிடந்தன. இத்தீநிமித்தங்கள் வேந்தனின் இறுதியை வலியுறுத்தின. இவற்றால் மனம் அழுங்கிய கவிஞர் பெருமான் இந்நிகழ்ச்சி களை ஓர் அழகிய பாடலில் எடுத்தோதி மனம் வெதும்பு கின்றார். அந்த அழகிய பாடல் இது :

*"ஆடிய அழல்குட்டத்து*
*ஆரிருள் அரைஇரவின்*
*முடப்பனையத்து வேர்முதலாக்*
*கடைக்குளத்துக் கயம்காயப்*
*பங்குனியுயர் அழுவத்துத்*
*தலைநாண்மீன் நிலைதிரிய*
*நிலைநாண்மீன் அதனெதிர் ஏர்தரத்*
*தொல்நாண்மீன் துறைபடியப்*
*பாசிச் செல்லா தூசி முன்னாது*
*அளக்கர்த்திணை விளக்காகக்*
*கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி*
*ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே*
*அதுகண்டு, யாமும் பிறரும் பல்வேறு இரவலர்*
*பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன்*
*நோயில னாயின் நன்றுமற் றில்லென*
*அழிந்த நெஞ்சம் அடியுளம் பரப்ப*
*அஞ்சினம்; எழுநாள் வந்தன்று இன்றே*
*மைந்துடை யானை கைவைத்து உறங்கவும்*
*திண்பிணி முரசம் கண்கிழிந்து உருளவும்*
*காவல் வெண்குடை கால்பரிந்து உலறவும்*
*காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்*
*மேலோர் உலகம் எய்தினன் ஆகலின்*
*ஒண்டொடி மகளிர்க்கு உறுதுணை யாகித்*
*தன்துணை ஆயம் மறந்தனன் கொல்லோ*

*பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல் நசைவர்க்கு*
*அளந்துகொடை அறியா ஈகை*
*மணிவரை அன்ன மாஅ யோனே"*[13]

(ஆடு - மேடராசி; அழற்குட்டம் - கார்த்திகை; அரை இருள் - பாதி இரவு; முடப்பனை - முடப்பனைபோலும் வடிவை யுடைய அனுட நாளில்; வேர் முதலா - வெள்ளி முதலாக; கடைக்குளம் - புனர்பூசம்; கடைகாய - கடையில் வெள்ளி எல்லையாக; பங்குனி உயர் அழுவம் - பங்குனியின் முதற் பதினைந்தின்கண்; தலைநாண்மீன் - உத்தரம்; நிலைநாண்மீன் - மூலம்; தொல்நாண்மீன் - உத்திரத்துக்கு முன் சொல்லப் பெற்ற எட்டாம் மீன் - மிருகசீரிடம்; பாசி - கீழ்த்திசை; ஊசி - வடதிசை; அளக்கர் - கடல்; எரி - தீ; கால் - காற்று; ஒரு மீன் - வீழ்கொள்ளி; பொருநன் - வேந்தன்; அழிந்த - இரங்கிய; மைந்து - வலிமை; கால் பரிந்து - கால் துணிந்து; கலிமா - குதிரை; மேலோர் உலகம் - உம்பர் உலகம்; ஆயம் - மகளிர் கூட்டம்; நசைவர்க்கு - நச்சியோர்க்கு; ஈகை - வண்மை; மணிவரை - நீலமலை)

இந்தப் பாடலைச் சற்று மேலோட்டமாய் விளக்குதல் இன்றியமையாததாகின்றது. இப்பாடலில் அழல்சேர் குட்டம் என்பது கார்த்திகை நாள். "அக்கினியை அதிதேவதையாய் உடைமையின், கார்த்திகைக்கு அழல் என்பது பெயராயிற்று. ஆடு முதல் மீன் (மேடம் முதல் மீனம்) இறுதியாய் உள்ளவை பன்னிரண்டு இராசி. அசுவினி முதல் இரேவதி ஈறாயுள்ள நாள் (நட்சத்திரம்) இருபத்தேழு. இந்த இருபத்தேழு நட்சத்திரங் களையும் இராசி பன்னிரண்டற்கும் வகுத்து அளித்தால் முதல் இரண்டே கால் (அசுவினி, பரணி, கார்த்திகை முதல் கால்பகுதி) நட்சத்திரம் ஆடாகிய மேடத்திற்கு உரியதாகின்றது. ஆதலின், கார்த்திகையின் முதல் கால் பகுதியை 'ஆடியல் அழல் குட்டம்' என்றார், கவிஞர். அனுடம் என்பது ஆறு மீன்களின் தொகுதி. அது வளைந்து பனைமரம் போல் அமைந்திருத்தலின் 'முடப்பனை' என்று அதனைக் குறித்தார். வேர் முதலா - அடியின் வெள்ளி; அஃதாவது, முதல் நாண்மீன். உயரழுவம் என்பது முதற்பதினைந்து நாள். தலைநாண்மீன் -

---

13 புறம் - 229

உத்தரம். நிலை நாண்மீன் - எட்டாம் மீன்; "உச்சிமீனுக்கு முன் எட்டாவது அத்தமித்தலும் பின் எட்டாவது மீன் உதித்தலும் இயல்பு", 'உச்சிமீனுக்கு எட்டாம் மீன் உதயமீன்' என்று சொல்லுவர். தொன்னாண்மீன் - எட்டாம் மீனாகிய மிருக சீரிடம். 'பாசி' என்பது கிழக்குத் திசையையும் 'ஊசி' என்பது வடக்குத்திசையையும் குறிக்கின்றன. "பங்குனித்திங்களில் நட்சத்திரம் வீழின் இராசபீடை" என்பது மக்கள் நம்பிக்கை. "ஆடுகயல் தேள்தனு சிங்கத் தெழுமீன் வீழுமேல் அரசழிவாம்" என்று மற்றொரு நம்பிக்கை. கயமாகிய குளம் என்றது கயக்குளம் என்பதாகும். அஃதாவது, புனர்பூசம். இது குளம் போலும் வடிவையுடையது. இதுபற்றியே பிங்கலந்தை (நிகண்டு)யும் "அதிதிநாள் கழையா மண்மேரி, புனர்தங் கரும்பிவை புனர்பூச மாகும்" என்று கூறியுள்ளது.

இதுகாறும் கூறியவை சோதிடக் கலையின் அடிப்படையில் தான். இதன் வளர்ச்சிபற்றிச் சிறிது கூறுவேன்: பண்டைக் காலத்தில் பூமியைச் சூரியன் சுற்றுவதாய் நம்பிக்கை இருந்து வந்தது. அறிவியல் வரலாற்றாலும் **கலிலியோ** என்ற அறிவியல் அறிஞரும் இக்கருத்தைக் கொண்டிருந்தார் என்பது அறியக் கிடக்கின்றது.

சூரியன் பூமியைச் சுற்றும் பாதையை இராசி மண்டலம் என்று வழங்குவர். சோதிடர் சதுரமாய்க் கட்டம் அமைத்து, அதில் நான்கு பக்கங்களிலும் அடியிற்கண்டவாறு நான்கு வீடுகள் அமைப்பர்.

| | | | |
|---|---|---|---|
| **மீனம்** | **மேடம்** | **இடபம்** | **மிதுனம்** |
| **கும்பம்** | **இராசி** | | **கடகம்** |
| **மகரம்** | | | **சிம்மம்** |
| **தனுசு** | **விருச்சிகம்** | **துலாம்** | **கன்னி** |

**சுற்று வழி வட்டமாய் இருப்பதால் அதனை வட்டமாய் அமைத்து, அதனைப் பன்னிரண்டு பகுதிகளாய்ப் பிரித்துக் காட்டுவதே முறை. ஒவ்வொரு பகுதியும் $30^{\circ}$ அமைந்த வட்டக்**

கோணப்பகுதி (Sector) எனப்படும். இந்தப் பகுதியில் 30° க்கு நேராயுள்ள வில் (Arc) பகுதி சூரியன் செல்லும் பாதையாகும். இதனைக் கடக்க ஒரு மாதம் ஆகிறது. பன்னிரண்டு பகுதிகளையும் கடக்க ஓராண்டு காலமாகின்றது. இந்த அடிப்படையில் சித்திரை மாதத்தில் சூரியன் மேடத்தில் இருப்பார்; பங்குனி மாதத்தில் அவர் மீனத்தில் இருப்பார். ஒவ்வொரு கோளும் (திங்கள், செவ்வாய், புதன் முதலியவை)[14] பூமியைச் சுற்றி வர வேறு வேறு காலங்கள் ஆகும். சூரியன் பூமியைச் சுற்றி வர ஓராண்டு காலம் ஆவதைப் போலச் சனி ஒரு சுற்று சுற்றி முடிக்க முப்பது ஆண்டு காலம் ஆகும். ஆகவே சனி ஒவ்வொரு வீட்டிலும் இரண்டரை ஆண்டு இருப்பார். ஒருவர் பிறக்கும்போது சூரியன் இருக்கும் இடம் ஜன்ம லக்னம் ஆகும். சந்திரன் இருக்கும் வீடு இராசி லக்னம் (கோசார முறையில்) எனப்படும். இராசி லக்னத்திற்கு எட்டாம் வீட்டில் சனி இருப்பின் அஃது அஷ்டமத்துச்சனி பிடித்ததாய்ச் சொல்லுவர். இஃது இரண்டரை ஆண்டு காலமாகும். இராசிலக்னத்திற்கு முன்வீட்டிலும், இராசிலக்னத்திலும், இராசி லக்னத்திற்குப் பின்வீட்டிலும் சனி இருக்கும் காலம் ஏழரையாட்டைச் சனி என்று வழங்குவர். நளனுக்குப் பிடித்தது ஏழரையாட்டுச்சனி என்பது கதை. இவற்றிற்கெல்லாம் சோதிடக் கலையின் அடிப்படையில் பலன் சொல்லப்படும்.

கலிலியோவிற்குப் பின் வந்த **கோப்பர்னிகஸ்** என்ற அறிவியலறிஞர், பூமி சூரியனைச் சுற்றுகின்றது என்று மெய்ப்பித்தார். ஆகவே, பூமி செல்லும் பாதையே இராசி மண்டலமாகிறது. பூமி சூரியனைச் சுற்றிவர ஓராண்டு காலம் ஆகின்றது. பூமி சூரியனைச் சுற்றிவரும்போது பூமியைச் சுற்றி வரும் சந்திரனும் சேர்ந்து சூரியனைச் சுற்றுகின்றது. பூமி சூரியனைச் சுற்றி வரும் ஓராண்டு காலத்தில் சந்திரன் பூமியைப் பன்னிரண்டு முறை சுற்றுகின்றது. சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றி வரும் காலத்தை **மாதம்** என்று வழங்குகின்றோம். பூமி தன்னைத் தானேயும் சுற்றிக்கொண்டுள்ளது. இவ்வாறு சுற்றும் காலம் ஒரு **நாள்** ஆகும். பூமி சூரியனை நோக்கியிருக்கும் பகுதி **பகல்;** நோக்காதிருக்கும் பகுதி **இரவு.**

---

14. கோள்களின் பெயரையே நாள்களின் பெயராய் அமைத்தனர்.

பூமியும் சந்திரனும் சேர்ந்து சூரியனைச் சுற்றுவதையும் சந்திரன் பூமியைச் சுற்றுவதையும் நான் ஓர் உவமையால் விளக்குவது வழக்கம். பெண் குழந்தையைப் பெற்றெடுத்த தாய் ஒருத்தி, நடக்கும் நிலையில் உள்ள தன் மகளுடன் ஓர் அரச மரத்துப் பிள்ளையாரைச் சுற்றி வருவதை உவமையாய்க் கொண்டு விளக்குவேன். அரசமரத்துப் பிள்ளையார், சூரியன்; பெண்மணி, பூமி; தாயின் முன்றானையைப் பிடித்துக்கொண்டு தாயைச் சுற்றி வரும் மகள் சந்திரன். இப்போது விளக்கம் முழுமையடைகின்றது அன்றோ?

நாள் என்ற கருத்தை வள்ளுவப்பெருந்தகை சுட்டுவதையும் ஈண்டுக் குறிப்பிட்டுச் செல்வேன்.

"நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்." 15

(குறள் - 334)

என்பது வள்ளுவம். இதற்குப் பரிமேலழகர் கூறும் உரை அற்புதமானது.

"காலம் என்னும் அருவப்பொருள் உலகியல் நடத்தற் பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளால் கூறுபட்டதாய் வழங்கப்படுவதல்லது தானாய்க் கூறுபடாமையின் 'நாளென ஒன்றுபோல்' என்றும், அது தன்னை 'வாள்' என்று உணரமாட்டாதார் 'தமக்குப் பொழுது போகாநின்றது' என்று இன்புறுமாறு நாளாய் மயக்கலின் 'காட்டி' என்றும், இடைவிடாது ஈர்தலான் 'வாளின் வாயது' என்றும், அஃது ஈர்கின்றமையை உணர்வார் அரியராகலின் 'உணர்வார்ப் பெறின்' என்றும் கூறினார். உயிரென்னும் சாதி ஒருமைப்பெயர் ஈண்டு உடம்பின்மேல் நின்றது, ஈரப்படுவது அதுவேயாகலின். வாள் என்பது ஆகுபெயர். இனி இதனை நாள் என்பது ஒரு பொருள் போலத் தோன்றி உயிரை ஈர்வதொரு வாளாம் என்று உரைப்பாரும் உளர் (மணக்குடவர்). 'என' என்பது பெயரன்றி இடைச்சொல் ஆகலானும், 'ஒன்று போல் காட்டி' என்பதற்கு ஒருபொருட்சிறப்பு இன்மையானும், 'அது' என்பது

15 - நிலையாமை - 4

குற்றியலுகரம் அன்மையானும் அஃது உரையன்மை அறிக" என்பது மறுப்பு உரை.

காலம் என்பது அருவமாய் நிற்கும் ஒரே திரவியம். அதனை அளப்பதற்கு ஒரு கருவியும் இல்லை. ஆதித்தன் முதலிய கருவிகளால் கூறுபட்டதாய்க் கொள்ளப்படுவது ஒருவித மயக்க நிலையேயாகும். படிப்பறியாத பால்காரி, சாணியால் கோடிட்டு 'வழக்கமாய் ஊற்றி வழங்கும் ஓர் அளவிற்கு அறிகுறியாய் நிற்பது போல' என்று சொல்லி வைக்கலாம். 'ஒரு வித மயக்கம்' என்பதை இன்னொரு செயலாலும் விளக்கலாம். எழும்பூர் நிலையத்திலிருந்து பகல் பன்னிரண்டரை மணிக்குப் புறப்படும் 'வைகை' என்னும் விரைவு வண்டியில் பயணம் செய்யும் ஒருவர் பத்தரை மணிக்கே நிலையத்திற்கு வந்துவிட்டால் அவருக்கு இரண்டு மணி நேரம் கழிவது 'காலம் மெதுவாய்ப் போகிறது போல்' தோன்றும். அவரே வண்டி கிளம்புவதற்குப் பத்து மணித்துளிக்கு முன் வந்துகொண்டிருந்தால் 'எங்கு வண்டி போய்விடுமோ?' என்று மனம் பதறும்போது இந்தக் குறுகிய காலமாகிய 'பத்து மணித்துளிகள்' என்னும் காலம் விரைவாய் ஓடுவதுபோல் தோற்றமளிக்கும். 'மெதுவாய்ப் போவதும்' 'விரைவாய் ஓடுவதும்' மனத்தில் எழும் 'மாயத்தோற்றங்களே' என்பதை ஆழ்ந்து உணர வேண்டியதொன்றாகும்.

**அகிலம் :** வெட்டவெளியும் அதனுள் அடங்கியிருக்கும் அண்டங்கள் யாவும் சேர்ந்ததுதான் **அகிலம்** (Universe) என்பது. கோடிக்கணக்கான விண்மீன் மண்டலங்களும், அவற்றினின்றும் விடுபெற்ற தனித்தனி மண்டலங்களும் வால்மீன்களும் (Comets) விண்கற்களும் (Meteorites) எண்ணற்றவை கதிரவன் மண்டலத்தைச் சுற்றிச் சுழன்றுகொண்டுள்ளன. இவற்றின் பிறப்பு, மூப்பு, சாக்காடு இவைபற்றிய செய்திகளை இன்றைய வான நூல் வல்லுநர்கள் அறிந்து வெளியிட்டுள்ளனர். மணிவாசகப் பெருமான் இந்த அகிலத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளதை ஈண்டுச் சிந்திக்கலாம்.

***"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்***
***அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி***
***ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்***
***நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"[16]***

***(பிறக்கம் - பெருக்கம்; எழில் - எழுச்சி)***

16. திருவா - திருவண்டப் பகுதி - அடி 1-4

என்பது அப்பெருமானின் திருவாக்கு. இதனை விளக்குவேன். உருண்டு திரண்டு நெருப்புக்கோளமாய் (வாயு நிலையில்) இருப்பது சூரியன். அதனிடமிருந்து சிதறி வந்து குளிர்ந்து இறுகி இருப்பது இந்த நிலவுலகம். அதே விதத்தில், சுத்த சைதன்யமாயிருப்பது **சிவம்.** அந்தச் சிவனிடத்திலிருந்து சடசக்தி வந்துள்ளது. சடசக்தி ஐம்பெரும் பூதங்களாலாகியது. அவற்றிலிருந்து (அந்தப் பூதங்களிலிருந்து) எண்ணிறந்த அண்டங்கள் தோன்றின. அவை யாவும் சிவபெருமானுக்கு உடலாய் அமைந்துள்ளன.[17] ஆதலால், அவற்றைத் **'திரு அண்டம்'** என வழங்குதல் சிறப்பு. அண்டம் என்ற சொல் உருண்டை அல்லது முட்டை வடிவில் இருப்பது எனப் பொருள்படுகின்றது. இந்தப் பேரண்டம் எண்ணிறந்த கோளங் களையுடையது. அந்தக் கோளங்களின் தன்மைகளை முற்றிலும் தெரிந்துகொள்ள இயலாது. ஆராய்ந்து நோக்கினால் அவற்றின் அழகும் சீரமைப்பும் கண்டு வியப்படைவதற்கு உரியவை களாயுள்ளன. ஒவ்வொரு கோளத்திலும் ஒரு தனியழகு பொலிகின்றது என்பதை விளக்கிச் சொல்லுமிடத்துக் கோடிக் கணக்கில் அவை அகண்டாகாரத்தில் விரிந்து பெருகுகின்றன.

இந்த அண்ட கோளக் காட்சி நமக்குப் புலப்படுவதை ஓர் உவமையால் விளக்குவர், வாதவூரடிகள்.

*"இல்நுழை கதிரின் துன்அணுப் புரைய*
*சிறிய ஆகப் பெரியோன் தெரியின்" 18*

என்பது அவர் விளக்கம். இதனை விளக்க வேண்டியது இன்றியமையாததாகின்றது. ஒரு சிறிய துவாரத்தில் வீட்டுக்குள் வருகின்ற கதிரவன் ஒளியில் அணுப்போன்ற துகள்கள் - தூசிகள் - அலைந்து திரிவன நம் ஊனக் கண்ணுக்கும் தென்படு கின்றன. அது போலவே, கோளங்கள் வானத்தில் மிதந்து கொண்டுள்ளன. சிறியதாகிய அணுவுக்கும் பெரியதாகிய அண்டத்திற்கும் அமைப்பு ஒன்றேயாகும். ஆராய்ந்து

---

17. வைணவ தத்துவத்தின் சரீர - சரீரி பாவனையை இதனுடன் ஒப்பிட்டு உணரலாம்.

18. திருவா - திருவண்டப்பகுதி, அடி 5-6.

பார்ப்பவர்க்கு இவ்வுண்மை தெளிவாகும். நாளைய பொழிவில் இதனை விளக்குவேன்.

இல்லத்தினுள் காற்றில் மிதந்துகொண்டு இருக்கின்ற தூசிகள் போன்றவை பூமி, சந்திரன், சூரியன் முதலிய கோளங்கள். தூசிகள் நமக்கு அற்பமானவையாய்த் தோன்றுவன போன்று இறைவனுக்கு அண்ட கோளங்கள் அற்பமானவைகளாகும். இறைவனைப்பற்றிய பேருணர்வு நமக்கு வரும்போது நமது உடலைப்பற்றியோ, நிலவுலகைப்பற்றியோ கவலையொன்றும் நமக்கு உண்டாகாது.

இறைவனது சொரூபத்தின் பாங்குகளையும் குறிப்பிடு கின்றார், மணிவாசகப் பெருமான்.

*"வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்*
*தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய*
*மாப்பேர் ஊழியும் நீக்கமும் நிலையும்"* [19]

(வேதியன் தொகை - நான்முகர்களின் கூட்டம்; மாலவன் மிகுதி - விட்டுணுவின் சேஷம்; தோற்றம் - படைப்பு; சிறப்பு - காப்பு; ஈறு - அழித்தல்; மாப்பேர் - மகாப்பிரளயம்)

எண்ணிறந்த நான்முகர்களும் அவர்கட்கெல்லாம் சேஷமாய் இருக்கும் திருமாலும், படைப்பு காப்பு அழிவு ஆகிய முத்தொழில்களும் மகாப்பிரளயமும் அதன் இருப்பும் முடிவும் ஆகிய இவை யாவும் இறைவனுடைய பாங்குகளாகும்.

சீவர்களுள் தலையாயவன் படைத்தற்கடவுளாகிய நான்முகன். ஒரு நான்முகன் கிரமமுக்தியடையும் பொழுது மகாப்பிரளயம் வருகின்றது. இங்ஙனம் நான்முகக் கடவுளர்கள் கணக்கற்ற பேர் தோன்றவும் ஒடுங்கவும் செய்கின்றனர். நான்முகர்கட்கு ஆதிமூலமாய் இருப்பவர், திருமால். ஆதலால், அவர் சேஷன் அல்லது எஞ்சியிருப்பவர் எனப்படுகின்றார். தோன்றாதும் மறையாதும் இருப்பதால் சொரூபத்தில் சங்கரனும் நாராயணனும் ஒன்றேயாகும். மகாப்பிரளயம் உண்டாதலும் அது நீங்குதலும் எல்லாம் ஈசனுடைய "அலகிலா விளையாட்டுகளாம்."

19. திருவாச - திருவண்டப்பகுதி, அடி 7-9.

இவ்விடத்தில் 'நாராயாண' உபநிடதத்தின் மந்திரத்தையும் சிந்திக்கலாம்.

"நாராயணன் பரப்பிரம்ம தத்துவமாகின்றான். முழுமுதற் பொருள் நாராயணன். பரஞ்சோதியாயிருப்பவன் நாராயணன். பரமாத்மாவாய் இருப்பவன் நாராயணன்." 20

சங்கரனும் நாராயணனும் ஒன்றே என்பது அருமறையின் அமுதவாக்கு. அருமறையில் மெய்ப்பொருளுக்குக் கொடுத்துள்ள பல பெயர்களுள் **'நாராயணன்'** என்பதும் ஒன்றாகும். நாரா - தன்னிடத்திலிருந்து தோன்றி வந்துள்ள பஞ்சபூதங்களுக்கும் அவற்றின் காரியமாகிய சகத்துக்கும்; அயனன் - தங்கும் இடமாய் இருப்பவன். நாரா + அயனன் - நாராயணன் என்பது அப்பெயரின் பொருளாகும். இந்தத் தத்துவத்தைப் புராணம் உருவகப்படுத்தி இயம்புகின்றது. நாராயணனுடைய உந்திக் கமலத்தினின்று நான்முகன் தோன்றி வந்துள்ளான் என்பது புராண வரலாறு.

"மெய்ப்பொருள்தான் வேத
முதற்பொருள்தான், விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாராயணன்" 21

என்ற திருமழிசையாழ்வாரின் கருத்தையும் ஒப்பு நோக்கி உணரலாம். இந்தப் புராண வரலாற்றை மங்கை மன்னன் "உந்திமேல் நான்முகனைப் படைத்தான், உலகு உண்டவன்"22 என்று குறிப்பிடுவார்.

தொடர்ந்து மணிவாசகர் கூறுவார் :

"படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள் காப்பவை
கரப்போன், கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்."23

---

20. மகா நாராயணோபநிடதம் 24-13 : 4
21. நான். திருவந். 13
22. நான். திருவந். 13
23. திருவா - திருவண்டப்பகுதிகள் - அடி 13-16

அனைத்தையும் படைப்பவனாகிய நான்முகன் தொல்லோன் - பழையோன் - ஆகின்றான்; படைக்கப்பட்டவற்றைக் காப்பவன், திருமால்; காக்கப்பெற்றவற்றைத் துடைப்பவன் உருத்திரன். இம்முத்தொழில்களில் கருத்தைச் செலுத்தாது உயர்ந்த நிலையில் இருப்பவன், பரமசிவம்.

மும்மூர்த்திகளும் மூன்று செயல்களைச் செய்கின்ற பொழுது அவர்கள் சீவர்களாகின்றனர். ஏனெனில், செயல் சீவகர்கட்கே உரியதாகின்றது. மேலும், மனத்தோடு கூடியிருப்பவர்கள் சீவர்கள். மனதற்ற நிலையில் சீவர்களது சீவபோதம் ஒழிகின்றது. சீவபோதத்தின் கழிவை முன்னிட்டே மும்மூர்த்தி களுக்கு அழிவு என்று சொல்லப்பெறுகின்றது. ஆனால், அம்மும்மூர்த்திகளிடமிருக்கின்ற ஆன்ம சைதன்யமோ அழிவ தில்லை. ஆன்ம சைதன்யமே சுத்த சைதன்யம். அது **"பரம சிவம்"** எனப்படுகின்றது. அதுவே கருதாக் கருத்துடைக் கடவுள்.

இவ்விடத்தில் தாயுமான[24] அடிகளின் 'பொருள் வணக்கம்' என்ற தலைப்பில் உள்ள பன்னிரண்டு பாடல்களுள் ஒன்றனை ஈண்டு சிந்தித்தல் பொருத்தமாகின்றது

"அகரஉயிர் எழுத்தனைத்தும் ஆகி, வேறாய்
அமர்ந்ததுஎன அகிலாண்டம் அனைத்தும் ஆகிப்
பகர்வனஎல் லாம்ஆகி, அல்லது ஆகிப்
பரம்ஆகிச் சொல்லரிய பான்மை ஆகித்
துகளறுசங் கற்பவிகற் பங்கள் எல்லாம்
தோயாத அறிவுஆகிச் சுத்தம் ஆகி
நிகர்இல்பசு பதியான பெரிருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்"[12]

மேலும், அப்பர் பெருமானின்,

24. தா.பா : 3 பொருள் வணக்கம்.

*"நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்*
*ஆறு கோடி நாராயணர் அங்ஙனே*
*ஏறுகங் கைமணல் எண்ணில் இந்திரர்*
*ஈறுஇல் லாதவன் ஈசன் ஒருவனே."* 25

என்ற திருப்பாடலும் நினைவிற்கு வருகின்றது.

இவ்வுலகிலுள்ள 92 தனிமங்களின் அணுக்களும் தம்மொடுதாமும் பிறிதுமாய்ச் சேர்ந்து அணுத்திரளைகள் ஆகிய திரட்சியே அண்டங்கள் என்பது அறிவியலார் ஆய்ந்து கண்ட உண்மையாகும். இந்த உண்மையினையே கவிஞர் பரஞ்சோதியார்,

*"அண்டங்கள் எல்லாம் அணுவாக*
*அணுக்கள் எல்லாம்*
*அண்டங்க ளாகப் பெரிதாய்ச்*
*சிறிதாயி னானும்*
*அண்டங்கள் உள்ளும் புறம்பும்*
*கரியாயி னானும்*
*அண்டங்கள் ஈன்றாள் துணைஎன்பர்*
*அறிந்த நல்லோர்."* 26

என்று அநுபவ இயலாய்க் கூறியுள்ளமையைக் கண்டு மகிழ்கின்றோம்.

மணிவாசகப்பெருமான் இந்த அண்டங்கள் 'நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன' என்று கூறியுள்ள கருத்தை மகாக்கவி பாரதியார் வேறொரு விதமாய்க் கூறுவார்:

***"நக்கபி ரான்அருளால் - இங்கு***
***நடைபெறும் உலகங்கள் கணக்கிலவாம்***
***தொக்கன அண்டங்கள் - வளர்***
***தொகைபல கோடிபல் கோடிகளாம்!***
***இக்கணத் தெவரறிவார் - புவி***
***எத்தனை யுளதென்ப தியாரறிவார்!***
***நக்க பிரான்அறிவான்; - மற்று***
***நானறி யேன்பிற நரரறியார்;***

---

25. தேவாரம் 5-100 ; 3
26 திருவிளையாடல் புராணம் - பாயிரம் - 6

*தொக்கபேர் அண்டங்கள் - கொண்ட*
*தொகைக்கெல்லை இல்லையென்று சொல்லுகின்ற*
*தக்கபல் சாத்திரங்கள் - ஒளி*
*தருகின்ற வானமோர் கடல்போலாம்;*
*அக்கடல் அதனுக்கே - எங்கும்*
*அக்கரை இக்கரை யொன்றிலவாம்.*

*இக்கடல் அதனகத்தே - அங்கங்*
*கிடையிடைத் தோன்றும்புன் குமிழிகள்போல்*
*தொக்கன உலகங்கள் - திசைத்*
*தூவெளி யதனிடை விரைந்தோடும்;*
*மிக்கதோர் வியப்புடைத்தாம் - இந்த*
*வியன்பெரு வையத்தின் காட்சிகண்டீர்."*[27]

என்று வியன்பெரு வையத்தின் காட்சியைக் காட்டுவார். இந்த இருவரின் கருத்துகளும் ஒருபுடை யொத்துள்ளமையைக் கண்டு மகிழலாம்.

பாரதியாரின் மற்றொரு பாடல், கண்ணன் காண்டீபனுக்குக் காட்டிய விசுவரூப தரிசனம் போல், பரவெளியில் உள்ள அண்டகோளங்களை ஒருங்கே காட்டுகின்றது. இந்த அண்ட கோளங்களின் அமைப்பை,

*"விண்டு ரைக்க அறிய அரியதாய்*
*விரிந்த வான வெளியென நின்றனை;*
*அண்ட கோடிகள் வானில் அமைத்தனை;*
*அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை;*
*மண்ட லத்தை அணுஅணு ஆக்கினால்*
*வருவ தெத்தனை அத்தனை யோசனை*
*கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை;*
*கோல மே! நினைக் காளியென் றேத்துவேன்"* 28

என்று விளக்குவதுடன் அவற்றிடையே யுள்ள தொலைவு களையும் கற்பனை மூலம் கணக்கிட்டுக் காட்டுவர். ஒரு மண்ட லத்தைப் பொடியாக்கி, அந்தப் பொடிகளையும் அணுக்களாக்கி னால் வரும் தொகை எவ்வளவோ அவ்வளவு தூரத்தில்

27. பார.கவி.தோத்.பா. கோமதியின் மகிமை - 5, 6, 7
28. பார.கவி.தோத்.பா. - மஹா சக்தி வாழ்த்து

பல்வேறு அண்டங்களை இயங்கச்செய்கின்றார். இத்தகைய கோலத்தை அமைத்த இறைவனைக் **'காளிதேவியாகக்'** காண்கின்றார். **'சக்திதாசன்'** என்றும் தம்மைக் கருதிக்கொள்ளுகின்றார், கவிஞர். புறமுக ஆற்றல் (Centrifugal force) என்ற இறைவனது ஆணையால் இக்கோள்கள் - அண்டங்கள் - வழிவிலகாமல் சுற்றி வந்துகொண்டுள்ளன. ஒவ்வொரு கோள்களுக்கும் இடையிலும் பல்லாயிரக்கணக்கான மைல் இடைவெளிகள் உள்ளன. இந்த இடைவெளியில்தான் சில சமயம் **'வால்மீன்**களையும் (Comets), **வீழ்கொள்ளி** அல்லது **எரிமீன்**களையும் (Meteors) காண்கின்றோம்.

இங்ஙனம் அண்டங்கள் விண்வெளியில் வெவ்வேறு வேகத்தில் சுழன்றுகொண்டும், ஒன்றையொன்று சுற்றிக்கொண்டும் உள்ள உண்மையை ஆண்டவனின், 'அலகிலா விளையாட்டாய்' கொள்வர், திரிகூட இராசப்பக் கவிராயர். சாட்டைத் துணையின்றியே இத்தனை அண்டங்களையும் பம்பரம்போல் ஆட்டி வைக்கின்றான் இறைவன் என்று காட்டுவர், அக்கவிஞர்.

> *"சாட்டிநிற்கும் அண்டமெலாம்*
> *சாட்டையிலாப் பம்பரம்போல்*
> *ஆட்டுவிக்கும் குற்றாலத்து*
> *அண்ணலார்."[29]*

என்று அழகாய்க் குறிப்பிடுவதைக் கண்டு மகிழலாம்.

பேராசிரியர் ஐன்ஸ்டைன் இந்த அகிலத்தின் வெளி வளைந்துள்ளது என்றும், அது விரிந்துகொண்டே போகின்றது என்றும் கூறுவார். இஃது ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயம் மிகப்பெரியது என்றும், அதனுள்தான் ஏனைய பூதங்கள் அடங்கியுள்ளன என்றும் பண்டையோர் கூறும் கருத்துக்கு இவ்விளக்கம் ஒருபுடையொத்துள்ளது. ஓர் இரப்பர் பலூன் மேல் பல புள்ளிகளை வரைந்து, அப்பலூனை ஊதினால் அது பெரிதாக ஆகஆக அப்புள்ளிகளின் இடையிட்ட தூரமும் அகன்றுவிடுகின்றது. இதைப்போல், விண்வெளியும் விண்மீன் மண்டலங்களை ஏந்திக்கொண்டு அகன்றுகொண்டே போகின்றது என்பது இன்றைய அறிவியலார் கண்ட முடிவு. இதைப் போன்ற பலவான நூற்கருத்துகளைத் தமிழ் இலக்கியங்களில் காணலாம்.

---

29. குற்றாலக் குறவஞ்சி - 107

ஊழியின் முடிவில் இந்த அகிலம் முழுவதும் அணுத்தத்துவமாய் மாறும் (Involution) என்பதையும், மீண்டும் படைப்புக் காலத்தில் அஃது அண்டங்களாய் வடிவெடுக்கும் என்பதையும் மெய்யுணர்வு பெற்ற தாயுமான அடிகள்,

"செகத்தையெல்லாம் அணுவளவும்
சிதறா வண்ணம்
சேர்த்துஅணுவில் வைப்பை;அணுத்
திரளை எல்லாம்
மகத்துவமாய்ப் பிரம்மாண்டம்
ஆகச் செய்யும்
வல்லவா நீநினைத்த
வாறே யெல்லாம்." 30

என்று இரத்தினச் சுருக்கமாய் விளக்குவர்.

இந்த உண்மையினையே இன்றைய அறிவியலறிஞர்கள் புலன் உணர்வைப் பன்மடங்கு பெருக்கிக்காட்டும் கருவிகளைக் கொண்டு விளக்குகின்றனர். நாம் காணும் பொருள்கள் யாவும் அணுத்திரளைகளேயன்றி வேறொன்றும் அன்று என்பதை விளங்க உரைத்தனர். இத்னையே திருச்சிற்றம்பலத்தில் ஆடும் ஆனந்தக்கூத்து விளக்குகின்றது. அணுவினுள்ளும் இந்த ஆனந்தக் கூத்தினையே நாம் காண்கின்றோம்.

இந்த ஆனந்தத் திருநடனத்தை அழகியதோர் உவமையாய் வைத்துக் கதிரவன் உதயம் செய்வதைக் கம்பன் காட்டுவான். கதையில் வரும் இடத்தைச் சுட்டி விளக்கினால்தான் இதில் தெளிவு பிறக்கும்; சுவையில் ஆழ்ந்து அநுபவிக்கவும் முடியும். விசுவாமித்திரனின் வேள்வி முடிகின்றது. இராமனுக்கு முகமன் கூறிய பின் மூவரும்,

"விரியும் வார்புனல் மருதஞ்சூழ்
மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டும்நாம்
எழுகென்று போனார்." 31

30. தாயு. பாடல் : 40 தந்தைதாய் - 6
31. பால. வேள்விப் - 59

என்று கவிஞன் கூறியவ்ாறு, சனகனின் வேள்வியைக் காண மிதிலை நோக்கிப் பயணமாகின்றனர். மிதிலை நகர்க் காட்சிகளையெல்லாம் அநுபவித்துக்கொண்டு மிதிலை நகர் வீதியில் வரும்போது இராமனும் சீதாப்பிராட்டியும் சாளரத்தின் வழியாய் ஒருவரையொருவர் நோக்கியதை,

> "அண்ணலும் நோக்கினான்;
> அவளும் நோக்கினாள்"[32]

என்று காட்டி, அவர் காதல் கொண்டதை,

> "பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்து
> ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
> வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
> இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்."[33]

என்று காட்டுவான்.

> "மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
> ஒருங்கிய இரண்டுடல் உயிரொன்று ஆயினார்
> கருங்கடல் பள்ளியில் கல்வி நீங்கிப்போய்ப்
> பிரிந்தவர் கூடினால் பேச வேண்டுமோ?"[34]

என்று விளக்கி நம்மை வியப்பில் ஆழ்த்துவான்.

அன்றிரவு இருவருக்கும் உறக்கம் வரவில்லை. காதல் நோய் அவர்களை வாட்டுகின்றது. இதனைக் கவிஞன் அற்புதமாய் வருணிக்கின்றான் பொழுது விடிகின்றது. கதிரவன் தோன்றுகின்றான். இதனை,

> "தஷையுமலர்த் தார்அண்ணல் இவ்வண்ணம்
> மயல்உழந்து தளரும் எல்லை
> சிதையுமனத்து இடருடைய செங்கமலம்
> முகம்மலரச் செய்ய வெய்யோன்

---

32. பால. மிதிலைக் - 35
33. பால. மிதிலைக் - 37
34. பால. மிதிலைக் - 38

*புதைஇருளின் எழுகின்ற புகர்முகயா*
*னையின்உரிவைப் போர்வை போர்த்த*
*உதயகிரி எனும்கடவுள் நுதல்கிழித்த*
*விழியேபோல் உதயம் செய்தான்."35*

என்று காட்டுவான். "யானைத் தோலாகிய போர்வையைத் தரித்துள்ள உதய பர்வதமாகிய உருத்திர மூர்த்தியினது நெற்றியினின்று திறந்து தோன்றின. 'நெருப்புக்கண்போல் உதயம் செய்தான்" என்கின்றான், கவிஞன்.

கதிர்கள் விரிவதைத் திருநடனம் புரியும் அம்பலவன் சடை விரிந்தாடுவதனோடு ஒப்பிடுகின்றான் :

*"எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்*
*இசைபாட உலகம் ஏத்த*
*விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்*
*கரம்குவிப்ப வேலை என்னும்*
*மண்ணுமணி முழவுஅதிர வானரங்கில்*
*நடம்புரிவான் இரவி யான*
*கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரித்தால்*
*எனவிரிந்த கதிர்கள் எல்லாம்."36*

"அளவிடுதற்கு அரிய அருமறைகளை ஓதி முழக்கம் செய்கின்றனர், அந்தணர்கள். கின்னரர்கள் இசை பாடுகின்றனர்; தேவர்களும் முனிவர்களும் கைகூப்பி வணங்குகின்றனர். உலகோர் புகழ்கின்றனர்; கடல் என்னும் அழகிய மத்தளம் ஒலிக்கின்றது. இந்தச் சூழ்நிலையில் ஆகாயமாகிய நடன அரங்கில் நடனம் செய்கின்றான், ஒளியையுடைய கதிரவன். தில்லையில் திருநடனம் புரியும் திருக்கூத்தனது பொன்னிற மான சடை விரிந்து செங்குத்தாய் நிற்றல்போல் "பகலவனின் செந்நிறமான கதிர்கள் விரிந்து பரவின" என்கின்றான், கவிஞன். சிவபெருமான் திருநடனம் புரியும் இடம், திருச்சிற்றம்பலம். சூரியன் நடம் புரியும் இடம், அம்பரம் (ஆகாயம்). சூரியன் நடம் புரிவதாய்க் கூறியது, அவனது கிரணங்கள் பளபளக்கும் காலத்து அசைவதாய்த் தோன்றுதல் பற்றியதாகும். சூரியன் உலகத்தார் யாவராலும் புகழப்படுவதனைப் 'பலர் புகழ் ஞாயிறு' என்ற திருமுருகாற்றுப்படை அடியினாலும் அறியலாம்.

---

35. பால. மிதிலைக் - 150

36. பால. மிதிலைக் - 153

மணிவாசகப்பெருமான் விஞ்ஞானத்தையும் மெய்ஞ்ஞானத்தையும்,

*"பூதங்கள் ஐந்தாகிப்*
*புலனாகிப் பொருளாகிப்*
*பேதங்கள் அனைத்துமாய்ப்*
*பேதமிலாப் பெருமையனைக்*
*கேதங்கள் கெடுத்தாண்ட*
*கிளரொளியை மரகதத்தை*
*வேதங்கள் தொழுதேத்தும்*
*விளங்குதில்லை கண்டேனே" 37*

(புலனாகி - தன்மாத்திரைகள் ஐந்துமாகி; கேதங்கள் - துன்பங்கள்)

என்ற ஒரு பாடலில் காண்கின்றார்.

இந்தத் திருக்கூத்தைச் சேக்கிழார் அடிகளும்,

*"கற்பனை கடந்த சோதி*
*கருணையே உருவ மாகி*
*அற்புதக் கோலம் நீடி*
*அருமறைச் சிரத்தின் மேலாம்*
*சிற்பர வியோக மாகும்*
*திருச்சிற்றம் பலத்துள் நின்று*
*பொற்புடன் நடஞ்செய் கின்ற*
*பூங்கழல் போற்றி போற்றி."38*

என்று கண்டு வழிபடுகின்றார்.

கம்பராமாயணத்தில் ஊர்தேடு படலத்தில் ஒரு பாடல்; மதிலின் ஒளியை அநுமன் கொண்டாடுவதாய் அமைந்துள்ளது. இதில் கதிரவன் மகர ரேகைக்குத் தெற்கே செல்லுவதில்லை என்பது மிகச் சமத்காரமாய்க் கூறப்பெற்றுள்ளது.

*"முன்னம் யாவரும் இராவணன்*
*முனியும் என்(று) அஞ்சி*
*பொன்னின் மாநகர் மீச்செலான்*
*கதிர்எனப் புகல்வார்;*

37. திருவாச. கண்டபத்து - 10
38. பெரியபு. தில்லைவாழ் அந்தணர்-2

*கன்னி ஆரையின் ஒளியினில்*
*கண்வழுக்(கு) உறுதல்*
*உன்னி நாடோறும் விலங்கினன்*
*யோதலை உணரார்."39*

(முனியும் - கோபிக்கும்; கதிர் - பகலவன்; ஆரை - மதில்; விலங்கினன் - விலகிச் சென்றான்)

வானநூற்படி கதிரவன் மகர ரேகைக்குத் (Capricorn) தெற்கேயும் கடக ரேகைக்கு (Cancer) வடக்கேயும் நகர்வதில்லை என்பது வானநூல் மெய்ம்மையாகும். இலங்கை மகர ரேகைக்குத் தெற்கே உள்ளது என்பதை நாம் அறிவோம். "மூவுலகையும் ஆண்ட இராவணனது சினத்திற்கு ஆளாக வேண்டும் என்று எண்ணிக் கதிரவன் இலங்கைமேல் வானத்தே சென்று, தனது வெப்பக் கதிர்களை வீசுவதற்கு அஞ்சி என்று மக்கள் நீண்ட காலமாய்ச் சொல்லிவருகின்றனர். இது தவறு; ஆராய்ச்சி இல்லாத கூற்று. இலங்கைமாநகரின் பொன்மயமான மதிலினது ஒளியினால் சூரியனது தேரிலுள்ள குதிரைகளின் கண் கூசுதல்பற்றியே இவ்வாறு விலகிச் செல்லுகின்றான் என்பதுதான் உண்மை" என்று கற்பனைநயம் தோன்றக் கூறியிருப்பது எண்ணி மகிழத் தக்கது. ஒளியினால் கண் கூசிப் பார்வை மழுங்குதல் இயல்பு. இரவு நேரங்களில் நாம் சாலையில் நடையாடும்போது மோட்டார் வாகனங்களின் கண் கூசும் பேரொளி விளக்குகளின் ஒளியை அநுபவித்திருக்கின்றோம். காவல் துறையும் இவ்வித விளக்குகளைத் தவிர்க்க வேண்டும் என்று எச்சரிக்கையும் விடுத்துள்ளதல்லவா?

**பிறிதொரு கோணத்தில் :** பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் அண்டங்களின் படைப்பையும், அவற்றின் அமைப்பையும், அவை விண்வெளியில் சுழலும் அற்புதத்தையும் இன்னொரு கோணத்தில் காண்கின்றார், ஒரு பாடலில். இவர் வைணவர். அரங்கநகர் அப்பன்மீது **'திருவரங்கத்துமாலை'** என்ற ஓர் அற்புதமான பிரபந்தத்தைப் பாடியுள்ளார்: இஃது **'அஷ்டப் பிரபந்தம்'** என்ற எட்டுப் பிரபந்தங்களைக்கொண்ட தொகுப்பு நூலுள் ஒன்று.

39. கம்பரா - சுந்தர. ஊர்தேடு - 21

*"ஞாலத் திகிரி முதுநீர்த் திகிரி*
*நடாத்தும் இந்தக்*
*காலத் திகிரி முதலான யாவும்*
*கடல்க டைந்த*
*நீலத் திகிரி அனையார், அரங்கர்*
*நிறைந்த செங்கைக்*
*கோலத் திகிரி தலைநா ளதனில்*
*கொண்ட கோலங்களே."*40

என்பது பாடல். அற்புதமான சாக்லட்போல் உள்ளது. சாக்லட்டை, அது பொதிந்து வைக்கப்பட்டுள்ள பல்வேறு பளபளக்கும் வண்ணத் தாள்களைக் களைந்து வாயில் போட்டு, உமிழ்நீருடன் கலந்து சுவைக்கும் போதுதான் அதன் சுவையை அநுபவிக்க முடியும். அங்ஙனமே இந்தப் திருப்பாசுரத்தையும் மனத்தில் வைத்து அசை போட்டுக் கரைத்தால்தான் அதன் பொருளை உணர்ந்து அநுபவிக்க முடியும்.

இந்தப் பாடலிலுள்ள **'திகிரிகளை'** முதலில் இன்னவையென இனங்கண்டு அறிந்துகொள்ள வேண்டும். **ஞாலத்திகிரி :** கதிரவனைச் சுற்றி வரும் அண்டங்களும், தன்னைத் தானே சுற்றி இயங்கும் கதிரவனும் பலகோடி மைல்களுக்கு அப்பால் பூமியில் சிறியதோர் இல்லத்தில் - திருவரங்கத்திலுள்ள இல்லத்தில் - வாழும் கவிஞனின் ஊனக் கண்ணுக்கு உருளைகளாய்த் - திகிரிகளாய்த் - தென்படுகின்றன. இப்பேரண்டச் சக்கரந்தான் 'ஞாலத்திகிரி' என்பது. **முதுநீர்த்திகிரி:** ஒவ்வோர் அண்டத்துடன் அவ்வண்டத்திலுள்ள பொருள்களும் உருமாறிச் சுழல்கின்றன. எடுத்துக்காட்டாய், கடல் நீர் - நீராவி - மழை - ஆறு - கடல்நீர் என்று சக்கரம் சுழல்கின்றது. இவ்வாறு **'கடல்நீர்'** சுற்றுவதை 'முதுநீர்த்திகிரி' என்கின்றார் (முதுநீர் - கடல்). இந்தச் சக்கரத்தைப் போலவே இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்ற பருவச்சக்கரங்களும் சுழல்கின்றன. பிறப்பு இறப்பு என்ற சக்கரமும் சுழன்று வருகின்றது. **காலத்திகிரி:** இது கண்ணுக்குத் தெரியாத

40. திருவரங்கத்துமாலை - 84

சக்கரம்.[41] இதுவே ஞாலத்திகிரி, முதுநீர்த்தி கிரி முதலானவற்றை இயக்கும் ஓர் அற்புதத்திகிரி. மிகப்பெரியதோர் ஆலமரத்தை - அடையாறு ஆலமரம் போன்றதோர் ஆலமரத்தைக்-கவனிப்போம். அதற்கு 200க்கு மேற்பட்ட வயது இருக்கும். 200 ஆண்டுகளுக்கு முன்னர் அது 'தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதையில்' ஒளிந்துகொண்டிருந்தது. 'ஆலமர் வித்தின் அருங்குறள்' போல் ஒளிந்துகொண்டிருந்தது என்றும் சொல்லிவைக்கலாம். காலச் சக்கரம் சுழன்று சுழன்று, விதையில் ஒளிந்துகொண்டிருந்த ஆலமரத்தை மெல்ல மெல்ல இழுத்து வெளிக் கொணர்ந்து விட்டது. இந்த அகிலத்தில் நிகழும் நிகழ்ச்சிகள் யாவுமே காலச்சக்கரத்தின் சுழற்சியால் வெளி வந்தவைதாம்.

இந்தக் கருத்தைத் தெளிவாய் விளக்க இன்னொரு கருத்தைக் காட்டுவேன். சென்னையிலிருந்து நெல்லைக்குப் போகின் றோம். வழியில் விழுப்புரம், திருச்சி, மதுரை, விருதுநகர் ஆகிய நகர்கள் வருகின்றன. இவையாவும் முன்னமேயே இருந்த நகர்கள்தாம். இடத்தை விட்டு இடம் பயணம் செய்யும்போது முன்னமேயே இருந்த ஊர்களைத்தாம் சந்திக்கின்றோம். நம் வாழ்க்கையில் இன்னும் இருபது ஆண்டுகளுக்குப் பின்னால் நிகழப்போகும் நிகழ்ச்சிகளும் நிகழ்பவை அல்ல. 150 கி.மீ.க்கு அப்பால் இருந்துகொண்டிருக்கும் விழுப்புரத்தைப் போல, 330 கி.மீ. க்கு அப்பால் இருந்துகொண்டிருக்கும் திருச்சியைப் போல, 400 கி.மீ.க்கு அப்பால் இருந்துகொண்டிருக்கும் மதுரையைப் போல, 560 கி.மீக்கு அப்பால் இருந்துகொண்டிருக்கும் திருநெல்வேலியைப் போல, இருபது ஆண்டுகளுக்கு அப்பால் கால மண்டலத்தில் அந்நிகழ்ச்சிகள் இருந்துகொண்டுள்ளன! தூரம் என்ற திரை இந்த நான்கு நகர்களையும் மறைத்துக் கொண்டிருப்பதுபோல, காலம் என்ற திரை இந்நிகழ்ச்சிகளை மறைத்துக்கொண்டுள்ளது. இந்த உண்மையை வேறு விதமாக வும் கூறலாம். காலம் என்ற வாகனத்தில் நாம் பயணம் செய்யும்போது முன்னமே இருந்துகொண்டிருக்கும் அந்நிகழ்ச்சி களை நாம் சந்திக்கின்றோம். இடப்பயணத்தில் நாம் இந்த நான்கு நகரங்களையும் சந்திப்பது போல, காலம் என்ற தத்துவம் எல்லா நிகழ்ச்சிகளையும் பூத்து விரியச்

41. இதுவே வைணவ தத்துவத்தின் அசித்தின் ஒரு பகுதியான காலதத்துவம்; இது சத்துவசூனியம் என்றும் வழங்கப்பெறும்.

செய்கின்றது. ஆகவே, நிகழ்ச்சிகளை நடத்திக்காட்டும் சூத்திரதாரராய் உள்ளது காலம் என்ற திகிரி.

> "ஞாலத் திகிரி முதுநீர்த் திகிரி
> நடாத்தும், அந்தக்
> காலத் திகிரி"

என்று சொல்லி, அதன் முக்கியத்துவத்தை உணர்ந்து பாராட்டினார், கவிஞர்.

நீளம், அகலம், உயரம் என்ற மூன்று அளவைகளோடு கலந்து பிரிக்க முடியாத நான்காவது அளவை ஒன்றுள்ளது. அதுவே காலம் என்ற அளவை என்பதை அறிவியல் முறையில் நிலைநாட்டினார், ஐன்ஸ்டைன். காலத்துக்குமேல் ஐந்தாவது அளவை ஒன்றுள்ளது என்று **ஊஸ்பென்ஸ்கி** என்ற இரஷ்ய அறிவியலறிஞர் கூறுகின்றார். அறிவியலறிஞர்கள் இன்னும் பலப்பல அளவைகளைப் புதியனவாய்க் கண்டறியலாம். ஆகவே, அவற்றிற்கு இடம் கொடுக்க வேண்டும் என்று எண்ணி, 800 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,

> "ஞாலத் திகிரி முதுநீர்த் திகிரி
> நடாத்தும் அந்தக்
> காலத் திகிரி முதலான யாவும்"

என்று பாடினார்.

காலம் முதலான மூலச் சக்கரங்களுக்கெல்லாம் விசை கொடுத்து முடுக்கிவிட்ட உள்மூலச்சக்கரம் ஒன்றுள்ளது. அதைப் பற்றிப் பேசப்போகின்றார், திவ்வியகவி. அவர் சொல்லப் போவதைப் புரிந்துகொள்வதற்காக இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவுபடுத்திக்கொள்ளலாம். நீலகிரி மலையின் உச்சியில் இப்போது பெருமிதத்துடன் ஒய்யாரமாய் அமர்ந்திருக்கும் ஊதகமண்டலம் அந்தக் காலத்தில் இல்லை. அது மனித நடமாட்டமில்லாத ஒரு பொட்டல் காடாய் இருந்தது. நம் நாட்டுக்கு வாணிகம் செய்ய வந்த கிழக்கிந்தியக் கம்பெனியில் பணியாற்ற வந்த ஓர் ஆங்கிலேயர் தற்செயலாய் மலைமேலேறிச் சுற்றி வந்தபோது, இப்போது உதகமண்டலம் இருக்கும் மலை உச்சியில் ஓர் அழகிய

நகரத்தை நிர்மாணிக்கத் திருவுள்ளம் கொண்டார். இங்கிலாந்து நாட்டிலிருந்து ஒரு சிற்பியை வரவழைத்துக் கோடைக் கொடுமையினின்றும் தப்பி ஆங்கிலேயர் வாழ்வதற்கு உரிய நகரத்தை அமைக்கும்படி ஏவினார். நகரத்தை அணி செய்வதற்காக மனத்திற்கு இதமான ஒரு பூங்காவையும் அமைக்க வேண்டும் என்று ஒரு பெரிய திட்டமும் போட்டார், சிற்பி. அவருடைய கற்பனையில் விதம் விதமான பூச்செடிகள் பூத்துக் குலுங்கின; விதம் விதமான மரங்கள் கப்பும் கிளையுமாய் வளர்ந்து வானைத் தொட்டுக்கொண்டு நின்றன. அவர் உள்ளத்தில் தோன்றிய நயமான சோலையை அவரோடு ஒத்துழைத்த மற்றவர்கள் காணவில்லை.

ஒரு பனைமட்டையைக் கையில் வைத்துக்கொண்டு, சுண்ணாம்பு நீரில் அதை அமுக்கி ஒரு கோலம் போட்டுக் கொண்டே சென்றார், சிற்பி. பின் சென்றவர்கள் அவர் கட்டளைப்படி அந்தக் கோலத்தின் புள்ளிகளிலும் வளைந்து நெளியும் கோடுகளிலும் விதைகளை விதைத்தார்கள்; செடிகளை நட்டார்கள்; பதியங்களைப் பதித்தார்கள். பலப்பல ஆண்டுகள் உருண்டோடின. அதற்குப் பிறகுதான் இப்போது உதகையில் நாம் காணும் அற்புதமான பூங்காவை (Botanical Garden) - நனவாகிய சிற்பியின் கனவை - மற்றவர்களும் கண்டு மகிழ முடிந்தது. மற்றவர்களுக்கு அருவமாய் இருந்த சிற்பியின் அகக்காட்சி இப்போது மற்றவர்களுக்கும் காணக்கிடைத்த புறக்காட்சியாய் உருவாயிற்று.

இதனைப் போலவேதான், இறைவன் என்ற சிற்பியின் அகக்காட்சியிலே தோன்றியது, பேரண்டம்; பின்னர், அது புறக் காட்சியாய் மாறியது. வெறும் பாழாய் இருந்த எல்லையிலாப் பர வெளியில், பல்லாயிரங்கோடி அண்டங்கள் பூத்து மலர்ந்தன. சூரிய சந்திரர்களும் விண்மீன்களும் தோன்றி மாபெரும் உருளைகளைப் போல வெட்ட வெளியில் சுழன்றன; சுழல்கின்றன. ஒரு கணக்குப்படி சுழல்கின்றன; ஒன்றோடொன்று மோதாமல், யாரோ இட்ட கோலங்களின் கோடுகளிலும் புள்ளி களிலும் ஆணைக்கு அடங்கி நின்று, கற்பனை கடந்த வேகத்தில் சுழல்கின்றன. அந்த ஆங்கிலச் சிற்பியிட்ட கோலத்தினுள்ளும் புள்ளிகளினுள்ளும் இட்ட விதைகளினின்றும் பதித்த பதிகங் களினின்றும், காலத்திகிரியின் சுழற்சியிலே வெளிவந்த உதக மண்டலப் பூங்காவைப்போல, பேரண்டப்

பூங்காவும் வெட்டவெளியிலிட்ட கோலங்களினின்றும் வெளிவந்து விரிந்து பெருகிச் சுழன்றுகொண்டிருக்கின்றது.

வெட்ட வெளியில் கோலத்தை இட்ட சிற்பியைப்பற்றி இப்போது சிந்திக்கின்றோம். அப்பெருமகன் யார்? நமது திருவரங்கத்தில் தெண்ணீர்ப் பொன்னித் திரைக்கையால் அடி வருட, அரவு அணையில் பள்ளி கொண்டு உறங்குவான்போல் யோகம் புரிந்துகொண்டிருக்கும் மணி வண்ணன் அம்மான்தான். பாற்கடலைக் கடைந்தபோது ஒரு நீல மலையை மத்தாய்க் கொண்டு கடைந்தார், அந்தக் கருமணி. அந்த மத்தைப்போல் நீலமேனியையுடையவர் நம் திருவாழி அம்மான் (நீலத்திகிரி). ஆற்றிடைக்குறையில் அறிதுயிலில் இருக்கும் அப்பெருமான் தம் திருப்பாதங்கள் நோவ எழுந்து சென்று, பனைமட்டையைக் கையில் பற்றிக்கொண்டு, சுண்ணாம்பு நீரில் அதை அமுக்கி அமுக்கியா வெட்ட வெளியில் கோலத்தைப் போடுவார்? இல்லை இல்லை. "நியதிக் கோலத்தைப் போட வேண்டும்; அதற்கு அடங்கிப் பேரண்டங்கள் உருள வேண்டும்" என்று அறிதுயில் மாயோன் சங்கற்பித்தார். அவ்வளவுதான். உடனே, அவர் கையிலிருந்த அழகிய சக்கரம் (திருவாழியாழ் வான்) - **கோலத்திகிரி** - அவர்தம் திருக்கையை விட்டு அகன்று, பாய்ந்து, வெறும் பாழ்வெளியில் - பரவெளியில் - சுழன்று சுழன்று சென்று, ஒரு மாபெரும் கோலத்தை இட்டுவிட்டு, மீண்டும் அவர்தம் திருக்கரத்திலே வந்து அமர்ந்துகொண்டது.

மூலத்திகிரி இட்ட கோலத்திலே காலத்திகிரி பயபக்தி யோடு உருண்டு சென்றது. காலத்திகிரியினின்றும் பிறந்து, அதோடு இணைந்து நிற்கும் ஞாலத்திகிரி, முதுநீர்த்திகிரி முதலிய திகிரிகளெல்லாம் நியதி தவறாமல் தொடர்ந்து சுழன்றன. இந்தத் திகிரித் தொடரைப் பார்த்து, கடிகாரத்தினுள் ளிருக்கும் சக்கரத் தொடரை அநுபவிப்பதுபோல, அநுபவிக் கின்றார், திவ்வியகவி. நாமும் அப்பாடலை மீண்டும் ஒருமுறை படித்து அநுபவிப்போம்.

*"ஞாலத் திகிரி முதுநீர்த் திகிரி*
*நடாத்தும் அந்தக்*
*காலத் திகிரி முதலான யாவும்*
*கடல்க டைந்த*

*"நீலத் திகிரி அனையார் அரங்கர்*
*நிறைந்த செங்கைக்*
*கோலத் திகிரி தலைநா ளதனில்*
*கொண்ட கோலங்களே."*42

இப்போது 'தூவெளியினிடை விரைந்தோடும் வியன் பெரு வையத்தின் காட்சி' நமக்குப் புலனாகின்றதல்லவா? வியப்புக் கடலில் ஆழ்ந்து, ஆண்டவனின் படைப்பின் விந்தையில் திளைக்க முடிகின்றதல்லவா? கூர்தல் அறக் கொள்கையின் (Theory of Evolution) கூறுகளும் கவிதையில் மிளிர்வது நமக்குத் தட்டுப்படுகின்றதையும் உணர்கின்றோம். அறிவியல் தத்துவம் இலைமறை காய்போல் காட்சி தருவதையும் கண்டு அநுபவிக் கின்றோம்.

**திவ்விய கவியின் மற்றோர் இடத்தில்** (திருவேங்கட மாலையில்) திருவேங்கட மலையின் உயர்ச்சியைக் கூறும் பாங்கில் இராசி மண்டலத்தையும் மலையையும் பொருத்திக் காட்டுவதில் இலக்கியமும் அறிவியலும் (ஏன், சமயமும் கூடத்தான்) இணைந்து செயற்படுகின்றன. எல்லாவற்றையும் காட்ட முயல்கின்றேன் - இராமகிருஷ்ணா இனிப்பகம் அல்லது அகர்வால் பவனத்திலிருந்து சில பொருள்களை வாங்கி வந்து உங்கள் இல்லத்தில் தருவது போல்.

*"துய்ய செம்பொற்கோயில்*
*சுடர்எறிப்பக் கண்முகிழ்த்து*
*வெய்ய வன்தேர் மாஇடறும்*
*வேங்கடமே."*43

(துய்ய - தூய; சுடர் - காந்தி; எறிப்ப - வீசுதலால்; கண் முகிழ்த்து - கண் மூடப்பெற்று; வெய்யவன் - சூரியன்; மா - குதிரை)

திருமலையிலுள்ள பொன்மயமான திருக்கோயில் விமானத்தின் ஒளி மிகுதியாய் வீசுதலால் பகலோனின் தேர்க் குதிரைகள் கண்கூச்சமடைந்து கண் விழிக்க இயலாது கண் மூடி அம்மலையின் உயர்வினால் அதில் கால் இடறுகின்றன என்கின்றார்.

42. திருவரங்கத்துமாலை - 84

43. திருவேங்கடமாலை - 9

மேலே காட்டிய **"முன்னம் யாவரும்"** என்ற கம்பன் பாடலில் கதிரவன் தேரிலுள்ள குதிரைகளின் கண்கள் 'கன்னி ஆரையின் ஒளியினில் கண் வழுக்குறுதல் கூறப்பெற்றது. அக்கருத்தினையொட்டியே ஈண்டுத் திவ்வியகவி "பொற் கோயிலின் சுடர் எறிப்ப, வெய்யவன்தேர் மா இடறும்" என்கின்றார். இரண்டையும் ஒப்பு நோக்கும்போது இலக்கியச் சுவை இருமடங்கு பெருகி நிற்கின்றது.

இப்பகுதியில் பன்னிரண்டு இராசிகளுள் மேடம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்றவை மலையின் உயர்வுடன் அற்புதமாய்ப் பொருத்திக் காட்டப் பெறுந்திறன் எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது.

**மேடம் :** திருவேங்கடமலையில் பசியால் வாடிய புலியொன்று வானத்திலுள்ள ஆட்டுக்கிடா வடிவமாயுள்ள மேட இராசியைப் பார்த்துச் சீறுகின்றது.

*"வாடப் பசித்த வரியுழுவை வாலாட்டி*
*மேடத்தைப் பார்த்துறுக்கும் வேங்கடமே."44*

(வரி உழுவை - வரிப்புலி, வாலாட்டுதல் - கோபக்குறி; மேடம் - ஆடு)

'மேடத்தைப் பார்த்திருக்கும் வேங்கடமே' என்ற பாடமும் உண்டு. இதற்கு, புலியானது தன் உணவிற்கும் வலிமைக்கும் தகுந்ததாகிய இடப இராசியை எதிர்நோக்கிக்கொண்டு, அவ்வகை வலிமை இல்லாத மேட இராசியைக் கண்டு வெறுத் திருக்கும் என்றும் பொருள் கொள்ளலாம். மேட இராசி **சித்திரை** மாதத்திற்கு உரியது.

**கடகம் :** இது நான்காவது இராசி. நண்டு வடிவமானது. திருமலையில் குதித்து விளையாடும் குரங்குகள் அதன் தண்குவட்டில் பொருந்தி வரும் கடக இராசியைக் கண்டு (நண்டு வடிவத்தைக் கண்டு) வெருவியோடுகின்றன.

*"தாவிவரும் வானரங்கள் தண்குவட்டிற் கற்கடகம்*
*மேவிவரக் கண்டோடும் வேங்கடமே."45*

(குவடு - மலைச்சிகரம்; மேவி - பொருந்தி)

44 திருவேங்கடமாலை - 16

45. திருவேங்கடமாலை - 17

என்பது திவ்விய கவியின் திருவாக்கு. கடக இராசி ஆடி மாதத்திற்கு உரியது.

**சிங்கம் :** ஆண்யானையைப் பெண் யானை யாதோ ஒரு காரணத்தால் (ஊடலால்?) பிணங்கி வருகின்றது. இந்நிலையில் அது வானத்தில் வருகின்ற சிங்க இராசியைக் கண்டு பேரச்சம் கொண்டு தானே வலியச் சென்று ஆண்யானையைத் தழுவுகின்றது.

> "ஒண்சிந்து ரத்தைவெறுத் தூடும் பிடிவேழம்
> விண்சிங்கம் கண்டணைக்கும் வேங்கடமே."46

(சிந்துரம் - ஆண்யானை; ஊடும் - பிணங்கும்; பிடிவேழம் - பெண்யானை; விண்சிங்கம் - சிங்க இராசி)

என்பது திவ்விய கவியின் அமுதவாக்கு. ஊடுதல் - ஆணுடன் பெண் அன்பு வகையால் சிறிது மாறுபடுதல். இங்ஙனம் வலியக்கொள்ளும் சினம் இன்பத்தை மிகுவிக்கும் என்ற கோட்பாட்டை 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்" (குறள் - 1330) என்ற வள்ளுவத்தால் உணரலாம். சிங்க இராசி **ஆவணி** மாதத்திற்கு உரியது.

**கன்னி :** திருமலையில் ஓங்கி வளர்ந்துள்ள மூங்கிலுக்கு நேராய்ப் பெண் வடிவமான கன்னி இராசி வரும்போது கம்பத்தின்மீது ஏறிக் கூத்தாடும் கழைக்கூத்தியை ஒத்திருக்கும்.

> "மாதுமடக் கன்னிகழை வந்தணுகில்கம்பத்தின்
> மீதுநடிப் பாளொக்கும் வேங்கடமே."47
>
> (மடம் - மடமையுடைய; கழை - மூங்கில்)

மூங்கிலின் உயர்ச்சியைக் கூறியதனால் மலையின் வளம் குறிப்பிட்டவாறாகின்றது. கன்னி இராசி புரட்டாசி மாதத்திற் குரியது.

**துலா :** குறிஞ்சிநிலக் குடிகளாகிய குறவர்கள் வானத்தில் செல்லுகின்ற நிறைகோல் வடிவமான துலா இராசியினிடத்திலே மலையில் ஒளிரும் இரத்தினங்களை வைத்து எடை காண்பார்கள்.

---

46. திருவேங்கடமாலை - 18
47. திருவேங்கடமாலை - 19

*"மன்னு குடிக்குறவர் வானூர் துலாத்திடையே*
*மின்னு மணிநிறுக்கும் வேங்கடமே."*[48]

(மன்னு - நிலைபெற்ற; வான் ஊர் - வானத்தில் செல்லுகின்ற; துலா - துலா இராசி; மின்னும் - பிரகாசிக்கும்; மணி - இரத்தினம்) என்பது அய்யங்கரின் அற்புத அமுதவாக்கு. துலாத்து - அத்து - சாரியை. துலா இராசி **ஐப்பசி** மாதத்திற்கு உரியது.

**தனுசு :** தினைப்புனத்தைக் காக்கின்ற குறவர்கள் குளிர் மதியில் களங்கத் தோற்றமாய் இயங்கும் மான் வடிவைக் கண்டு, அதனைத் தினைப்புனத்தை மேய வரும் மான் என்று கருதி வானத்தில் வில் வடிவமாய்க் காணப்பெறும் தனுசு இராசியைக் கைவில்லாய்க்கொண்டு அம்பு எய்ய முயலுகின்றனர்.

*"கொல்லைக் குறவர் குளிர்மதிமா னைக்ககன*
*வில்லைக் குனித்தெறியும் வேங்கடமே."*[49]

(கொல்லை - தினைக்கொல்லை; மதி - சந்திரன்; ககன வில் - வானவில்; குனித்து - வளைத்து)

சந்திரனிடத்து உள்ள களங்கத்தை மான் என்று கூறுவார் கொள்கை ஈண்டுக் கொள்ளப்பெற்றது. தநுர் இராசி **மார்கழி** மாதத்திற்கு உரியது.

**மகரம் :** ஓங்கி வளர்ந்திருக்கும் மூங்கிலுக்கு நேராய்ச் சுறா வடிவம் போன்ற மகர இராசி வருங்கால், அது மதனவேளின் சுறவக் கொடிபோல் காட்சியளிக்கின்றது. இதனைக் கவிஞர்,

***"தேனேறித் தேன்வைக்கும் திண்கழைமேல் விண்மகரம்***
***மீனேறி வேள்கொடியாம் வேங்கடமே."***[50]

(தேன் - வண்டுகள்; ஏறி - உயரப் பறந்து சென்று சேர்ந்து; திண் கழை - வலிய மூங்கில்; விண்மகரம் - மகர - இராசி; வேள் - மன்மதன்)

மதனவேள் சுறா வடிவத்தைக்கொண்ட கொடியையுடையவன். அவனுக்கு வடமொழியில் **'மகரத்துவஜன்'** என்றும் தென்மொழியில் **'சுறவக் கொடியோன்'** என்றும் பெயர்கள் உண்டு. மகர - இராசி **தை** மாதத்திற்கு உரியது.

**கும்பம் :** ஓங்கி வளர்ந்திருக்கும் மரக்கொம்பொன்றில் உள்ள தேனிறால் விண்ணில் செல்லும் பிறைச்சந்திரனது

---

48. திருவேங்கடமாலை - 20
49. திருவேங்கடமாலை - 21
50. திருவேங்கடமாலை - 22

வளைந்த வடிவமாகிய கொம்பு படுதலால் உடைந்து தேனைச் சொரிகின்றது. அந்தத் தேன் அதற்கு நேராய் வரும் குட வடிவ மான கும்ப இராசியில் நிறைந்து வழிகின்றது.

*"ஒண்கொம்பில் தேனிறால் ஊர்பிறைக்கோட் டால்உடைந்து*
*விண்கும்ப மாய்நிறைக்கும் வேங்கடமே."51*

(தேன் இறால் - தேன்கூடு; ஊர் பிறை - செல்லும் பிறைச்சந்திரன்; கோடு - கொம்பு; விண்கும்பம் - கும்ப - இராசி; கும்பம் - குடம்)

'பிறைக்கோட்டால்' என்பதற்கு, வளைந்த வடிவமுடைய பிறையினது நுனி படுதலால் என்று உரைப்பினும் அமையும். கும்ப இராசி **மாசி** மாதத்திற்கு உரியது.

**மீனம் :** திருமலையிலுள்ள கோனேரியில் மீன் பிடிக்கக் காத்திருக்கும் கூனல் இள வெண்குருகு ஒன்று வானத்திற் செல்லும் மீன் வடிவமான மீன இராசியின் நிழல் நீரில் தெரியக் கண்டு, அதனை உண்மையான மீன் என்று கருதிக் கொத்தி ஏமாந்து போகின்றது.

*"கூனல்இள வெண்குருகு கோனேரி யில்விசும்புஊர்*
*மீனநிழ லைக்கொத்தும் வேங்கடமே."52*

(கூனல் - வளைவான; குருகு - நீர்ப்பறவை (கொக்கு); விசும்பு - வானம்; ஊர் - செல்லுகின்ற)

கோனேரி - திருமலையின் மேல் திருக்கோயிலுக்கு அருகிலுள்ள முக்கிய திவ்விய தீர்த்தம். மீன இராசி - **பங்குனி** மாதத்திற்கு உரியது.

இதுகாறும் இராசி மண்டலத்தில் தம் கற்பனையைச் செலுத்தின கவிஞர், விண்மீன் மண்டலத்தில் தம் கவனத்தைச் செலுத்துகின்றார்.

---

51. திருவேங்கடமாலை - 23
52. திருவேங்கடமாலை - 24

*மூல நட்சத்திரம் :* கவிஞரின் சிந்தனை வேறொரு போக்கில் ஈண்டு நடைபெறுகின்றது.

> "மண்மூலம் தாஎன்று மந்திகடு வற்குரைப்ப
> விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே."[53]

(மண் மூலம் - கிழங்கு; மந்தி - பெண்குரங்கு; கடுவன் - ஆண் குரங்கு; விண்மூலம் - மூல நட்சத்திரம்)

பெண்குரங்கு ஆண்குரங்கிடம் 'மூலம் தா' (கிழங்கு கொடு) என்று வேண்டியதனால் அதனிடத்து மிக்க அன்பு கொண்ட கடுவன், தன்னைப் பிடித்து மந்தியின் கையில் கொடுத்து விடுமே என்று மூல நட்சத்திரம் அஞ்சுகின்றது என்கின்றார், கவிஞர். இந்த வருணனையில், திருமலை, வானத்து நட்சத்திர வீதிக்கு அருகில் உள்ளது என்பதும், அம்மலைக்குரங்கு தேவகணமும் அஞ்சத்தக்க வலிமையுடையதென்பதும் தெளிவாகும். **'மூலம்'** என்ற சொல்விளையாட்டில் ஈடுபடும் கவிஞரின் கற்பனைத்திறனை வியக்கின்றோம். அசுவினி முதல் இரேவதி முடிய நட்சத்திரங்கள் இருபத்தேழு என்பதை நாம் அறிவோம்.

***அவிட்ட நட்சத்திரம் :*** மகளிர் பொன்னூசலிலிருந்து கொண்டு உந்தி உந்தித் தள்ளி விளையாடுகின்றனர். அந்த ஊஞ்சல் அவிட்ட நட்சத்திரத்தில் படுங்கால் அங்கு அம்மகளிர் இறங்குகின்றனர்.

> "நாலவிட்ட பொன்னூசல் நன்நுதலார் உந்துதொறும்
> மேலவிட்டம் தொட்டு இழியும் வேங்கடமே."[54]

(நாலவிட்ட - தொங்கவிட்ட; நுதல் - நெற்றி; உந்துதல் - வீசித் தள்ளி ஆட்டுதல்; அவிட்டம் - அவிட்ட நட்சத்திரம்; இழியும் - இறங்கும்)

இங்கும் திருமலையும் நட்சத்திர வீதியும் ஒன்றற்கொன்று அருகிலிருப்பதாய் அறிகின்றோம். இன்னும் பல அழகிய காட்சிகள் உள்ளன; அவை படித்து நுகரத்தக்கன. அவை அறிவியலுக்குப் பொருந்தாமையால் விடப்பெற்றன.

---

53. திருவேங்கடமாலை - 25
54. திருவேங்கடமாலை - 26

## 2. பொறி இயல் அறிவு

பண்டைத் தமிழர்கள் பொறியியலிலும் வல்லுநர்களாய் இருந்திருத்தல் வேண்டும் என்று ஊகிக்க இடம் உண்டு. சிந்தாமணியில் விசயை இவர்ந்து சென்ற மயில் பொறியும், பெருங்கதையில் குறிப்பிடப்பெறும் யூகியால் சமைக்கப்பெற்ற இயந்திர யானையும், புறநானூறு கூறும் "வலவன் ஏவா வான ஊர்தியும்"[55], இராமாயணத்தில் காட்டப்பெறும் புட்பக விமானமும் பொறியியல் அறிவினால் அமைக்கப்பெற்ற சாதனங்கள் என்று கருதலாம். அமைக்கப்பெறாவிடினும் அமைக்கலாம் என்ற அறிவியல் கற்பனையாவது எழுந்திருக்க வேண்டும் என்று கருதவாவது இடம் உண்டல்லவா? அன்று பல வேறு துறைகளில் பொறியியல் அறிவு வளர்ந்திருந்ததா என்பதை எடுத்துக்காட்டற்குரிய சான்று ஒன்றும் கிடைக்க வில்லை. இதனை இலக்கியங்களுள் காணப்பெறும் ஒருசில குறிப்புகளால் அறுதியிட்டு உரைத்தற்கில்லை.

திருச்சிக்கருகேயுள்ள காவிரி நதியின் குறுக்கே கட்டப் பெற்றுள்ள **கல்லணை** கரிகாற்பெருவளத்தான் காலத்தில் கட்டப்பெற்றதாய்க் கூறுகின்றனர். தஞ்சைப் பெரிய கோயிலின் மாபெரும் கோபுரமும், கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள கோபுரமும்[56] முறையே இராசராசன் - II காலத்திலும், அவன் திருக்குமாரன் இராசேந்திரன் - II காலத்திலும் கட்டப்பெற்றன வாய் வரலாற்றால் அறிகின்றோம். இவற்றால் பொறியியலும் சிற்பக்கலையும் அற்புதமாய் வளர்ச்சி பெற்றுள்ள நிலைகளைக் காணமுடிகின்றது. அவை கட்டப்பெற்ற தொழில் நுட்ப நூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

இன்று அமெரிக்கா போன்ற மேலைநாடுகளிலுள்ள பெரிய நகரங்களில் விண்ணை மூட்டும் பல்லடுக்கு மாளிகைகள் கட்டப்பெற்றுள்ளன. அவ்வளவு ஏன்? இன்று நம் நாட்டிலும் மும்பை, சென்னை, கல்கத்தா போன்ற நகரங்களில் பல்லடுக்கு மாளிகைகளைக் காண்கின்றோமல்லவா? சென்னை அண்ணா சாலையிலுள்ள ஆயுள் காப்பீட்டு நிறுவனத்தின் கட்டடம்

---

55. புறம் - 27

56. **இவை விமானம் இருக்கவேண்டிய இடத்தில் உள்ளன. பிற்காலத்தில் இவை கோயிலின் முதல் நுழைவாயிலில் அமைக்கப்பெற்ற இராச கோபுரமாய் மாற்றப்பெற்றுள்ளன.**

பல்லடுக்கு மாளிகைக்கு நாம் நேரில் காணும் சான்று. இத்தகைய மாளிகைகள் இலங்கை மாநகரில் திகழ்ந்தன என்பதைக் கம்பன் காட்டுவான்.

> "பொன்கொண்டு இழைத்த
> மணியைக்கொடு பொதித்த
> மின்கொண்டு இழைத்த
> வெயிலைக்கொடு சமைத்த
> என்கொண்டு இயற்றிய
> எனத்தெரிகி லாத
> வன்கொண்டல் தாவி
> மதிமுட்டுவன் மாடம்."57

இயல்பில் பொன்னால் செய்யப்பெற்று மணிகள் பதிக்கப் பெற்றுள்ள முகில் மண்டலத்திலும் மேலாய் உயர்ந்து திங்கள் மண்டலத்தையும் எட்டும் மாடமாளிகைகள் "மின் கொண்டு இழைத்தனவோ? வெயிலைக்கொண்டு சமைத்தனவோ? இன்னபடிதான் என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாமல் திகைக்கும்படி இருந்தன" என்று கவிஞன் கூறும் பொழுது அக்காலத்துக் கட்டடப் பேரறிஞர்களின் திறமையை ஒருவாறு விளக்குகின்றது என்பதனை அறிகின்றோம்.

**அவதாரங்கள் :** மச்சம்முதல் கல்கிவரை திருமால் எடுத்த (எடுக்கும்) பத்து அவதாரங்களையும் ஆய்ந்தால் அது கூர்தல் அறக்கொள்கையை விளக்குவதாய் அமையும் என்ற ஒரு சிந்தனையும் உண்டு. எல்லா ஆழ்வார்களுமே எல்லா அவதாரங்களில் ஈடுபட்டுப் பாசுரங்களை அருளியுள்ளனர். பத்து அவதாரங்களையும் பாதி வெண்பாவில் அமைத்துக் காட்டி மகிழ்வார் காளமேகம்.

> "மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியில்என்
> இச்சையிலுள் சென்மா எடுக்கவா - மச்சாகூர்
> மாகோலா சிங்காவா மாராமா ராமாராரா
> மாகோபா லாமா வாய்"

(மச்சம் - மீன்; கூர்மம் - ஆமை; கோலம் - பன்றி; சிங்கம் - நரசிங்கம்; வாமனம் - குறள் வடிவம்; மா - குதிரை என்ற பாடலின் பின்னிரண்டு அடிகளிலும் பத்து அவதாரங் களும் பாங்குற அமைந் திருத்தலைக் கண்டு மகிழலாம்.

57. கம்பரா. யுத்த கா. ஊர்தேடு - 1

## 3. உயிரியல்

இன்று டார்வின் போன்ற அறிஞர்களால் குறிப்பிடப் பெறுவது கூர்தல் அறம் (Theory of Evolution) என்ற கொள்கையாகும். இக்கொள்கைபற்றி இன்னும் அறிவியலறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துகள் இல்லாமல் இல்லை. இத்தகைய கொள்கை போன்றதொரு கருத்தினை,

> "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் "[58]

என்று மணிவாசகப்பெருமானும் கூறுவர்.

**பலராமன் பிறப்பு :** ஏழாவது முறை கருவுற்ற தேவகி கம்சனுக்குப் பயந்துகொண்டிருந்த போது அக்கருவில் வளர்ந்து பிறக்கும் குழவியைக் கம்சனிடமிருந்து தப்புவிக்க வேண்டும் என்பது எம்பெருமானின் திருவுள்ளம். ஆகவே, அக்கரு வசுதேவனின் மற்றொரு மனைவியாகிய ரோகிணியின் கருப்பைக்கு மாற்றப்பட்டுப் பலராமனாய்ப் பிறந்தது. இவனே கண்ணனுக்கு மூத்த பலராமன்; சங்க இலக்கியங்களில் 'நம்பி மூத்தபிரான்' என்று குறிப்பிடப்பெறுபவன் இவனே. இன்றைய அறிவியல் கண்டுபிடிப்பு (புதியது புனையும் ஆற்றல்) புராணத்தில் 'கதைபோல்' அடங்கிக் கிடக்கின்றது.

இதனை, இக்காலத்து மலட்டுப்பெண் கருத்தரிப்புடன் ஒப்பிட்டு நோக்கலாம். 'மலடி வயிற்றில் ஒரு மகன் போலே; புதையல் எடுத்த ஒரு தனம் போலே' என்பது ஒரு திருப்புகழின் அடிகள். 'புதையலில் தனம் கிடைத்தல் நடைபெறக்கூடியது. சிலருக்குக் கிடைத்ததாகவும் செய்தி உள்ளது. ஆனால், 'மலடிக்கு மகன் பிறத்தல்' என்பது சொல்லளவில்தான் இருந்து வந்தது. இன்றைய அறிவியல் இதனையும் மெய்ப்பித்துவிட்டது. அமெரிக்காவில் கலி∴போர்னியா மாநிலத்தைச் சார்ந்த

58. திருவா. சிவபு. அடி 26-31.

பெண்கள் இருவர் மலடியர் என்று மெய்ப்பிக்கப்பெற்றவர்கள். அஃதாவது, அவர்களின் சூற்பைகளில் முட்டையணுக்கள் உண்டாவதில்லை. லாஸ் ஏஞ்சலிஸ் என்ற மருத்துவ மனையில் அவர்களிடம் கருத்தரிப்பு ஏற்படச்செய்து வெற்றிகரமாய்க் கருவுயிர்ப்பு நிகழும்படி செய்துள்ளனர், அந்த மருத்துவ மனையில் பணியாற்றிய மருத்துவ வல்லுநர்கள்.

இந்த இருபெண்களின் கணவன்மார்களின் விந்தணுக்கள் வேறு இரு பெண்களின் கருப்பைக்குள் செயற்கை முறையில் செலுத்தப்பெற்றன; அதனால் அந்தப் பெண்கள் கருவுற்றனர். பின்னர், அந்தப் பெண்களின் கருப்பையில் வளர்ந்து வந்த கருக்கள் வெளியே எடுக்கப்பெற்று, இந்த மலட்டுப்பெண்களின் கருப்பைக்குள் பொருத்தப்பெற்றன. அந்தப் பெண்களின் வயிற்றில் கருக்கள் வளர்ந்து வந்தன. உரிய காலத்தில் அவரவர் மகப்பேறும் அடைந்தனர். மேற்குறிப்பிட்ட பலராமனின் பிறப்பும் இத்தகையதே என்பதைச் சிந்தித்து உணரலாம்.

இந்த உத்தியில் வெற்றி கண்ட அறிவியல் அறிஞர்கள், மேதைகளின் விந்தணுக்களைச் சேகரித்துச் சேம நிதியாய்ப் பாதுகாக்கலாம் என்ற வழியைச் சிந்திக்கின்றனர். தலைநகரில் நடைபெற்ற கால்வழி இயல் அறிஞர்களின் மாநாட்டில்[59] மேதைகளின் விந்தணுக்களையும் முட்டையணுக்களையும் வருபயன் நோக்கிச் சேமித்து வைப்பதுபற்றியும் குறிப்பிட்டனர். மகப்பேறு அற்றவர்களுக்கு மகப்பேறு அளிக்க இம்முறை துணை செய்வதோடு உயர்ந்த மரபைப் பாதுகாக்கும் பெருமையும் உண்டு என்பதையும் தெரிவித்தனர். ஆனால், இந்த முறை "ஒழுக்க சமூக அரசியல் நெறிமுறைகள் இவற்றினின்றும்" விலக்க முடியாத சூழ்நிலைகளும் ஏற்பட வழியுள்ளது என்பதையும் இவர்கள் குறிப்பிடாமல் இல்லை.

---

59. 1983ஆம் ஆண்டு திசம்பர்த் திங்களில் Fifteenth International Congress of Genetics என்ற மாநாடு 10 நாள்கள் நடைபெற்றது. ஐம்பது நாடுகளிலிருந்து 2500 கால்வழி இயல் அறிஞர்கள் இதில் கலந்துகொண்டனர்.

*வள்ளுவர் வாக்கு :* வள்ளுவர் பெருமான் பல்வேறு நிலையான உண்மைகளை மருந்து மாத்திரை போல் சிறிய குறள் வடிவில் தந்துள்ளார். அவற்றுள் ஒன்று

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து."[60]

என்பது. இக்குறளின் கருத்து, பிறப்பியல் உண்மைப்படி பொருந்தாத கூற்றாகின்றது. வள்ளுவர் கூற்றினைப் பொய் யென்று அவ்வளவு எளிதாகவும் கூறிவிட முடியாது. அறிவு மரபு வழியாய் இறங்கும் என்று ஒப்புக்கொள்ளாமல் சூழ் நிலையால் - அடுத்த தலைமுறைக்கு முந்திய தலைமுறை அளிக்கும் வாய்ப்புகளால் - கடத்தப்பெறுகின்றது என்று கொண்டால் இவ்வுண்மை பொருந்தும் கூற்றாய் அமைகின்றது. நாம் நம்முடைய குழந்தைகளுக்குக் கடத்துவன நிறக்கோல்களே (Chromosomes); நம்மிடம் நேரிடும் மாற்றங்கள் யாவும் நம்முடைய கரு - அணுக்களுடன் (Germ-cell) சேர்ந்திருக்க வேண்டும்; அஃதாவது, ஒவ்வொரு சிறப்பியல்களை விளை விக்கும் மாற்றங்கள் அவற்றிற்குக் காரணமாயுள்ள குறிப்பிட்ட நிறக்கோல்களிலுள்ள குறிப்பிட்ட ஜீன்களில் (Genes) சேர வேண்டும், இஃது அறிவியல் உண்மைப்படி சாத்தியமன்று என்பதற்கு எண்ணற்ற சோதனைகள் சான்றுகளாய் அமைகின்றன.

மரபுவழி இறங்காப் பண்புபற்றி ஒரு சொல். இளைஞர் ஒருவர் மதுபானம் பருகும் பழக்கம் இல்லாத நிலையில் மகப்பேறு அடைகின்றார். பத்தாண்டுகளுக்குப் பிறகு போரில் தொண்டாற்றியதன் விளைவாய் மதுபானப் பழக்கம் அவருக்கு ஏற்படுகின்றது; எப்பொழுதும் மயக்க நிலையிலேயே இருக்கின்றார். இப்பொழுது அவருக்கு ஒரு குழந்தை பிறக்கின்றது. இந்த இரு குழவிகளுள் இரண்டாவது குழந்தை குடிப்பழக்கத்தை மேற்கொள்ளக்கூடும். இஃது இரண்டாவது குழந்தைக்குத் தந்தையிடமிருந்து பெற்ற ஜீன்களிடையே மதுபானப் பழக்கம் இருப்பதால் பெற்றதன்று; ஜீன்களிடையே அத்தகைய பழக்கம் ஒன்றும் இல்லை. முதல் மகன் குடிவெறி இல்லாத அமைதியான சூழ்நிலையில் வளர்க்கப்பெற்றதால் அவனிடம் அப்பழக்கம் அமைய வழி இல்லை. இரண்டாவது மகன் குடிவெறி நிலவும் சூழ்நிலையில் வளர்ந்ததால் அவனிடம்

60. குறள் - 398

அப்பழக்கம் அமைவதற்கு வழி ஏற்படுகின்றது. மதுபானப் பழக்கம் மரபு வழியாய் இறங்கும் ஒரு பண்புக்கூறு அன்று; அது சூழ்நிலையால் பெறும் பண்பாகும்.

*"தக்கார் தகவிலர் என்ப அவரவர்*
*எச்சத்தாற் காணப் படும்"* (குறள் - 114)

என்ற குறள் கூறும் கருத்தும் இதுவேயாகும். 'தாயைத் தண்ணீர்த்துறையில் பார்த்தால் பெண்ணை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை' என்ற உலகியல் பழமொழியும் இதனையே வற்புறுத்துகின்றது. எனவே, மரபுவழியும் சூழ்நிலையும் இடைவிடாது இடைவினை புரிவதாலேயே மக்களிடம் பண்புகள் அமைகின்றன என்பது பெறப்படும். மரபுவழி தவறிய இடத்தில் சூழ்நிலை அதனை நிறைவு செய்யும். எடுத்துக்காட்டாய், ஓர் இசைப்புலவனின் மகனிடம் இசைப்புலமை மரபுவழியாய் இறங்காது. அவன் தன் மகனுக்கு அளிக்கும் பயிற்சியாலும் வாய்ப்பாகத் தரும் சூழ்நிலையாலும் அவனுடைய மகனும் சிறந்த பாடகனாய்த் திகழ ஏதுவுண்டு.

**கபிலரகவல் :** நிறக்கோல்கள் பொருந்தா நிலையைக் கபிலரகவல் குறிப்பிடுகின்றது.

*"பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே*
*அவ்விரு சாதியில் ஆண்பெண் மாறிக்*
*கலந்து கருப்பெறல் கண்ட துண்டோ?*
*ஒருவகைச் சர்தியாம் மக்கட் பிறப்பில்*
*இருவகை யாகநீர் இயம்பிய குலத்து*
*ஆண்பெண் மாறி அணைதலும் அணைந்தபின்*
*கருப்பொறை உயிர்ப்பதும் காண்கின் றிலீரோ?*
*எந்நிலத் தெந்தவித் திடப்படு கின்றதோ*
*அந்நிலத் தந்தவித் தங்குரித் திடுமலால்*
*மாறிவே றாகும் வழக்கமொன் றிலையே."*[61]

(கருப்பொறை உயிர்ப்பு - பிள்ளை பெறுதல்; அங்குரித்தல் - முளைத்தல்)

என்ற கபிலரகவல் பகுதியில் ஓர் அறிவியல் உண்மை அடங்கியிருப்பதாய்க் கருதலாம்.

---

61. கபிலரகவல் - அடிகள் : 68-77.

வெவ்வேறு இனத்தைச் (Species) சார்ந்த இருபிராணிகளிடையே நிறக்கோல்கள் பொருந்தா நிலை ஏற்படுகின்றது என்பது உயிரியல் காட்டும் உண்மை. எடுத்துக்காட்டாய், ஒரு பூனையும் நாயும் கலவி புரிந்து குட்டியினை ஈன முடியாது. இங்ஙனமே வாத்தும் கோழியும் இணைந்து இனப்பெருக்கம் செய்தல் முடியாது.

இயற்கை அன்னை இரண்டையும் இணைய வைப்பதில்லை. இதனால் இனம் காக்கப்பெறுகின்றது. பூனை இனமும் நாய் இனமும் வாத்து இனமும் கோழி இனமும் மாறாமல் காக்கப் பெறுகின்றன. இஃது ஓர் உயிரியல் உண்மை. ஆயினும், ஒரு குதிரையும் கழுதையும் (Donkey) கலவி புரிந்து, ஒரு கோவேறு கழுதை (Mule)யை உண்டாக்கலாம். ஆனால், கோவேறு கழுதையிடம் இனப்பெருக்கத்திற்குக் காரணமான பாலணுக்கள் உண்டாவதில்லை. முரண்பாடுள்ள நிறக்கோல்களே இதற்குக் காரணமாகும். ஆனால், சில அரிய சந்தர்ப்பங்களில், பல சிக்கலான காரணங்களால், பெண் கோவேறு கழுதைகள் கருத்தரிக்கும் தன்மையைப் பெறுகின்றன. ஆனால், ஆண் கழுதைகள் மலடாகவே உள்ளன. இதனால் கோவேறு கழுதைகள் நேர்முறையில் பல்கிப் பெருகமுடியாது என்பது அறியத்தக்கது. மேலும், சிங்கமும் புலியும் பிறப்பியல் அடிப்படையில் வேறுபட்டாலும், சில சமயம் இணைந்து **"சிம்மம்"** (Tiglon) என்னும் ஒரு வகைப் பிராணிகளை உண்டாக்குகின்றன என்று கூறுகின்றனர்.

மனத்தில் பதியுமாறு இன்னோர் உண்மை கபிலரகவலில் காணமுடிகின்றது.

*"பூசுரர் புணர்ந்து புலைச்சியர் ஈன்ற*
*புத்திர ராயினோர் பூசுரர் அல்லரோ?*
*பெற்றமும் எருமையும் பேதமாய்த் தோன்றல்போல்*
*மாந்தரில் பேதமாம் வடிவெவர் கண்டுளார்?*
*வாழ்நாள் உறுப்புமெய் வீண்ணமோ டறிவினில்*
*வேற்றுமை யாவதும் வெளிப்பட லன்றே"62*

என்ற பகுதியால், மானிட இனம் முழுவதும் ஒரே பிரிவினைச் சார்ந்தது என்ற உண்மை விளக்கப்பெறுகின்றது. ஆகவே, ஒரு கருநிறப் பெண்ணுக்கும் வெண்ணிற ஆணுக்கும் பிறக்கும்

62. கபிலரகவல் - அடி 78 - 83.

குழவிகள் யாவும் மலடற்று இருக்கும். கோழியும் வாத்தும் வெவ்வேறு இனத்தைச் சார்ந்தவையாதலின் அவற்றின் கலவியினால் சந்ததியே தோன்றாமல் போயினும் போகலாம். அப்படித் தோன்றினாலும் அந்தச் சந்ததிகள் மலடாகவே இருக்கும் (எ-டு: கழுதை × குதிரை) என்பது அறியத்தக்கது.

*சிகண்டி* : துருபதனுக்கு மூன்றாவது பெண்பிள்ளையாய்ப் பிறந்து, பிறகு ஆணாய் மாறியவள். முற்பிறப்பில் இவள் அம்பை (காசியரசன் மகள்). காசியரசன் நியமித்த சுயம் வரத்தில் வீடுமன் அவன் புத்திரிகளாகிய அம்பை, அம்பிகை, அம்பாலிகை ஆகிய மூவரையும் வலிதிற்கவர்ந்து, தம் தம்பியர் விசித்திரவீரியன் சித்திராங்கதனுக்கு மணம் செய்விக்க முயலுகையில், அம்பை, முன்பே தான் தன் தந்தையால் சாளுவ அரசனுக்குக் கொடுக்கப்பெற்றவள் என்று அறிவர் கூற, வீடுமன் அவளைச் சாளுவனிடம் அனுப்பினார். அம்பை, ஒருவனால் வலிதில் கொள்ளப்பட்டவளாகையால் அவளை மணக்கச் சாளுவன் மறுத்தனன். ஆதலால், அம்பை தவம் செய்து, வீடுமன் உயிரைப் போக்குவதாய்ச் சூளுரைத்துத் தீயிற்பாய்ந்து உயிர் துறந்தாள். காளி தேவியின் வரத்தால் துருபதனுக்கு மூன்றாவது மகளாய்ப் பிறந்தாள் என்பது வரலாறு. வீடுமனும், ஒரு பெண்ணுக்கு எதிராய் ஆயுதத்தைத் தொடுவதில்லை என்று சூளுரைத்திருந்தார்.

பாரதப் பெரும் போரில், பத்தாம் நாள் போரில், கண்ணன் **சிகண்டி**யைக் காண்டீபன் அருகில் இருக்க வைத்தான். உடனே வீடுமன் வில்லைக் கீழே போட, பார்த்தன் பரந்தாமன் ஆணைப்படி வீடுமன்மீது அம்பெய்து மூர்ச்சை அடையச் செய்தனன். வீடுமன் - அம்பை - சிகண்டி வரலாறு வீடுமனுக்கும் கண்ணனுக்கும் மட்டிலுந்தான் தெரியும்.

நவீன ஆராய்ச்சியில், பெண் பூப்பெய்தும் பருவத்தில் ஆணாய் மாறும் விந்தையைக் கண்டுள்ளனர். இலட்சக் கணக்கான மங்கையருள் யாரோ ஒருவர் இவ்வாறு மாறி இருப்பதைச் செய்தித்தாள்மூலம் அறிந்துள்ளோம். பல்லாண்டு களுக்கு முன்னர்ச் செய்தித்தாளில் பழநியம்மாள் பழநியப்பன் ஆனார் என்று வேடிக்கையாய்ச் செய்தி வெளியிடப் பெற்றிருந்தது. இந்நிகழ்ச்சி கரூரில் நடைபெற்றது என்பதாய் நினைவு.

புராணக் குசேலர் : நம் நாட்டுப் புராணக்குசேலருக்கு இருபத்தேழு குழவிகள் இருந்தன என்பதை நாம் அறிவோம். அக்குழவிகள் கஞ்சிக்காப் படும் பாட்டை,

"ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு
கைநீட்டும்; உந்திமேல் வீழ்ந்து
இருமகவும் கைநீட்டும்; மும்மகவும்
கைநீட்டும் என்செய் வாளால்;
பொருமியொரு மகவழும்;கண் பிசைந்தழும்மற்
றொருமகவு; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவெவ்
வனம்சகிப்பாள் பெரிதும் பாவம்.

அந்தோவென் வயிற்றெழுந்த பசியடங்கிற்
றில்லையென அழுமாம் ஓர்சேய்;
சிந்தாத கஞ்சிவார்க் கிலையெனக்கன்
னாயெனப்பொய் செப்பும் ஓர்சேய்
முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும்போ
தினியோர்சேய் முடுகி யீர்ப்ப
நந்தாமற் றச்சேயும் எதிரீர்ப்பச்
சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய்".[63]

வல்லூர் தேவராசப் பிள்ளை வருணித்து நமக்கு மகிழ் வூட்டுவர். இதனால் குழவிகள் யாவரும் சிறுவயதினராயிருந்தனர் என்று ஊகஞ்செய்யலாம். ஆகவே, சுசீலைக்குப் பல குழவிகளை யுடைய பல குழந்தைப் பேறுகள் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று கொள்வது தவறுடையதாகாது. இப்படிக் கொண்டால் தான் கவிஞருடைய கற்பனை பொருந்துவதாக அமையும். அந்தக் கற்பனைக்கும் அறிவியல் அடிப்படையில் நல்ல விளக்கமும் ஏற்பட ஏதுவாகும்.

இதனை விளக்குவதற்கு இரட்டைப் பிறவிகள், இவற்றில் ஒரு கரு இரட்டையர், இருகரு இரட்டையர், இயல்பிகந்த இரட்டையர் போன்ற அறிவியல் கருத்துகளையும்; இரண்டுக்கு மேற்பட்ட பிறவிகளையும் இவற்றில் முக்கோவைக் குழவிகள் (Triplets), நாற்கோவைக் குழவிகள் (Quadruplets), ஐந்து

63. குசேலோபாக்கியானம் - குசேலர் மேற்கடலைக் அடைந்தது; செய் 70 - 71.

கோவைக் குழவிகள் (Quintuplets), எண் கோவைக் குழவிகள் (Octuplets) ஆகியவைபற்றியும் தெளிவாய் விளக்குதல் வேண்டும்.

கண்ணுக்குத் தெரியாத நுண்ணிய உயிரணுக்களிலிருந்து மானிட உயிர் தோன்றுவதும், பல்வேறு சிக்கலான அமைப்பு களையும் பண்புகளையும் கொண்ட ஒரு மனிதன் உருப் பெறுவதும் வியப்பினும் வியப்பேயாகும். அந்தச் சிறிய உயிரணுக்களிலிருந்தே இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்று சில சமயம் ஒரே மாதிரியான பல குழவிகள் தோன்றுவதைக் காணும்பொழுது நம்முடைய வியப்பு பன்மடங்கு அதிகரிக் கின்றது. இயற்கையின் இரகசியம் புரிந்துகொள்ள முடியாத புதிராய் இருப்பதைக் கண்டு இறும்பூது அடைகின்றோம். ஈண்டு இங்ஙனம் பல விதக் குழவிகள் பிறப்பதை விளக்குவேன்.

**இரட்டைக் குழவிகள் :** இரட்டைப் பிறவிகள் இருவகை யில் உண்டாகலாம். கருவுற்ற ஒரே முட்டையிலிருந்து இரண்டு குழந்தைகள் உண்டாகின்றன. கருவுற்ற முட்டை பிரிவுபட்டு உண்டான கருப்பத்தில் உள்ள உயிரணுக்களின் தொகுதி இரண்டு பகுதிகளாகப் பிரிந்து ஒவ்வொரு பகுதியும் ஒவ்வொரு குழந்தையாக வளரும். வளர்ச்சியின் முதல் நிலையில் எல்லா உயிரணுக்களுக்கும் குழந்தையின் எல்லாப் பகுதிகளாய் வளரும் ஆற்றல் உண்டு. இவ்வாறு பிறக்கும் குழவிகளின் தோற்றம், தன்மை, உயரம், நிறம், உறுப்புகளின் அமைப்பு முதலிய மரபு வழிக் கூறுகள் அனைத்திலும் ஒரே மாதிரியாகவே இருக்கும்; இரண்டும் ஆணாய் இருக்கும்; அல்லது பெண்ணாய் இருக்கும். அஃதாவது, இவ்வகைக் குழவிகளில் பால் வேற்றுமை இராது. ஒவ்வொரு குழவிக்கும் தனித்தனிப் பனிக்குடமும், தனித்தனிக் கொப்பூழ்க்கொடியும் இருக்கும். கொப்பூழ்க்கொடிகள் இரண்டும் ஒரே நஞ்சுடன் இணைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய இரட்டைப் பிறவிகளை **ஒருகரு இரட்டையர்** (Identical twins) என்றும், **அச்சு இரட்டையர்** என்றும் வழங்குவர். நம் காலத்தில் வாழ்ந்த ஆர்க்காட்டுச் சகோதரர்களை இவ்வகைக்கு எடுத்துக் காட்டாய்க் கொள்ளலாம்.

இருமுட்டைகள் கருவுறுவதால் உண்டாகும் இரட்டையர் **இருகரு இரட்டையர்** (Fraternal twins) என்று வழங்கப்பெறுவர். இவர்கள் **சகோதர இரட்டையர்** எனவும் வழங்கப்பெறுவர். சாதாரணமாய், மாதத்திற்கு ஒரு முட்டைதான் முதிர்ந்து கருக்குழலில் செல்லும்; சில சமயங்களில் இரு முட்டைகள் (இரு சூற்பைகளிலிருந்து?) முதிர்ச்சியுற்றுச் சூற்பைகளிலிருந்து வெளிப்பட்டுக் கருக்குழலில் (Pellopion tube) செல்வதுண்டு. ஒவ்வொரு முட்டையிலும் ஒவ்வொரு விந்தணு புகுந்து இரு முட்டைகளும் கருவுறும். இவ்வாறு கருவுற்ற முட்டைகள் கருப்பையில் (Womb) வெவ்வேறு இடங்களில் பதிந்துகொண்டு வளரும். ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பனிக்குடமும், தனித்தனிக் கொப்பூழ்க்கொடியும் (Umbilical cord), தனித்தனி நஞ்சும் (Placenta) இருக்கும். இவ்வாறு பிறக்கும் இரட்டைக் குழவிகள் உருவம், தன்மை, உயரம் முதலானவற்றில் ஒரே மாதிரியாய் இருக்க வேண்டும் என்பதில்லை; ஒன்று ஆணாகவும் மற்றொன்று பெண்ணாகவும் அமையலாம்; அல்லது இரண்டும் ஆணாகவோ, பெண்ணாகவோ அமையலாம். இரு முட்டைகளின் நிறக்கோல்கள் பிரியும் பொழுது இரண்டனுடைய நிறக்கோல்களும் ஒரே மாதிரி அமையும் என்று சொல்வதற்கில்லை. ஒரு முட்டையில் தாய்வழிப் பாட்டனிடமுள்ள நிறக்கோல்கள் அதிகமாகவும், மற்றொன்றில் தாய்வழிப் பாட்டியிடமுள்ள நிறக்கோல்கள் (Chromosomes) அதிகமாகவும் அமையலாம். மேலும், இந்த இரு முட்டைகளும் வெவ்வேறு முறையில் அமைந்த நிறக்கோல்களைக் கொண்ட இரு தனிப்பட்ட விந்தணுக்களால் கருவுறுகின்றன. இதனால்தான் இவை பல பண்புக் கூறுகளில் வேற்றுமையுடன் அமைகின்றன. இதனால்தான் நிறம், உரோம வளர்ச்சி, உயரம், உறுப்புகளின் அமைப்பு, தோற்றம் முதலானவற்றில் சாதாரணமாய் சகோதர, சகோதரிகளிடம் காணப்பெறுவதைப் போலவே இவையும் வேறுபாடுகளுடன் அமைகின்றன.

கருவுற்ற முட்டையிலுள்ள உயிரணுக்களின் தொகுதி இரு பகுதிகளாகப் பிரியும்பொழுது முற்றிலும் இரண்டாய்ப் பிரியாமல் போகுமாயின் இயல்பிகழ்ந்த இரட்டைகள்

பிறப்பதற்கு ஏதுவாகும். இவை வெவ்வேறு நிலைகளில் ஒட்டிய பாங்கில் பிறக்கும். இவற்றை **'ஒட்டுப் பிறவிகள்'** (Conjoined twins) என்று வழங்குவர். முதன் முதலில் இத்தகைய பிறவி களுள் ஒன்று உயிருடன் சயாம் நாட்டிலிருந்து வந்ததைக் கண்டதால் இவ்வகைப் பிறவிகளை **சயாம் இரட்டையர்** (Siamese twins) என்று வழங்குகின்றனர். சாதாரணமாய் ஒட்டுப் பிறவிகள் உடலில் ஒரு பகுதி (எ-டு: இடுப்பு) தலை, பக்கங்கள் ஆகியவற்றில் ஏதாவது ஓரிடத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும். பெரும்பாலும், சயாம் இரட்டையர் அச்சு இரட்டையராய் இருப்பர்.

இரட்டைப் பிறவிகள் ஏற்படுவது ஒரு மரபுவழிப் பண்பு என்று அறியக் கிடக்கின்றது. சில குடும்பங்களில் இப்பண்பு அடிக்கடி தலைகாட்டுவதாய் ஆராய்ச்சிகளால் அறிகின்றோம். ஒரே தாயிடம் தொடர்ந்தாற்போல் பல பிறவிகளையுடைய குழந்தைப்பேறு ஏற்படக் காண்கின்றோம். ஓர் ஆஸ்திரியப் பெண்மணி 69 குழந்தைகளுக்குத் தாயான செய்தியை அறிகின்றோம். புராண சுசீலையையும் இவள் தோற்கடித்து விட்டாள், குழந்தை பெறுவதில்! அப்பெண்மணி நான்கு தடவைகள் நாந்நான்கு குழந்தைகளையும், ஏழு தடவைகள் மும்மூன்று குழந்தைகளையும் பெற்றெடுத்ததாக அறியக் கிடக்கின்றது.

முக்கோவைக் குழவிகள், நாற்கோவைக் குழவிகள், ஐங்கோவைக் குழவிகள், ஐந்திற்கு மேற்பட்ட குழவிகள் விரிவஞ்சி விளக்கப்பெறவில்லை.[64] மேலே குறிப்பிட்ட சுசீலை என்பவருக்குப் பிறந்த 27 குழந்தைகளில் ஆண் பெண் குழந்தைக ளாகக் கலந்தும் இருக்கலாம். கவிஞர் இவர்களைப் பிரித்துக் கூறவில்லை.

---

64. **வாழையடி வாழை** என்ற என் நூலில் (மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 108) இயல் 20இல் க்ண்டு தெளிக.

## 4. வானியியல்

வானியல் (Meteorology) பற்றிய ஒருசில கருத்துகளையும் இலக்கியங்களில் காண்கின்றோம். மேலே செல்லச் செல்லக் காற்று இலேசாய் இருக்கும் என்பது விண்வெளி ஆராய்ச்சியால் பெறப்படும் உண்மையாகும். கடல்மட்ட அளவில் பத்து மைல் உயரத்தில் காற்று பத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்றும், இருபது மைல் உயரத்தில் அது கிட்டத்தட்ட நூறில் ஒரு பங்காய்க் குறைந்துவிடுகின்றது என்றும், முப்பது மைல் உயரத்தில் அஃது ஆயிரத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்றும் இந்த ஆராய்ச்சியால் அறிகின்றோம். இத்தகைய ஓர் உண்மையைக் கம்பநாடன் மிகச் சமத்காரமாய்க் கூறுவன். இலங்கையிலுள்ள மாளிகைகள் தேவர் உலகை எட்டும்படியாய் உள்ளன. மேருவையும் வருத்தக்கூடிய பேராற்றல் வாய்ந்த காற்று அந்த உயரத்தில் தென்றலாய் வீசுகின்றதாம்.

*"நாகா லயங்களொடு*
*நாகர்உல கும்தம்*
*பாகார் மருங்குதுயில்*
*என்னஉயர் பண்ப;*
*ஆகாயம் அஞ்சஅகன்*
*மேருவை அணுக்கும்*
*மாகால் வழங்குசிறு*
*தென்றல்வர கின்ற."*[65]

(அணுக்குதல் - வருத்துதல்; மாகால் - பெருமையுடைய காற்று; வழங்கு - இனிதாய் அளிக்கப்பெறுகின்ற)

என்பது கம்பன் வாக்கு. மிக்க வலிமையையுடைய காற்றுக் கடவுளும் இராவணனிடத்து அச்சத்தால் அடங்கித் தென்றலாய் இனிது வீசப்பெற்றிருந்தனன் என்று கவி சமத்காரமாய்க் கூறுவதை அறியலாம். அறிவியல் கருத்து ஈண்டு நயமாய்க் கூறப்பெற்றுள்ளது.

---

65. கம்பரா. சுந்தர. ஊர்தேடு - 2

## 5. மருத்துவ இயல்

தமிழ் இலக்கியத்தில் மருத்துவ இயல்பற்றிய செய்திகளையும் சிகிச்சை முறைகளையும் காணலாம். திருக்குறளிலுள்ள 'மருந்து' என்ற அதிகாரத்தில் நோய்கள் வருவதன் காரணங்களையும், அவை வாராது தடுக்கும் முறைகளையும், அவை வந்தால் தவிர்க்கும் வழிவகைகளையும்பற்றிய செய்திகள் தரப்பெற்றுள்ளன.

> "நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்."[66]

என்பது வள்ளுவம். நோய் வருவதன் காரணத்தையும், நோய் இன்னதென்பதையும் ஐயமறத் துணிந்து மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய முறைகளை மேற்கொண்டு அந்நோயைப் போக்க வேண்டும் என்பது பண்டைய மருத்துவ முறையாகும். இன்றைய மருத்துவ முறையும் இதனையொட்டியே உள்ளது. அங்ஙனமே, நோயற்றவனின் வயது முதலியவற்றையும், அவனுடைய வேதனை, வலி முதலியவற்றையும், காலவேறுபாடுகள் முதலியவற்றையும் நோக்கிச் சிகிச்சை செய்தல் வேண்டும். இதனை,

> "உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
> கற்றான் கருதிச் செயல்."[67]

என்று குறிப்பிடுவர், வள்ளுவப்பெருந்தகை. இங்ஙனம் பல கருத்துகள் இவண் கூறப்பெறுகின்றன.

கண் முதலிய நுட்பமான பகுதிகளில் இரும்புத்தூள் முதலியவை புகுந்துகொண்டால் காந்தத்தைக்கொண்டு இக்காலத்தில் சிகிச்சை செய்கின்றனர். பண்டையோரும் இம்முறையை அறிந்திருந்தனர் என்பதைக் கம்பன் காட்டுகின்றான். இராவண வதம் முடிந்த பிறகு தயரதன் உம்பருலகிலிருந்து நில உலகிற்கு வந்து இராமனுடன் உரையாடும்பொழுது தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றான். இதனைக் கவிஞன்,

---

66. குறள் - 948
67. குறள் - 946

"அன்று கேகயன் மகள்கொண்ட
வரம்எனும் அயில்வேல்
இன்று காறும்என் இதயத்தில்
இடைநின்ற தன்னைக்
கொன்று நீங்கலது இப்பொழுது
அகன்றதுஉன் குலப்பூண்
மன்றல் ஆகமாம் காந்தமா
மணியின்று வாங்க" 68

(அயில்வேல் - கூரிய வேல்; மன்றல் - மணம்; ஆகம் - மார்பு)

என்று குறிப்பிடுவான். அன்று கைகேயி தன் இதயத்தில் பாய்ச்சின வரம் என்னும் கூரிய வேல், இன்று இராமனைத் தழுவியதனால் அவன் மார்பாகிய காந்தம் அதனை வாங்கி விட்டது என்று கூறுவதில் நவீன சிகிச்சை முறையின் குறிப்பைக் கண்டு மகிழலாம்.

கருவுயிர்த்த மங்கையர், குழந்தையை நீராட்டி மருந்தூட்டி வளர்க்கும் திறம் சீவக சிந்தாமணியில் காட்டப்பெற்றுள்ளது.

"காடி யாட்டித் தராய்ச்சாறும்
கன்னல் மணியும் நறுநெய்யும்
கூடச் செம்பொன் கொளத்தேய்த்துக்
கொண்டு நாளும் வாயுறீஇப்
பாடற் கினிய பகுவாயும்
கண்ணும் பெருக உகிர்உறுத்தித்
தேடித் தீந்தேன் திப்பிலிதேய்த்(து)
அண்ணா உறிஞ்சி மூக்குயர்த்தார்."69

(காடி - கஞ்சி; தராய்ச் சாறு - பிரமிச்சாறு; கன்னல்மணி - கருப்புக்கட்டி; வாயுறீஇ - வாயில் உறுத்தி; பெருக - பெரிதாகும்படி; உகிர் உறுத்தி - நகத்தால் அகலமாம்படி செய்து; அண்ணா - உண்ணாக்கு)

என்ற பாடலில், குழந்தை பிறந்தவுடன் அதற்குச் செய்யும் செயல்கள் இதில் குறிப்பிடப்பெறுகின்றன. செய்திகளை எண்ணி எண்ணி மகிழலாம். நவீன மருத்துவர்களும் அறியாத எவ்வளவு செய்திகள் இதில் காட்டப்பெறுகின்றன!

68. கம்பரா. யுத்த. மீட்சி - 118

69. சீவக சிந் - முக்தி இலம்பகம் - 2703 (105)

## 6. கணித இயல்

கவிஞன் வாக்கில் கணித உண்மை கற்பனையாய்க் காட்டப்பெறுகின்றது. ஒரு வடிவக் கணிதத்திலுள்ள (Geometry) தேற்றம் (Theorem) ஒன்றையும் கவிதை ஒன்றனையும் கற்பிப்பதிலுள்ள வேற்றுமையை எண்ணிப்பார்த்தால் இது தெளிவாய்ப் புலனாகும். தேற்றத்தைக் கற்பிக்கும் பொழுது ஆசிரியர் தாம் கற்பிக்கப்போகும் தேற்றத்தின் உண்மையைத் திட்டமாய் அறிந்துகொண்டுள்ளார். எனவே, நம்பிக்கையுடனும் மன உறுதியுடனும் அதனைக் கற்பிக்கும் பணியில் இறங்கு கின்றார். ஆனால், கவிதை கற்பிக்கும் பெரும்பாலோருக்குத் தாம் கற்பிக்கும் கவிதை மேற்குறிப்பிட்ட தேற்றத்தைப் போன்று உண்மையானதாய்த் தோன்றுவதில்லை; அஃது அழகையும் இன்பத்தையும் நல்க வல்லதாய் இருப்பினும், தேற்றத்தில் பொதிந்துள்ள உண்மையைப் போல், அஃது அவர்கட்குப் புலனாவதில்லை; அவர்கள் மனத்தைக் கவ்வுவதுமில்லை. ஆயின், கவிதை கூறும் உண்மைதான் என்ன? கவிதை வாழ்க்கையின் உண்மைகளைக் கூறுகின்றது. "கவிதை, வாழ்வி லிருந்து மலர்ந்தது; வாழ்விற்கே உரியது; வாழ்விற்காகவே நிலைபெற்றுள்ளது"[70] என்று **அட்சன்** என்ற திறனாய்வாளர் கூறுவது ஈண்டுச் சிந்தித்தற்குரியது. பொருள்களின் தன்மைக் கேற்றவாறு காணச்செய்வது, அறிவியல்; நடந்ததை நடந்த படியே உணர்த்துவது, வரலாறு; எப்படி இருந்தது என்பதைக் கூறுவது, கணிதம். 4 + 4 = 8 என்பது போல் கூறுவது. வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்று கூறுவது கவிதை. அரிஸ்டாட்டில் கூறுவதுபோல, "கவிதையின் படைப்புகள் மெய்ம்மையானவை அல்ல; ஆனால், உயர்ந்த உண்மைத் தத்துவம் அமைந்தவை. எப்படி இருக்க வேண்டுமோ அவை களேயன்றி, எப்படி உள்ளனவோ அவை அல்ல" என்பதைப் புரிந்துகொண்டால் கவிதை கூறும் உண்மை ஒருவாறு புலனாகும்.

கணித உண்மையையே கற்பனை கலந்த உண்மையாய் அற்புதமாய்க் கூற வல்ல ஆற்றல் மிக்கது, கவிதை. கம்பனின்

---

70. Poetry is made out of life, belongs to life, exists for life" - Hudson : An Introduction to the study of Literature - p.92.

இராம காதையில் ஒரு நிகழ்ச்சி - மூல பலம் இலங்கையில் வந்து திரளுகின்றது; எல்லாத் திக்குகளிலிருந்தும் எண்ணற்ற அரக்கர்கள் வந்து சேர்கின்றனர். வந்த சேனையின் அளவைக் கணக்கிட்டுக் கூறும்படி கேட்க, அதற்குத் தூதுவர், "இச்சேனையின் **ஆயிரம் வெள்ளம்** என உரைப்பர், பித்தர்; கணித நூலிலுள்ள உச்ச எண்ணே இதனை அளவிட்டு உரைத்தற்குச் சாலாது"[71] என்று பதிலிறுக்கின்றனர். **'வெள்ளம்'** என்ற அளவினை **முதலில்** தெரிந்துகொள்ள வேண்டும். தொன்றுதொட்டு வழங்கிய தமிழ் எண்களையும், இடைக் காலத்தில் வந்து புகுந்த வடமொழி எண்களையும் **பிங்கலந்தை** என்ற நிகண்டு நூல் பின்வருமாறு வகைப்படுத்தித் தொகுத்துரைக்கின்றது.

"ஏகம் எண்மடங்கு கொண்டது **கோடி**"
"கோடி எண்மடங்கு கொண்டது **சங்கம்**"
"சங்கம் எண்மடங்கு கொண்டது **விந்தம்**"
"விந்தம் எண்மடங்கு கொண்டது **குமுதம்**"
"குமுதம் எண்மடங்கு கொண்டது **பதுமம்**"
"பதுமம் எண்மடங்கு கொண்டது **நாடு**"
"நாடு எண்மடங்கு கொண்டது **சமுத்திரம்**"
"சமுத்திரம் எண்மடங்கு கொண்டது **வெள்ளம்**"

இம்முறைப்படி நோக்கினால் எட்டாம் தானத்தது கோடி (10000000). பதினைந்தாம் தானத்தது **சங்கம்**. இருபத்திரண்டாம் தானத்தது **விந்தம்**. இருபத்தொன்பதாந்தானத்தது **குமுதம்** (ஆம்பல்). முப்பத்தாறாம் தானத்தது **பதுமம்** (தாமரை). நாற்பத்து மூன்றாம் தானத்தது **நாடு** (குவளை). ஐம்பதாம் தானத்தது **சமுத்திரம்** (நெய்தல்). ஐம்பத்தேழாம் தானத்தது **வெள்ளம்** என்பன புலனாகும். இதனை இக்காலக் கணக்குப்படி $10^{6+7+7+7+7+7+7+7} = 10^{55}$ என்று எழுதலாம். இந்தக் கணித எண்ணை மனத்தால் அறிந்து பார்ப்பது எளிதன்று. கணித உண்மை நம் சிந்தனையை எட்ட முடியவில்லை. ஆனால், இந்தச் சேனையின் அளவைக் கவிதை உண்மையால் காண்போம். மூலபலம் முழுவதும் ஏழரை நாழிகைக்குள் (மூன்று மணிக்குள் - 3 முகூர்த்த காலம்) அழிந்துபடுகின்றது. இதனைக் கம்பநாடன்,

---

71. கம்பராம. யுத்த. படைக்காட்சி - 30.

"ஆனை ஆயிரம் தேர்பதி னாயிரம்
அடல்பரி ஒருகோடி,
சேனை காவலர் ஆயிரம் பேர்படின்,
கவந்தம் ஒன்று எழுந்தாடும்;
கானம் ஆயிரம் கவந்தம்நின்று ஆடிடின்
கவின்மணி கணில்என்னும்
ஏனை அம்மணி ஏழரை நாழிகை
ஆடியது இனிதன்றே."[72]

என்று கூறுவான். ஆயிரம் யானைகள், பதினாயிரம் தேர்கள், ஒருகோடி குதிரைகள், ஆயிரம் சேனைக்காவலர்கள் இறந்துபட்டால் தலையில்லாத பேய் (கவந்தம்) ஒன்று எழுந்து ஆடுமாம். ஆயிரம் கவந்தங்கள் ஆடினால் இராமனது கோதண்டத்தில் கட்டப்பெற்றுள்ள அழகிய மணி ஒருமுறை 'கணீல்' என ஒலிக்குமாம். ஆனால், இராமனது மூல பல வதைப் போரில் அம்மணி தொடர்ந்து, தீயணைக்கும் படையினர் செல்லும் மோட்டார் வண்டியில் ஒலிக்கும் மணிபோல், ஏழரை நாழிகை ஒலித்ததாம். கவிஞன் கூறும் இந்த உண்மையைக் கொண்டு அழிந்துபட்ட மூலபலச் சேனையின் அளவினை ஓரளவு நம் மனத்திரையில் அமைத்துக்கொள்ள முடிகின்றது. மூலபலத்தின் அளவை நாம் நன்கு உணர்ந்துகொள்கின்றோம். கணித உண்மையைவிடக் கவிஞன் கூறும் உண்மை இதற்கு நன்கு பயன்படுகின்றது. இதிலிருந்து, கவிதை உண்மையின் தன்மையை ஒருவாறு நாம் புரிந்துகொள்ளலாம்.

மெய்ம்மைகளை (Facts) அப்படியே இருந்தவாறே கூறுவது கவிதை உண்மையன்று; அவற்றைத் திரித்துக் கூறுவதும் அஃதன்று; திரித்துக் கூறுவது பொய்ம்மை; புனைந்துரை. மெய்ம்மைகளை அப்படியே கூறுவது, அறிவியல். இங்ஙனம் பல்வேறு உண்மைகளை, மெய்ம்மைகளை, உணர்ச்சியுடன் உணரச்செய்வது கவிதை உண்மையாகும். அது நம் உள்ளத்தில் இன்ப உணர்ச்சிகளையோ துன்ப உணர்ச்சிகளையோ, நம்பிக்கையையோ அச்சத்தையோ, வியப்பினையோ சமய ஈடு பாட்டையோ எழுப்ப வல்லது. எனவே, கவிதை உண்மை என்பது, பொருள்களை இருந்தபடியே எடுத்துரைப்பதன்று.

72. கம்பரா.யுத்த. மூலபலம் - 228. வில்லி பாரதத்திலும் இதே மாதிரி ஒரு கணக்கு உள்ளது.

அவற்றின் அழகையும் மர்மத்தையும், கவர்ச்சியையும், அவை நமக்குப் பொருள் விளக்கம் தரும் முறையினையும் எடுத்துரைப் பதாகும். சுருங்கக் கூறின், கவிதை உண்மை என்பது கற்பனை மூலமும் உணர்ச்சிகளின் மூலமும் நம் வாழ்க்கையின் உண்மையை எடுத்துரைப்பதாகும். வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத் தன்மையை எடுத்துரைப்பதே கவிதையின் நோக்கமாகும்.

**வாழ்க்கை உண்மைகள்** : வாழ்க்கை என்பது நிலை பேறுடையது; மனித இனம் இம்மன்பதையில் உள்ளவரை தொடர்ந்து நடைபெறுவது. வாழ்க்கையில் இன்பங்களும் உள்ளன, துன்பங்களும் உள்ளன; நிறைந்திருக்கின்றன. அல்லல்களும் தொல்லைகளும் காணப்பெறுகின்றன. ஆன்மாவைக் கொல்லும் பாவம் என்ற புற்றுநோய் அங்கு உண்டு; ஆழம் காண முடியாத காதல் அங்குக் காணப்படும். வாழ்வை வளமாக்கும் நம்பிக்கை, புகழ் மணக்கச்செய்யும் துணிச்சல் போன்ற பண்புகள் அதில் இடம் பெறும். இத்தனையும் பல படலங்கள்போல் கவிந்துள்ள வாழ்க்கை நம்மைக் கவர்கின்றது; ஆனால், என்றும் அது நமக்கு மனநிறைவினைத் தருவதில்லை. இத்தகைய வாழ்க்கையைப்பற்றித்தான் மாபெருங் கவிஞர்கள் பலபடக் கூறியுள்ளனர். இவர்கள் வாழ்க்கையின் கூறுகள் யாவற்றையும் ஆழ்ந்து காண வல்லவர்கள்; வாழ்க்கையின் பல்வேறு உண்மைகளை நாம் உணரும்வண்ணம் விளக்க வல்ல ஆற்றல் பெற்றவர்கள். தமிழ் இலக்கியத்தில் கவிதை வடிவில் பொதிந்து வைத்துள்ள இத்தகைய உண்மைகள் பல நூற்றாண்டுகள் கழிந்த பின்னரும் கவிதைகளைப் படிக்கும் நமக்கு எடுத்து உரைத்துக்கொண்டே உள்ளன. கதிரியக்கப் பொருள் களிலிருந்து கதிர்கள் வெளிவருவதைப்போல், இலக்கியங் களிலிருந்து பல வாழ்க்கை உண்மைகள் வந்துகொண்டே உள்ளன. இவை மன்பதை என்றும் மறவாமல் நினைவில் இருத்த வேண்டிய உண்மைகள். துன்பக்கடல் போன்ற இவ்வுலகில் 'மம்மர் அறுக்கும் மருந்தாய்'[73] இருந்துகொண்டு இன்பம் பயக்கவல்ல இலக்கியங்களை நாம் கவனிக்காமல் உதாசீனம் செய்தால், நமக்கு உலகில் ஆறுதல் அளிக்கக்கூடிய பொருள்களே இல்லை என்றாகிவிடும்.

73. நாலடியார் - 132

## 7. வானொலியும் தொலைக்காட்சியும்

இறுதியாக, பாரதிதாசன் பாடல்களுள் ஒன்றைக் காட்டி என் இன்றைய உரையைத் தலைக்கட்ட நினைக்கின்றேன்.

வானொலி நிலையத்திலுள்ள நம் உள்ளங்கை அளவுள்ள ஒலிவாங்கியின் (mike) வாய் மண்ணைத் தின்ற கண்ணனின் வாய்போல் உலகனைத்தையும் உண்டு உமிழும் வாயாய் அமைந்துள்ளது. அங்ஙனமே தொலைக்காட்சி நிலையத்திலுள்ள நமது கண்ணைவிட மிகவும் சிறியதாய் உள்ள ஒளியின் சாரக்கலம் என்னும் மாயக்கண் இந்த அகிலம் முழுவதையும் ஊடுருவிப் பார்க்க வல்லதாய் அமைந்துள்ளது.

வானவெளியில் கோடானுகோடி சூரியர்களுள் நமது சூரியனும் ஒன்று. அத்தனைச் சூரியர்களுள்ளும் நமது சூரியன் தரத்திலும் அளவிலும் மிகச்சிறியது. இந்தச் சிறிய சூரியனைச் சுற்றியோடும் கோள்களுள் மிகச்சிறியது, நாம் வாழும் பூமண்டலம் - இந்த மண்ணுலகம். அதன் பரப்பில் மிகச்சிறிய இனத்தைச் சார்ந்த மானிடர்கள் நாம்; பிணி மூப்பு சாக்காடு உடையவர்கள். இத்தகைய மக்களாகிய நாம் நிறுவிய சிறியதொரு வீட்டினுள் அமைந்த சின்னஞ்சிறிய கருவியொன்று உலகனைத்தையும் செவிசாய்த்துக் கேட்கின்றது. மற்றொன்றோ உலகம் முழுவதையும் ஏறிட்டுப் பார்க்கின்றது. உலகனைத்திலு முள்ள கலைகளை ஒன்றாய்த் திரட்டி, எப்பகுதிகளிலும் சுரக்கும் அறிவினை ஒன்றாய்ச் சேர்த்து ஞானப்பாலாய் ஊட்டும் தாயர்களாய் அமைகின்றன, இக்கருவிகள். தேசிய ஒருமைப் பாட்டிற்காய்க் கோடானுகோடி பணத்தைச் செலவிட்டுத் தம்பட்டமடித்து அதனை நாம் நினைக்கின்றவாறு பெறமுடியாமல் தத்தளித்துக்கொண்டுள்ளோம். ஆனால், இவை இரண்டுமோ உலக ஒருமைப்பாட்டினையே விளைவித்து வருகின்றன! உலக மக்கள் அனைவரையும் ஒருதாய் வயிற்று மக்கள் போல் ஒன்றாய்ப் பிணைக்க முயன்றுகொண்டு வருகின்றன.

*   *   *   *

வானொலியும் தொலைக்காட்சியும் மின்னணுவியல் சகோதரிகள். அவர்களுள் ஒருவர், செவிமடுத்தியார்; மற்றொருவர், கண்ணம்மையார். மானிடச் சகோதரிகளைப் போலவே இவர்களிடமும் சில பொதுவான பண்புக் கூறுகள் அமைந்துள்ளன. இந்த இரு சகோதரிகளின் பிறப்பைப்பற்றிப் பாவேந்தர் கனவு கண்டுள்ளார். கவிஞர் கற்பனையில் பிறந்த இந்த இருசகோதரிகளும் பாவேந்தரின் "சஞ்சீவி பர்வதத்தின் சாரல்" என்ற காவியப்போக்கில் படைக்கப்பெற்ற ஒரு கற்பனைச் சொல்லோவியத்தில் இலைமறைவாய்க் காட்சி தருகின்றனர்; மூலிகைகள் என்ற திருநாமம் பெறுகின்றனர்.

குப்பனும் வள்ளியும் அந்த மலையில் சந்திக்கின்றனர். அந்த மலையில் இரு மூலிகைகள் இருப்பதாய்க் கற்பனை செய்கின்றார், கவிஞர். அவற்றின் அருமைப்பாட்டைக் குப்பன்,

*"ஒன்றைத்தின் றால்இவ் உலகமக்கள் பேசுவது*
*நன்றாகக் கேட்குமற் றொன்றைவா யில்போட்டால்*
*மண்ணுலகக் காட்சிஎலாம் மற்றிங் கிருந்தபடி*
*கண்ணுக் கெதிரிலே காணலாம்."*[74]

என்று வள்ளிக்குக் கூறுகின்றான். கவிதையின் இந்தப் பகுதியைப் படிக்கும்போது நமக்கு வானொலியும் தொலைக் காட்சியும் நினைவிற்கு வருகின்றன. ஒரு மூலிகை வானொலியையும் மற்றொரு மூலிகை தொலைக்காட்சியையும் குறிப்பிடுவதாய் நாம் கொள்ளலாம். இங்ஙனம் கவிஞரிடம் தோன்றிய கற்பனைதான் நாளடைவில் அறிவியலறிஞர்களின் ஆராய்ச்சிமூலம் புதுப்புனைவுகளாய் வடிவெடுத்தது என்று கருதுவதில் தவறொன்றும் இல்லை.

குப்பன் வள்ளியைத் தூக்கிக்கொண்டு 'விட்டெறிந்த கல்லைப் போல்' மலையின்மீதேறிப் பாய்கின்றான். மூலிகை இருந்த இடத்தில் அவளை இறக்குகின்றான். இளவஞ்சி மூலிகைகளைக் கிள்ளிக்கொள்ளுகின்றாள். இருவரும் சிறிது வழி நடந்து, ஒரு மரத்து நிழலில் ஆர ஆமர நிற்கின்றனர். இருவரும் ஒரு மூலிகையைத் தின்றதும், வையத்து மாந்தர்கள் எந்த

74. சஞ்சீவி பர்வதத்தின் சாரல் - அடி 43-47 (பாரதிதாசன் கவிதைகள் - முதற்பகுதி)

மொழியில் பேசினாலும் அவர்கள் நெஞ்சம் வசமாய் அவர் பேசுதல்போல் செந்தமிழில் தங்கள் செவியால் கேட்கின்றனர். கவிஞர் கற்பனை செய்த வானொலியில் மொழிபெயர்க்கும் வேலையும் நடைபெற்றுவிடுகின்றது. இத்தாலி நாட்டான், நல்ல அமெரிக்க நாட்டான், பொல்லா ஆங்கில நாட்டான் பேசுவதைத் 'தமிழில்' இவர்கள் கேட்கின்றனர். அவர்கள் மனப்பான்மையைச் சஞ்சீவி பர்வதத்தில் உலவும் இவர்கள் அறிகின்றனர்.

வள்ளி சிலைபோல் மாறி நாட்டுநிலையைச் சிந்திக்கின்றாள். மூலிகையால் நாட்டின் நிலையை அறிந்ததுபற்றி மகிழ்கின்றாள். மூலிகையைக் கொண்டுவந்த களிப்பில் குப்பன் வள்ளியை முத்தமிடப் போகும்போது 'ஐயையோ ஐயையோ' என்று ஆரவாரத்துடன் எழுந்த அவள் மொழி, அவனைத் திடுக்கிடச்செய்கின்றது. பாகவதர் ஒருவர் இராமாயணக் கதையில் அநுமன் சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கிக்கொண்டு போகும் கட்டத்தைக் காலட்சேபம் செய்துகொண்டிருந்த நிகழ்ச்சி அது. குப்பன் தான் நின்றுகொண்டிருந்த சஞ்சீவி மலைக்குத்தான் ஆபத்து வந்துவிட்டதென்று அஞ்சி நடுங்குகின்றான். வஞ்சி அவனது மூடத்தனத்திற்கு இரங்கி, பரிகசித்து, இராமாயணக்கதையில்தான் மலை தூக்கப்பட்டதே யன்றித் தாம் இருந்த மலைக்கு ஒன்றும் நேரவில்லை என்று கூறிக் கதையைத் தொடர்ந்து கேட்குமாறு பணிக்கின்றாள். கதை முடிகின்ற கட்டம் வந்துவிடுகின்றது.

இப்போது கையிலிருந்த மற்றொரு மூலிகையை இருவரும் விழுங்குகின்றனர். இருவரும் இராமாயணக்கதை நடைபெறும் இடத்தை நேரில் கண்ணுறுகின்றனர். தொலைக்காட்சியில் பார்ப்பது போல நிகழ்ச்சிகள் அவர்களது கண்ணுக்குத் தெரிகின்றன. தெருவொன்றில்,

*"மாளிகைக் குள்ளே மனிதர்கூட் டத்தையும்*
*ஆளிவாய்ப் பாகவதன் அங்கு நடுவிலே*
*உட்கார்ந் திருப்பதையும் ஊர்மக்கள் செல்வதையும்*
*பட்டைநா மக்காரப் பாகவதன் ரூபாயைத்*
*தட்டிப்பார்க் கின்றதையும் சந்தோஷம் கொள்வதையும்"*

---

75. சஞ்சீவி பர்வதத்தின் சாரல்

இருவரும் காண்கின்றனர். இதுதான் புரட்சிக்கவிஞர் படைத்துக்காட்டிய கற்பனைக்கதையின் சுருக்கம். ஒரு மூலிகையால் அமெரிக்கன் முதலியோர் பேசுவதைக் கேட்பது வானொலியைக் குறிப்பிடுகின்றது என்றும், மற்றொரு மூலிகை இராமாயணக் காலட்சேபத்தை நேரில் காண்பது தொலைக் காட்சியைக் குறிப்பிடுகின்றது என்றும் கருதலாம் அல்லவா?

**முடிவுரை :** அன்பர்களே, இன்றைய சொற்பொழிவில் அறக்கட்டளை நிறுவிய பேராசிரியர் டாக்டர் எஸ். சங்கர ராஜு நாயுடு அவர்களைப்பற்றியும், அவர் அருமைத் தந்தையார் நிமிஷகவி சுப்பைய நாயுடு அவர்களைப்பற்றியும் சில குறிப்புகள் தந்தேன்.

பண்டைய தமிழர்களிடம் அறிவியலறிவு நிறைந்திருந்தது என்பதற்கும், அதனை அவர்கள் நன்கு வளர்த்தனர் என்பதற்கும் தனி நூல்களின் சான்றுகள் இல்லாது போயினும், அவர்களின் அறிவியற்கலைகள் பயன்முறைக் கலைகளாய் இருந்தன என்பதற்குச் சில இலக்கியச் சான்றுகளை உங்கள் திருவுள்ளத் திற்கு எடுத்துக் காட்டினேன்.

பண்டையோர் வானநூல் துறையில் அறிவுமிக்கு விளங்கினர் என்பதைப் புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, சிலப்பதி காரம், புறப்பொருள் வெண்பா மாலை போன்ற நூல்களில் சான்றுகள் கிடைக்கின்றன என்பதை நிலைநாட்டினேன். இராசி மண்டலம் இன்னது என்பதைத் தெளிவாக்கினேன். கலிலியோ கருத்தைப் காப்பர்னிகஸ் மறுத்து உண்மை நிலையை நிறுவினார் என்பதைப் புலப்படுத்தினேன். காலதத்துவத்தை வள்ளுவர் குறள்மூலம் தெளிவாக்கினேன். அகிலம் இன்னதென்பதை மணிவாசகப்பெருமானின் கருத்தை அடிப்படையாய்க்கொண்டு விளக்கினேன். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், தாயு மான அடிகள் இவர்களின் வாக்குகளைக்கொண்டு பரம் பொருள் இன்னதென்பதைச் சுட்டி உரைத்தேன். அண்டங்கள் 'நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன' என்ற மணிவாசகர் கருத்துக்குப் பாரதியாரின் பாடல் விளக்கமாய் அமைந்திருப்பதைப் புலப்படுத்தினேன். இந்த அற்புதக் கருத்தைத் திரிகூடராசப்பக் கவிராயரின் பாடல் நுட்பமாய் விளக்கி நிற்பதைத் தெளி வாக்கினேன். அறிவுலக மேதை ஐன்ஸ்டைனின் கருத்தையும்

எடுத்துக் காட்டினேன். அணுவின் அமைப்பையும் அண்டங்களின் அமைப்பையும் ஒப்பிட்டுக் காட்டி, இந்த இரண்டனையும் தில்லைத் திருச்சிற்றம்பலவனின் ஆனந்தக் கூத்து அற்புதமாய் விளக்குவதாய் அமைகின்றது என்பதைச் சுட்டிக் காட்டினேன். இதனை, கம்பன் காட்டும் பாங்கையும் புலப்படுத்தினேன். விஞ்ஞானத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் இணைத்துக் காட்டுவதற்கு மணிவாசகர் பாடலும் சேக்கிழார் பாடலும் சான்றுகளாய் அமைந்திருப்பதை எடுத்துக் காட்டினேன். கதிரவனின் இயக்கத்தைக் கம்பன் காட்டியுள்ளதைத் தெளிவாக்கினேன். திவ்விய கவியின் பாடலைச் சாக்லட்போல் சுவைக்கச் செய்து அண்டங்களை அரங்கநாதன் அமைத்த அற்புதப் பாங்கை நயம்பட விளக்கினேன்.

இராசி மண்டலத்திலுள்ள மேடம், இடபம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீன இராசிகளைக் காட்டும் திவ்விய கவியின் கற்பனை நயத்தினையும் இலக்கியச் சுவையையும் புலப்படுத்தினேன். மூல நட்சத்திரம், அவிட்ட நட்சத்திரம் ஆகிய இரண்டிலும் காட்டப்பெறுகின்ற அற்புதக் கோலத்தைத் தெளிவாக்கினேன்.

பண்டையோர் பொறிநுட்ப அறிவினைக் கல்லணை, கம்பன் பாடல் இவற்றின் மூலம் ஓரளவு தெளிவாகின்றது என்பதைப் புலப்படுத்தினேன். அவதாரங்கள் சிறப்பைக் காளமேகத்தின் கவிதையால் காட்டினேன்.

பண்டையோரின் உயிரியல் அறிவையும் மரபு வழியையும் மணிவாசகரின் பாடல், பலராமனின் பிறப்பு, வள்ளுவரின் வாக்கு, கபிலரகவல், சிகண்டியின் கதை, புராணக் குசேலரின் வரலாறு போன்றவற்றால் விளக்கினேன்.

வானியல் துறையில் அவர்கள் பெற்றிருந்த அறிவைக் கம்பன் பாடலாலும், மருத்துவத்துறையில் அவர்கள் பெற்றிருந்த அறிவு நுட்பத்தை வள்ளுவம், கம்பராமாயணம், சீவக சிந்தாமணி ஆகிய இலக்கியங்களைக்கொண்டும் நிலைநிறுத்தினேன். கணித இயலில் அவர்கள் கொண்டிருந்த நுண்மாண் நுழைபுலத்தைக் கம்பராமாயணம், பிங்கலந்தை போன்றவற்றாலும் விளக்கினேன். வானொலி, தொலைக்காட்சிபற்றிய சிந்தனையைப் பாவேந்தரின் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் என்ற

நெடும்பாட்டால் நெஞ்சு நெகிழும்வண்ணம் சுட்டினேன் இங்ஙனமாய் என் முதற்பொழிவை,

"மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும் போது
மதன்எனும் பாறை தாக்கி
மறியும்போ(து) அறிய ஒண்ணாது
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே"[76]

என்ற அப்பர் சுவாமிகளின் தேவாரப் பாடலுடனும்,

"செந்தழலே வந்து அழலைச்
செய்திடினும் செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற்கு
அல்லால் அலராவால்,
வெந்துயர்வீட் டாவிடினும்
வித்துவக்கோட் டம்மா! உன்
அந்தமில்சீர்க் கல்லால்
அகம்குழைய மாட்டேனே"[77]

என்ற குலசேகரப்பெருமாளின் திருவித்துவக்கோட்டு அம்மானின் திருப்பாசுரத்துடனும் இன்றைய பொழிவை நிறைவு செய்கின்றேன்.

வணக்கம்.

76. தேவாரம் (அப்பர்) : 4.46:2

77. பெருமாள் திருமொழி 5 : 6

## இரண்டாம் பொழிவு

# 2. அறிவியல் நோக்கில் சமயம், தத்துவம்

*"அறிவிலே தெளிவு நெஞ்சிலே உறுதி*
*அகத்திலே அன்பினோர் வெள்ளம்,*
*பொறிகளின் மீது தனியர சாணை*
*பொழுதெலாம் நினதுபே ரருளின்*
*நெறியிலே நாட்டம், கரும யோகத்தில்*
*நிலைத்திடல் என்றிவை அருளாய்!*
*குறிகுணம் ஏதும் இல்லதாய் அனைத்தாய்க்*
*குலவிடு தனிப்பரம் பொருளே!"*[1]

*"தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர*
*மொழிந்திடுதல்; சிந்திப் பார்க்கே*
*களிவளர உள்ளத்தில் ஆனந்தக்*
*கனவுபல காட்டல், கண்ணீர்த்*
*துளிவரஉள் உருக்குதல்இங் கிவையெல்லாம்*
*நீஅருளும் தொழில்கள் அன்றோ?*
*ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்கு*
*இவையனைத்தும் உதவு வாயே"*[2]

*- பாரதியார்*

***அறிஞர் பெருமக்களே!***
***மாணவச் செல்வங்களே!***

இன்றைய பொழிவு **'அறிவியல் நோக்கில் சமயம் தத்துவம்'** பற்றியது. என்னுடைய சிற்றறிவுக்கு எட்டியவரையில் இதனை மனநிறைவு கொள்ளும்வரையில் ஆற்ற முயல் கின்றேன்.

சொற்பொழிவுத் தலைப்பில் நுழைவதற்கு முன்னர் **'சமயம், தத்துவம்'** என்ற இரு சொற்களின் பொருளை நோக்குவோம்.

---

1. பாரதி : சுயசரிதை - 49
2. பாரதியார் : பாஞ்சாலி சபதம் - சூதாட்டச் சருக்கம் - 154

இவ்வுலகம் தோன்றிய நாள்தொட்டு மக்களிடையே ஏதோ ஒருமுறையில் சமய வளர்ச்சி நிலவி வருகின்றது. காலப் போக்கில் மக்களின் அறிவு முதிர்ச்சிக்கேற்ப இச்சமய வளர்ச்சி யும் பல்வேறு திசைகளில் பல்வேறு கொள்கைகளுடன் கூடிய பல்வேறு பிரிவுகளாக விரிந்துவிட்டன. இங்ஙனம் பல்வேறு பிரிவுகளாக வளர்ந்த சமயம் ஏதோ ஒருமுறையில் மக்களின் உயிரோடும் உடலோடும் ஒன்றி நிற்கின்றது. பகலவனையும் கதிர்களையும் வெவ்வேறு வகையாகப் பிரித்தற்கியலாதது போலவே, சமயத்தையும் மக்களையும் தனித்தனியே பிரித்தற் கியலாது. அதனால் சமயம் என்பதற்கு **நெறி, கொள்கை** என்ற பெயர்களும் ஏற்படலாயின. **மக்கள் அன்றாட வாழ்க்கையை ஒழுங்குடன் நடத்துவதற்கு அமைத்துக்கொண்ட நன்னெறிகளின் தொகுதியே சமயம் என்று வழங்கப்பெறுவதாகக் கொள்ளலாம்.**

அடுத்து **'தத்துவம்'** என்ற சொல்லின் பொருளை நோக்குவோம். தத் + துவம் = தத்துவம் என்றாகும். **'தத்'** என்ற வடசொல் **'அது'** என்ற பொருள்படும்; **'துவம்'** என்பதற்குத் **'தன்மை'** என்பது பொருளாகும். பிரபுத் தன்மை, சகோதரத் தன்மை என்னும் பொருளில் பிரபுத்துவம், சகோதரத்துவம் என்னும் சொற்கள் வழங்குதலைக் காணலாம். **'துவம்'** என்னும் விகுதி பண்புப்பொருள் பயத்தலின், **'தத்துவம்'** என்ற சொல் **'அதன் தன்மை'** எனப் பொருள்படும். **'அது'** என்னும் சுட்டுப் பெயர் சமயந்தோறும் வேறு பொருளைக் குறிக்கும். ஆதலின், **பொருள் தன்மைகளை ஆராய்ந்து மெய்ம்மையினை நிலை நாட்டும் அறிவுக்கலைக்குத் 'தத்துவம்' என்னும் குறியீடு வழங்கப்பட்டது** என்று கொள்ளலே ஏற்புடையதாகும். இந்தச் சொல்லுக்கு இணையாய் **மெய்ப்பொருள்** (குறள்), **சமயக் கணக்கு** (மணிமேகலை) என்னும் குறியீடுகள் தமிழிலக்கியங் களில் பயின்று வருதலைக் காணலாம். வள்ளுவப் பெருந்தகையும்,

> *"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
> *மெய்ப்பொருள் காண்பது அறிவு"* (குறள் - 335)

என்னும் தத்துவ ஞானந்தான் தலையாய அறிவு என்று சுட்டியிருத்தல் உளங்கொள்ளத்தக்கது. மெய்ப்பொருள் என்பது **உள்பொருள்** (Reality) எனவும் கொள்ளத்தகும். தத்துவ மேதை களைச் **'சமயக் கணக்கர்'** என்று சாத்தனாரும் (மணிமேகலை)

கல்லாடனாரும் குறித்தனர். மணிமேகலை போதிசத்துவராகிய அறவண அடிகளிடம் அணுகி,

"அடிகள் **மெய்ப்பொருள்** அருளுக" (20 : அடி 47)

என்று வேண்டுவதாய்க் குறிப்பிட்டிருத்தலைக் காணலாம். பௌத்த தருக்கமும் தத்துவமும் அறவண அடிகளால் அறச்செல்வர்க்குப் போதிக்கப்பெறுவதால் **'மெய்ப்பொருள்'** என்பது, உண்மை காண்பதற்குக் கருவியாய்ப் பயன்படும் அளவை இலக்கணத்தையும், அளவைகளால் துருவிக் கண்ட உண்மைப் பொருளையும் உணர்த்துகின்றது எனக் கொள்ளலாம்.

இனி, இந்தப் பொழிவின் தொடக்கமாய் ஆதிமுதல் இன்றுவரை அறிவியல் தோன்றி வளர்ந்த வரலாற்றைச் சுருக்கமாய்க் கூறுவது பொருத்தமாகும் எனக் கருதுகின்றேன்.

## 1. அறிவியல் தோற்றமும் வளர்ச்சியும்

நினைப்பிற்கெட்டாத நெடுங்காலத்திற்கு முன்னதாகவே - இலக்கியச்சுவையுடன் சொன்னால், கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திற்கு முன்பாகவே - மனிதன் காட்டுமிராண்டியாய் வாழ்ந்த காலத்திலேயே, வியப்பு அச்சம் காரணமாய் கண்காணா ஏதோ ஓர் இயற்கைச் சக்தியின்மீது வழிபாடு நடைபெற்று வந்துள்ளதாய் அறிகின்றோம். உயிரினங்கள் இவ்வுலகில் தோன்றிப் படிப்படியாய் வளர்ந்த பாங்கின் இறுதிக் கட்டமாய்த் தோன்றியது மனித இனம் என்பது தொல்லாசிரியர்களின் முடிந்த முடிபாகும். தொடக்க கால மனிதனின் வாழ்க்கை, விலங்கு வாழ்க்கைபோல் அமைந்திருந்தது. படிப்படியாய்க் கூட்டு வாழ்க்கையை அமைத்துக் கொண்டு வாழத் தொடங்கினான். இந்த வாழ்க்கையின் அநுபவத்தால், வளர்ச்சியின் முதிர்வால், சமுதாயக் கோட்பாடுகளை அமைத்துக்கொண்டு வாழத் தொடங்கினான். இந்த உலகப் பொருள்களுக்கும் உயிர்ப்பொருள்களுக்கும் தானே தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அவற்றைத் தன் வசதிக்காகப் பயன்படுத்தவும் கற்றுக்கொண்டான்.

கற்காலத்திலிருந்தே மனித மூதாதையர்கள் உலகம், ஆன்மா, கடவுள் என்ற முப்பொருள்களால் தங்கள் வாழ்வின் இன்ப துன்பங்கள் அமைவதாய் எண்ணினர்; அநுபவத்தால் உணர்ந் தனர். இவற்றைப்பற்றிய உண்மைகளைத் தேடவும் முற் பட்டனர். இவற்றுள் உலகம்பற்றிய அறிவே அறிவியலாகவும், ஏனைய ஆன்மா, கடவுள் ஆகிய இரண்டும் சமயம், தத்துவங்களாகவும் கருதப்பெறுகின்றன.

உலகம் என்பது நாம் வாழும் பூமியை மட்டிலும் குறிக்காது. இந்த அண்டசராசரங்களையே குறிக்கும். அண்டங்கள் யாவும் அடங்கிய அகிலத்தைக் (Universe) குறிக்கும். தொடக்க காலத்தில் இந்த அகிலத்தைப்பற்றிய தவறான கருத்துகளே மனிதர்களிடம் இருந்தன. சந்திரன், சூரியன், நெருப்பு இவற்றைக் கடவுள்களாகக் கருதி வழிபட்டனர். கி.மு. 6ஆம் ஆண்டுமுதல் இத்தகைய நம்பிக்கைகளைத் தவிர்த்துப் பகுத்தறிவு முறையில் அறிஞர் சிந்திக்கத் தொடங்கினர். இதுவே அறிவியலின் தொடக்கம். ஆயினும், அதற்கு நீண்ட காலத்திற்கு முன்னதாகவே வாழ்க்கைக்கு மிக இன்றியமையாத சிந்தனை ஞானமும் தொழில் நுட்பத்திறனும் ஓரளவு வளர்ச்சி பெற்றிருந்தன என்பதை அறிய முடிகின்றது. இந்த ஞானம் பொதுவாய் அநுபவ அறிவாகவும், மூடநம்பிக்கைகள் கலந்தும் தெளிவற்றுத் திகழ்ந்தது.

நீண்ட காலமாய்த் தனிமையாய் வாழ்ந்த மனிதன் நாளடை வில் சமுதாயமாய் வாழக் கற்றுக்கொண்டான். உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியில் மனிதனே இறுதியாய்த் தோன்றியவன். சமுதாய வாழ்வில் அதன் வளர்ச்சியின் முதிர்ச்சியில் சமுதாயக் கோட்பாடுகளை வகுத்துக்கொண்டவன். இவ்வுலகப் பொருள்களுக்கும் உயிரினங்களுக்கும் தானே தலைவன் என்பதையும், அவற்றை ஆட்டிப் படைக்கும் ஆற்றல் தன்னிடம் மட்டிலுமே உள்ளது என்பதையும் அறிந்து தெளிந்தான்.

வாழ்விற்கு அடிப்படைத் தேவைகளாய் இருந்த உண்ணும் உணவு, ஒண்டும் உறையுள், சூழ்நிலையின் தட்பவெப்ப நிலைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் உடை ஆகியவற்றைத் தக்க முறையில் அமைத்துக்கொண்டு வாழ்ந் தான். மற்ற உயிரினங்களைப் போலவே மனிதனும் இவ்வுலக இயற்கைப் பொருள்களைச் சார்ந்து வாழ்ந்தான். அவற்றிட

மிருந்து கிடைக்கும் பொருள்களைத் தனது அடிப்படைத் தேவைகளுக்குப் பயன்படுத்திக்கொண்டான். இயற்கைப் பொருள்கள் இல்லையேல் தனது வாழ்வும் இல்லை என்ற உண்மையை நன்கு உணர்ந்தான். ஒப்புரவுடன் வாழ்ந்த சமுதாய உணர்வால் உணவுப் பொருள்களை அவர்களது அன்றாடத் தேவைக்கு அதிகமாகவே இயற்கையிலிருந்து சேகரித்துப் பாதுகாத்து வைத்துக்கொள்ள முடிந்தது. இதனால் அவர்களுக்குத் தேவையான ஓய்வு கிடைக்கும் வாய்ப்பும் ஏற்பட்டது. இதனால் அவர்களுக்குச் சிந்திக்கவும் அறிவின் அடிப்படையில் செயற் படவும் வாய்ப்புகள் ஏற்பட்டன. இந்த வாய்ப்புகளைப் பயன்படுத்திய முறைகளைச் சில தலைப்புகளாகப் பகுத்துக் கொண்டு விளக்க நினைக்கின்றேன். இங்ஙனம் பகுப்பு முறை களாய் அவை வளர்ந்தன என்று நினைப்பது தவறு. அவை ஒட்டுமொத்தமாகவே வளர்ந்தன என்பதுதான் உண்மை. வசதிக்காக அவை தனித்தனியாகப் பிரித்துப் பேசப்பெறு கின்றன. தவிர, இவை யாவும் உலகத்தின் ஏதோ ஒரு பகுதியில் மட்டிலும் வளர்ச்சியுற்றன என்று கருதுதலும் தவறு. பல பகுதிகளில் வளர்ந்தன என்பதுதான் உண்மை. அவற்றைத் தொகுத்து உங்கள் முன் வைக்கின்றேன்.

(1) **வேளாண்மை :** உயிர் வாழ உணவு முக்கியமானது. இயற்கையில் கிடைத்த உணவு போக, சில பயிர் வகைகளைத் தேர்ந்தெடுத்து நிலத்தை உழவு செய்து பயிர்களை வளர்த்து உணவுப்பொருள்களைப் பெருக்கித் தன் அன்றாட வாழ்க்கையைச் சீர்செய்துகொண்டான். ஓட்ஸ், மரவள்ளி என்ற கிழங்குவகை, பீன்ஸ் என்ற துவரை வகை இவற்றில் முதன் முதலாக அவன் கவனம் சென்றதாய் அறியக் கிடக்கின்றது. பின்னர் நெல், கோதுமை, கம்பு, கேழ்வரகு, சோளம் முதலியவற்றின் உற்பத்தியில் கவனம் சென்றிருத்தல் வேண்டும். இரும்பு கண்டறிந்த பிறகு கொளு முதலியவற்றைக் கொண்டு கலப்பை(ஏர்)யைச் சீர் செய்யக் கற்றுக் கொண்டதையும் களைக்கொட்டு, மண்வெட்டி முதலிய கருவிகளைப் பயன்படுத்தத் தொடங்கியதையும் அறிய முடிகின்றது. இம்முயற்சி டிராக்டர் கண்டறியும்வரை கொண்டு செலுத்தியுள்ளது. தொடக்கத்தில் ஆடு மாடு பன்றி முதலிய விலங்குகளைத் தன் குடும்ப நண்பனாக்கிக்கொண்டு அவற்றை வேளாண்மைக்குப் பயன்படுத்திக்கொண்டான்.

(2) **உறையுள் :** மரநிழல்களிலும் குகைகளிலும் வாழ்ந்து வந்த மனிதன் நாளடைவில், கோரை, தென்னங்கீற்று ஆகியவற்றால் குடிசை போட்டு வாழக் கற்றுக்கொண்டான். மண்ணாலும் கற்களாலும் சுவர் எழுப்பிக் கட்டடங்களைக் கட்டும் முறை, சூரிய வெப்பத்தாலும் நெருப்பாலும் சுடுமண் (செங்கல்) தயாரிக்கும் முறை வளர்ந்தது. சுண்ணாம்பு மணலைச் சேர்த்துக் காரை கண்டறியப்பெற்று கட்டடத்திற்குப் பயன்படுத்தப் பெற்றது. நாளடைவில் சீமைக்காரை (Cement) கண்டறியப் பெற்றது. கிடைப்படங்கள் வரைந்து, திட்டமிட்டு, கட்டடங்கள் எழுப்பும் முறை வளர்ந்து இன்று வானளாவும் பல்லடுக்கு மாளிகைகள் கட்டுவதுவரையான நாகரிகம் வளர்ந்துவிட்டது. கட்டடக்கலை ஒரு தனிப்பட்ட கலையாகவும் வளர்ந்துவிட்டது. பண்டைக் காலம்முதல் பறவைகள் ஒரே விதமாய்க் கூடுகள் கட்டிக்கொண்டிருக்க விலங்குகள் ஒன்றும் செய்யாமலிருக்க மனிதனின் கட்டடக் கலை வளர்ச்சி நம்மை வியக்க வைக்கின்றது.

(3) **உடை :** தழையாடையை அணிந்து வந்த மனிதன் தட்பவெப்ப நிலைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள நினைத்தான். சணல், கற்றாழை, சணப்பை, பருத்தி முதலியவற்றை விளைவித்து, நார் அல்லது நூல் உண்டாக்கி, ஆடை நெய்யக் கற்றுக்கொண்டான். இதற்கு முன்னர், கோரை, ஈந்து முதலியவற்றுள் பாய் முடையக் கற்றுக்கொண்டான். பனை ஓலையைக்கொண்டு தடுக்கு முதலியவற்றை அமைக்கும் முறையை அறிந்தான். இப்போது நான் இச்செய்திகளைச் சொல்லச் சில மணித்துளிகள்தாம் ஆயின. ஆயினும், இச்செயல்கள் படிப்படியாய் நிகழ, அதற்கு முன்னர் செய்து பார்க்க எத்தனையோ ஆண்டுகள் கடந்திருக்க வேண்டும் என்பதை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும்.

(4) **பாதுகாப்பு :** கொடிய மிருகங்களிடமிருந்தும் பகைவர்களிடமிருந்தும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளவும் வேட்டையாடுவதற்குப் பயன்படும்பொருட்டும் சில ஆயுதங்களைச் செய்யவும் அவன் கற்றுக்கொண்டான்; கற்களால் ஆன ஆயுதங்கள், வில், அம்பு, வாள் போன்ற ஆயுதங்கள் செய்யக் கற்றுக்கொண்டான்.

(5) **அணிகள் :** சிறு கற்களையும், எலும்பு, மரம் முதலிய பொருள்களைக்கொண்டு செய்த அணிகள், கைவிளக்குகள்,

தந்தத்தில் ஊசி செய்தல் போன்ற கைவினைப் பொருள்களைச் செய்யும் கைத்திறனை வளர்த்துக்கொண்டான். கைவினைத் திறனின் அடிப்படையில் தொழில் நுட்ப அறிவு வளர்ந்திருக்க வேண்டும்.

(6) **உயிரியல், மருத்துவம் :** உடற்கூறுபற்றிய கருத்து தெளிவாய் இல்லையாயினும் உடலைப்பற்றிய சிறிய அநுபவ அறிவு இருந்தது. உணவு செரிமானம் இல்லாதபோது பட்டினி போடுதல், சில வகை கஷாயம் தயாரித்து அருந்துதல், இலேகியம் முதலிய சத்துப்பொருள் செய்து உண்ணல், சூர்ணம் போன்ற பொடி செய்தல் முதலிய முறைகள் தோன்றின. நம் நாட்டு மருத்துவ முறைகளாகிய ஆயுர்வேதம், சித்த மருத்துவம், யுனானி முறை ஆகியவை யாவும் அநுபஅறிவின் அடிப்படையில் தொகுக்கப்பெற்ற முறைகளாகும். காலப்போக்கில் சில நோய் உயிர் அணுக்கள்தாம் (Bacteria) நோய்களுக்கும் காரணம் என்பது தெளிவாய் அறியப்பெற்றது. இன்று தொற்று நோயைத் தோற்றுவிக்கும் நச்சுக் கிருமிகள் (Virus) தாம் பல்வேறு நோய்கட்குக் காரணம் என்பதைக் கண்டறிந்துள்ளனர். உயிரியல் துறையின் வளர்ச்சியால் மருத்துவத்துறையில் மேலும் வளர்ச்சி காணப்பெற்றது.

(7) **தொழிலியல் :** ஆதியில் எல்லாப் பொருள்களும் ஆண்டவனால் படைக்கப்பட்டவை என்று மனிதன் கருதினான். காலப்போக்கில் அவன் கைவினைப்பொருள்களைப் படைத்துப் பயன்படுத்திக்கொள்ளத் தொடங்கினான். வில், அம்பு போன்ற சில ஆயுதங்கள், சிலவகை அணிகள் செய்யத் தெரிந்து அவற்றை அன்றாட வாழ்வில் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான். காகிதம் செய்தல், மரத்தாலாய ஏர் முனையில் பொருத்தும் இரும்பினாலாய கொளு செய்தல், எண்ணெயில் எரியும் விளக்குகள் செய்தல், அச்சிடும் முறை, நெருப்பினாலும் பகலவன் வெப்பத்தாலும் சுடுமண் (செங்கல்) செய்தல், சாயம் தயாரிக்கும் முறை, ஓவியம் வரைதல், மண்பாண்டங்கள் செய்தல், தந்தத்தில் ஊசி செய்தல், பாய் முடைதல், துணி நெய்தல், கோணி நெய்தல், நாணயம் செய்தல் போன்றவற்றில் முன்னேற்றம் கண்டிருந்தான். இந்த அறிவியல் அறிவுக்கான அடிச்சுவடுகள் **மொகஞ்சதாரா, ஹரப்பா** என்ற இந்திய நாகரிகத்திலும், தென் அமெரிக்காவில் உள்ள **மாயா,** மத்திய ஆசியா போன்ற இடங்களில் கண்டறியப்பெற்ற நாகரிகங் களால் அறியக் கிடக்கின்றன. நம் நாட்டுத் திருமறைக்கால

நாகரிகத்திலும், சிந்து வெளி நாகரிகத்திலும் இத்தகைய அடிச்சுவடுகள் காணப்பெறுகின்றன.

அசோகர் காலத்தில் (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு) இரும்பை உருக்கும் தொழில் வளர்ந்திருந்தது. இன்றும், அவர் அமைத்த 'அசோகர் தூண்' நிலைத்து, சான்று பகர்வதாய் உள்ளது.

தொழில் நுட்பத்தைக் கூற வேண்டுமானால் அச்சிடும் இயந்திரங்களைக் குறிப்பிடலாம். உலக வரைபடங்கள், காலங்காட்டிகள் (Clocks), அகலம், நீளம், உயரம் போன்ற அளவை முறைகளும், கடலின் ஆழத்தை அளக்கும் பாதம் (= 6 அடி) அளவுகளும், எடை முதலியவற்றைத் துல்லியமாய் அளக்கும் முறைகளும் பையப் பைய வளர்ந்தன.

**(8) கணிதம் :** மனிதர்கள் எண்ணும் முறையில் முதன் முதலாய் மணிகளைப் பயன்படுத்தக் கற்றனர். தமிழர்கள் க, உ, ங, ச, ரு, சா, எ, அ, கூ, ய (க)

என்ற எண் முறைகளைப் பயன்படுத்தினர். நாளடைவில், கணிதத்தில் 1, 2, 3, 4........... 10 என்ற அரேபிய எண்களைப் பயன்படுத்தும் முறை நடைமுறைக்கு வந்தது. நம் நாடுதான் சூனியக் குறியீடு (சுழி) கண்ட பெருமையைப் பெற்றதாய் வரலாறு குறிக்கின்றது. பாபிலோனியாவில் இயற்கணிதம் (Algebra) தோன்றியதாய் வரலாறு உண்டு. உறையுள் அமைத்துக்கொண்ட காலத்திலேயே வடிவ கணிதத்திற்கு (Geometry) வித்திட்டுவிட்டதாய்க் கருதலாம். தொடர்ந்து கோண கணிதமும் (Trigonometry) தோன்றலாயிற்று. எண்ணிக்கைகளின் அடிப்படையில் கணக்கிடும் முறை வளர்ந்த காலத்தில் பின்னக்கணக்கும் தோன்றியது. நம் நாட்டு 'எண் சுவடி' என்ற நூலில் பின்னக் கணக்கில் முந்திரி அரைக்காணி போன்ற கணக்கிடும் முறைகள் இருந்தன என்பதை அறிகின்றோம்.

பிற்காலத்தில் கூட்டல் (+), கழித்தல் (-), பெருக்கல் (x), வகுத்தல் (÷) குறிகளும் பிற பல குறியீடுகளும் வழக்கத்திற்கு வரலாயின; இவை கணித வளர்ச்சிக்கு அடிப்படைகளாயின. தொலைநோக்கி, நுண்நோக்கி போன்ற கருவிகள் புனையப்பெற்று வானியல், உயிரியல் போன்ற துறைகளின் வளர்ச்சியை ஓங்கச்செய்தன. உரோமன் எண்கள், இந்திய அரேபிய எண்கள் ஏற்றுக்கொள்ளப் பெற்றன. இக்கால கட்டத்தில் இந்திய நாட்டின் பங்காய் அறிவியல் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கதொன்றுமில்லை.

(9) **வானியல் :** சூரியன், சந்திரன் முதலிய கோள்களின் இயக்க அடிப்படையில் காலத்தைக் கணக்கிடும் முறை தோன்றியது. காலத்தை ஆண்டு, மாதம், வாரம், நாள் என்ற அடிப்படையில் பஞ்சாங்கம் (Almanac) எழுதும் முறை முகிழ்த்தது. பல நட்சத்திரங் களையும் கணிக்கும் முறை அரும்பியது. திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் ஆகியவற்றைக் கணிக்கும் முறையையும் (இதுவே பஞ்சாங்கம் எனப்படுவது), கிரகணங்களைக் குறிக்கும் முறையையும் அறியத் தொடங்கினர். இக்காலத்தில்தான் சிலர் மூடப்பழக்கங் களாய்க் கருதும் இராகு காலம், குளிகை காலம், எம கண்டம் முதலியவற்றையும் கணக்கிட்டனர். அமிர்தயோகம், சித்த யோகம், மரண யோகம் முதலியவற்றையும் குறித்தனர். இவையெல்லாம் சேர்ந்து சோதிடச் சாத்திரமாய் வளர்ந்தது. சோதிடக்கலையிலிருந்து தான் வானியல் (Astronomy) தனி இயலாய் வளர்ந்தோங்கியது. தாலமி (Ptolemy), கலிலியோ, காப்பர்னிகஸ் போன்றார் இதன் வளர்ச்சியில் பங்கு பெற்றனர். இனி, தனியாக, சேய்போல் வளர் நிலையிலும் தாயாகிய சோதிடக்கலை இன்றளவும் மக்களிடம் செல்வாக்குப் பெற்றுத் தனித்தன்மையுடன் திகழ்கின்றது.

(10) **அறிவியல் :** கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் அணுக் கொள்கைபற்றிய பேச்சு எழுந்தது. ஒரு பொருளைப் பிரித்துக் கொண்டே போனால், பிரிக்க முடியாது நிற்கும் பொருளே அடிப்படை. அதற்கு அணு என்று பெயரிட்டனர். அந்த அணுவால் ஆனதுவே இந்த உலகம்; இந்த அகிலமும் அப்படியே. பூக்களைச் சேர்த்தால் பூமாலையாதல் போல, அணுக்களைச் சேர்த்தால் அண்டமாகிறது. பலபல வடிவமான பூக்கள் பலபல வடிவமான மாலையாவது போல, பலபல விதமாய் அணுக்களும் பலபல வடிவமான உலகப் பொருள்களாகின்றன என்று வேறு சிலர் கூறி வந்தனர். இதுதான் **அணுவாதம், ஆரம்பவாதம்.** பழங்காலத்ததாகிய சமண மதம் பேசியதும் இந்த அணுக்கொள்கையைத்தான். மணிமேகலை என்ற நூலில்,

*"எல்லைஇல் பொருள்களில் எங்கும் எப்பொழுதும்*
*புல்லிக் கிடந்து புலப்படு கின்ற*
*வரம்புஇல் அறிவன் இறைநூற் பொருள்கள் ஐந்து*
*உரம்தரு உயிரொடு, ஒருநால் வகைஅணு*
*அவ்வணு உற்றும், கண்டும் உணர்ந்திட*
*பெய்வகை கூடிப் பிரிவதும் செய்யும்;*

*நிலம்நீர் தீகாற்று எனநால் வகையின*
*மலைமரம் உடம்புஎனத் திரள்வதும் செய்யும்;*
*வெவ்வேறு ஆகி விரிவதும் செய்யும்;*
*அவ்வகை அறிவது உயிர்எனப் படுமே"*[3]

என் ஆசீவகவாதி[4] தன் சமயத்தை எடுத்துரைப்பதைக் காணலாம். நியாயமதம், வைசேடிகமதம் என்பனவும் இதனையே பேசின. அணுக்கொள்கையை வற்புறுத்தியதன் பயனாய் வைசேடிக மதத் தலைவரான **கணாதருக்கு** 'அணு விழுங்கியார்' என்ற திருநாமமும் வழங்கலாயிற்று. சமணர்கள் நான்கு பூதக் கொள்கையை வற்புறுத்தியது போல, மேலை நாட்டினரான **அரிஸ்டாட்டிலும்** (Aristotle) இதே கொள்கையை வற்புறுத்தினார். அவர் பேயாய்ப் பிடித்து எல்லோரையும் ஆட்டி வந்தார் எனலாம். அவர் கீறிய கோட்டிற்கு அப்பால் எவரும் தாண்டக்கூடாது. அப்படித் தாண்டினால், தாண்டினவர் தலை வெடித்துப்போகும் என்று அஞ்சினர். அவர் காலத்தில் **நிக்கலஸ்** (Nicholus) என்பவரும் அணுவாதம் பேசினார். அதைக் கேட்பார் யார்? எவரும் இலர். கோவணம் கட்டாத ஊரில் கோவணம் கட்டியவன் பைத்தியக் காரன் அல்லவா? அரிஸ்டாட்டில் வழிவழி வந்தவர்களின் பேச்செல்லாம் ஒரே பேச்சுதான். அடுப்பங்கரைவரையில் அரிஸ்டாட்டிலின் கொள்கை உண்மையாய் நிலவுவதைக் காணலாம் என்றனர். பச்சை விறகு எரியும்போது எவற்றைக் காண்கின்றோம். அவர் கூறிய நான்கு பூதங்களையும் காணலாம்.

(i) நெருப்பு சுடர்விட்டு எரிவதைக் காணும்போது புகை காற்றாய் மேல் எரிவது தெரிகிறது.

(ii) ஆறு கடலில் கலப்பது போலப் புகை காற்றில் போய்க் கலக்கின்றது.

(iii) சிடுசிடு என நீர் ஆவியாய் மாறுவதனைக் கண்டும் கேட்டும் வருகின்றோம்.

---

3. மணிமேகலை - சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை - அடி 110 - 19.

4. ஆசீவகம் : இச்சமயத்தை நிறுவியவர் மற்கலி என்பார். மகத நாட்டவர் (பீகார் மாநிலம்). மகாவீரரும் புத்தரும் மற்கலி காலத்தவர். ஆயினும் இருவர்க்கும் மூத்தவர் மற்கலியே என்பது பாலிபிடகங்களாலும் சமண சூத்திர நூல்களாலும் அறியப்பெறுகின்றது.

(iv) மிகுதி நிற்கும் சாம்பல் அங்கு மண் இருப்பதனைக் காட்டுகின்றது. [5]

மேலைநாட்டில் அணுக்கொள்கையை முதன்முதலாய் எடுத்துக்கூறியவர் **டெமாக்ரிடஸ்** (Democritus) என்பவரே. இவரே மேலை நாட்டு அணுக்கொள்கையின் தந்தையுமாவார். இவருடைய கொள்கையினை **டிண்டால்** (Tyndall) என்பார் அடியிற்கண்டவாறு சுருக்கிக் கூறுகின்றார்.

(i) இல்லது வாராது; உள்ளது போகாது. அணுத்திரளைகள் (Molecules) கூடியும் பிரிந்தும் வரும் மாறுதலை உள்ளது. வித்தில்லாத சம்பிரதாயம் மேலும் இல்லை. கீழும் இல்லை.

(ii) காரணம் இன்றி ஒன்றும் நிகழ்வதில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் காரணம் உண்டு. அந்தக் காரணத்திலிருந்து அது நியதியாய் விளைகின்றது.

(iii) உள்பொருள் எல்லாம் இரண்டேயாம். ஒன்று, அணு; இரண்டு, வெட்டவெளி. மற்றவையெல்லாம் கருத்துப் பொருளேயாகும்.

(iv) அணுக்களோ எண்ணற்றவை. அவற்றின் வகைகளும் எண்ணற்றவையே. அவை ஒன்றையொன்று தாக்கும். அப்போது எழுகின்ற பக்கவாட்டு இயக்கமும் (Lateral movement) சுழற்சிகளுமே அண்டங்களின் பிறப்பாகும்.

(v) உலகத்துப் பொருள்கள் பலவகையாய் இருப்பது எதனாலே? அவற்றின் அணுக்கள் பலபல வகையாம். எண்ணிக்கையும் பலபலவாம். அளவிலும் பலபல வகையாம். கூட்டுறவு அமைப்பிலும் பலபலவாம். இதனாலேயே பொருள்களும் பலவாகின்றன.

(vi) ஆன்மா தீ அணுப்போன்றது. அதுபோல, இதுவும் நுண்ணியது. இழுமென ஒழுகுமாறு வழுவழுப்பாய் அமைவது. முழுவடிவாம் வடிவினது. எல்லா அணுக்களிலும் இதுவே இயக்கம் மிக்கதாம். இஃது உடல் முழுவதும் உள்ளும் புறமும் எள்ளுக்குள் எண்ணெய்போல் இடையீடு இன்றிப் பரவி நிற்கின்றது. இதன் இயக்கத்தின் வழியே உயிர் வாழ்க்கை என்னும் காட்சி புலப்பட்டுத் தோன்றுகின்றது.

---

5 உபநிடதத்தில் உயிர், போனபின் உடலானது முடிவாகப் பஞ்சபூதங்களோடு சேர்வதனைப்பற்றி மைத்ரேயியும் யாஞ்ஞவல்கியரும் பேசுகின்ற பேச்சை இது நினைப்பூட்டுகின்றது.

(11) **போக்குவரத்து முறைகள் :** இந்த நாகரிக வளர்ச்சியில் போக்குவரத்து முறையிலும் சிந்தனையைச் செலுத்தினான், மனிதன். சக்கரங்களைக்கொண்ட வண்டிகள் அமைக்கும் முறையைக் கண்டான். மாடுகளையோ குதிரைகளையோ பூட்டித் தான் ஏறிச் செல்லவும், பொருள்களை ஓரிடத்திலிருந்து பிறிதோர் இடத்திற்குக் கடத்திச் செல்லவும் பயன்பட்டன. இந்த வண்டிகள் தரைவழிப் பயணத்திற்குப் பயன்பட்டவை. தோணிகள், கப்பல்கள் ஆகியன செய்து கடல் பயணத்திற்கும் வழிவகுத்த பெருமை நம் மூதாதையருக்கு உண்டு. நாணயங்கள் தங்காது ஓடிக்கொண் டிருப்பனவாதலால் அவற்றிற்கு வட்டவடிவம் அமைத்தனர் போலும்.

கிரேக்கப் பேரரசர் **அலெக்ஸாண்டர்** படையெடுப்பால் மேலை நாட்டிற்கும் கீழை நாட்டிற்கும் தரைவழிப் பயணத் தொடர்பு ஏற்பட்டது. கிரேக்க, மேற்கு ஆசிய நாடுகளுடன் மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிக காலத்திலேயே தரைவழித் தொடர்புகள் இருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. தரை வழியாய் ஐரோப்பாவிலிருந்து சீனாவிற்குச் செல்லும் **பட்டு வழி** (Silk route) ஏற்பட்டதாய் அறிகின்றோம். ஐரோப்பியர் கப்பலில் உலகைச் சுற்றிய காலத்தில் கடல்வழித் தொடர்பும் ஏற்பட்டது. **கொலம்பஸ்** (Columbus) மேற்கிந்தியத் தீவிற்கும் அமெரிக்காவிற்கும் சென்றமை, வாஸ்கோடாகாமா (Vascoda Coma) இந்தியாவிற்குப் போந்தமை போன்ற நிகழ்ச்சிகளால் கடல்வழித் தொடர்பு உறுதிப்பட்டது. இதனால் மேலை சீன நாடுகளுடன் இந்தியத் தத்துவக் கருத்து களிலும், அறிவியல், கைவினை ஞானங்களிலும் கருத்துப் பரிமாற்றங்கள் ஏற்பட வாய்ப்புகள் தோன்றி வளர்ந்தன.

(12) **அறிவியல் வளர்ச்சி :** கடவுள், ஆன்மா, உலகம் என்ற முப்பொருள் ஆராய்ச்சிகளுள் மேலை நாட்டினர் உலகம்பற்றிய ஆராய்ச்சியில் அதிக்க் கவனம் செலுத்தினர். அதனால் அறிவியல் அங்கு அதிகமாய் வளர வாய்ப்புகள் ஏற்பட்டன. மேலை நாடுகளில் தொடக்கத்தில் அறிவியலைப் போற்றி வளர்த்த பெரியார்களாய் **தேல்ஸ்** (துருக்கி), **பித்தகோரஸ்** (கணிதம்), **அனெக்சிமேனஸ், அனெக்சி மேண்டர், எம்பிடோக்கின்ஸ்** (கிரேக்கம்), **ஃபில்லிலோனஸ்** (வானியல்), **மோக்கிராட்ஸ்** (அணுக்கொள்கை), **பிளேட்டோ, சாக்கிரடிஸ், ஹிப்போகிராட்ஸ், தியோஃபிஸ்டஸ்** (உயிரியல்) என்போர் குறிப்பிடத்தக்கவர்களாய்த் திகழ்ந்தனர்.

அலெக்சாண்டர் நம் நாட்டின்மீது படையெடுத்து வந்து, வெற்றியுடன் தம் நாடு திரும்பியபோது, இந்தியத் தாவர விலங்கினங்களைக் கொண்டுசென்று தம் ஆசிரியரான **அரிஸ்டாட்டிலின்** உயிரியல் ஆய்விற்கு வழங்கியதாய் வரலாறு உண்டு. மேற்காசிய கிரேக்க நாடுகளில் நூலகங்களும் அருங்காட்சியகங்களும் தோன்றின. தத்துவச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. அரங்குகளும் அமைக்கப்பெற்று அவற்றின் மூலம் உலகப் பொருள்கள் ஆராயப்பெற்றன. கிறித்துநாதர் மரித்த பிறகு ஒவ்வொரு கிறித்து தேவாலயமும் ஒரு பள்ளியை நடத்தும் பணியில் ஈடுபட்டது. இதனால் கல்வி பரவத் தொடங்கியது. கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகமும் பிரான்சு நாட்டில் பாரிஸ் பல்கலைக் கழகமும் நிறுவப்பெற்றன. காலப்போக்கில் ஐரோப்பிய நாடுகள் அனைத்திலும் பல்கலைக் கழகங்கள் அமைந்து அறிவியல் வளர்ச்சிக்கு அடிப்படையாய்த் திகழ்ந்தன.

நாளடைவில் கணிதம் மேலும் வளர்ந்தது. வானியல்பற்றிய கருத்துகள் தொகுத்த **தாலமி** (Ptolemy) பற்றிய சிந்தனைகளும் அணுக்கொள்கையும் வளர்ச்சி பெற்றன. காலக்கணக்கீடு செய்யும் முறையிலும் நாட்குறிப்புக்கான தேதிகளை அறுதியிடுவதிலும் முன்னேற்றங்கள் காணப்பெற்றன. எரிமலைகள் இறைவனின் சீற்றத்தால் வெடிப்பவை என்ற நம்பிக்கையிலிருந்து விடுபட்டு முறையான விளக்கம் தரப்பெற்றது. வேதியியல், இரசவாதம் (Alchemy) என்ற மாயக்கிரியை என்ற நம்பிக்கையிலிருந்து மீண்டு சோதனைகள் மூலம் மெய்ப்பிக்கக்கூடிய வேதியியல் துறையாய் மாறியது. வானியல், மருத்துவம் மேலும் வளர்ச்சி பெற்றன.

கி.பி. 12ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு அறிவியல் வளர்ச்சியில் ஒரு புதிய போக்கு நேரிட்டது. கிரேக்க, அரேபிய அறிவியல் நூல்கள் இலத்தீன் மொழியில் பெயர்க்கப்பெற்றன. ஒரு காலத்தில் கிறித்தவ சமயம் அறிவியல் போக்கை எதிர்த்துப் போர்க்கொடி காட்டிக்கொண்டிருந்தது. அறிவியல் வரலாற்றில் கண்ட சான்று ஒன்றால் இதனை அறியலாம். ஒரு சமயம், குதிரைக்குப் பல் எத்தனை என்ற வினா எழுந்ததாம். ஒரு சிந்தனையாளன் ஒரு குதிரையைப் பிடித்து எண்ணிக் கணக்கிடலாமே என்றானாம்.. அப்படிச் செய்யக்கூடாது, நூலகத்திலுள்ள அறிஞர் நூல்களிலிருந்து தேடிப் பெற வேண்டும் என்று சமய குருமார்கள் கூறி, அந்தச் சிந்தனையாளனுக்குத் தண்டனையும் விதித்தனராம். காலப்போக்கில் சமயப் பெரியார்கள் அறிவியலின் தாக்கத்திற்குச் சமயம் ஏற்ற முறையில் அமைய வேண்டும் என்ற கருத்திற்கு இசைந்து அப்போக்கினை ஏற்றுக்கொள்ளலாயினர்.

14-15ஆம் நூற்றாண்டுகளில் உயிரியல் வளர்ச்சியில் பல புதிய அணுகு முறைகள் தோன்றலாயின. மருத்துவம் வியத்தகு முறையில் வளர்ந்தது. மூலிகைகள் மருந்துப் பொருள்களாயின. கஞ்சா, அபினி, கந்தகம், பாதரசம், அமிலங்கள் போன்ற வேதியியற் பொருள்கள் மருத்துவ முறையில் இடம் பெற்றன.

சீனாவில் அறிவியல் அறிவு மேலை நாடுகளுக்கும் மேலானதாய் ஓங்கி நின்றது. கி.பி. 15ஆம் நூற்றாண்டில் மற்றெல்லா நாடுகளை விடச் சீன அறிவியல் முன்னேற்றம் அடைந்திருந்தது. கி.பி. 2 ஆம் நூற்றாண்டில் காகிதம் செய்யும் முறையைக் கண்டறிந்த நாடு இதுவே. காந்தம்பற்றிய விளக்கத்தை அறிந்திருந்தனர். வெடி மருந்தைக் கண்டுபிடித்தவர்கள் சீனர்களே. நான் தொடக்க நிலைப் பள்ளியில் பயின்ற காலத்தில் (1921-29) சீன வெடி புகழ் பெற்றிருந்தது. இன்று அந்தப் புகழைச் சிவகாசி வெடி ஏற்றுக் கொண்டுவிட்டது. சீன நாகரிகம் இயந்திர இயக்கம்பற்றிய பல கோட்பாடுகளை அறிந்திருந்தது. சீனர்களின் வானியல் அறிவு வியக்கத்தக்க முறையில் அமைந்திருந்தது. மனிதன் அறிவியலைக் கொண்டு இயற்கையை ஆட்சி புரியலாம் என்ற கருத்தைக் கொண்டவர்கள் அல்லராதலால், அவர்களது கருத்துகள் மலடாகவே நின்றுவிட்டன. சோதனை செய்து பார்க்கும் அறிவியல் அணுகு முறையையும் தொழில் மயமாக்கும் முயற்சியையும் மேற் கொள்ளாமல் விட்டதால் அவர்கள் அறிவியல் முன்னேற்றத்தில் பின்தங்கியவர்களாயினர்.

(13) ***அறிவியல் மறுமலர்ச்சி :*** 15ஆம் நூற்றாண்டுகளுக்குப் பின்னர் 200 ஆண்டுகாலம் (கி.பி.1450-1650) அறிவியல் மறு மலர்ச்சிக் காலமாய்த் திகழ்ந்தது. சோதனைமூலம் அறிவியல் உண்மைகளை அறுதியிடும் அணுகுமுறை பொதுவாய் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பெற்றது. கிறித்தவ சமயத்தில் புராட்டஸ்டண்டு பிரிவு தொடங்கப்பெற்றது. ஐரோப்பாவில் மேலும் பல பல்கலைக் கழகங்கள் தொடங்கப்பெற்று அவை யாவும் அறிவியல் மறுமலர்ச்சிக்கு ஊன்றுகோல்களாய் அமைந்தன.

**கலிலியோ** பூமியைச் சுற்றிக் கதிரவன் வலம் வருவதான கருத்தினைக் கொண்டவர். பின்னர் வந்த **காபர்நிக்கஸ்** கதிரவனை மையமாய்க் கொண்டுதான் பூமி முதலிய கோள்கள் வலம் வருவதாய் நூல் ஒன்றையும் வெளியிட்டார் (கி.பி. 1543). **வசாலியஸ்** எழுதிய உடற்கூற்று நூலும் வெளிவந்தது. இவையிரண்டும் அறிவியல் மறுமலர்ச்சிக்குத் திருப்பு முனைகளாய் அமைந்தன. ஐரோப்பா முழுவதும் பல **'அறிவியல் கழகங்கள்'** நிறுவப்பெற்றுப் பல அறிவியல் கருத்துகள் ஆராயப்பெற்றன.

இதற்கு அடுத்த கட்டத்தில் (கி.பி. 1660 - 1735) அறிவியல் வளர்ச்சியில் பல சாதனைகள் படைக்கப்பெற்றன. **நியூட்டனின்** பொருள்களைப்பற்றிய விதிகள் ஏற்கப்பெற்று **அரிஸ்டாட்டிலின்** கருத்துகள் ஒதுக்கப்பெற்றன.

அறிவியல் அணுகுமுறைகளில் மேலும் வளம் சேர்ந்தது. இயற்பியலில் **இயக்க விதிகள்** (Laws of Motion), ஒளித்தன்மை, மின்ஆற்றல் முதலிய பல துறைகளில் முன்னேற்றம் இக்காலத்தில் தான் ஏற்பட்டது. நீராவி எந்திரங்கள் புனையப்பெற்று நடை முறைக்கு வந்ததும் இக்காலத்தில்தான்.

19ஆம் நூற்றாண்டில் மின்னாற்றல், காந்தம் முதலியவை அறியப்பெற்று இயற்பியல்துறை முன்னேற்றம் கண்டது. உயிர்களின் கூர்தல் அறக்கொள்கை (Theory of Evolution) நிறுவப்பெற்றது. வேதியியல் துறையில் அங்கக வேதியியல் (Organic Chemistry) தனித்துறையாய்ப் பிரிந்து வளர்ந்தது. இதனால் உயிரினங்களின் வேதியியல் அமைப்பு தெளிவாயிற்று. உயிரியலில் உடல்கள் யாவும் **செல்களால்** (Cells) ஆனவை என்பதும், அத்தகைய செல்களைப்பற்றிய விளக்கங்களும் தெளிவாயின. வெப்ப ஆற்றல் பற்றிய உண்மைகள் தெளிவடைந்தன.

(14) **அறிவியலும் வாழ்க்கையும் :** 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அறிவியல், வாழ்க்கையின் ஓர் அங்கமாகவே மாறிவிட்டது. தொழில் புரட்சி ஏற்பட்டுத் தொழிற்சாலைகள் பெருகின. வானொலி, தொலைக்காட்சி போன்ற சாதனங்கள் வளர்ந்தன. மின்னணுவியலில் (Electronics) பல முன்னேற்றங்கள் தொடர்ந்தன. தொலைபேசியால் பரந்துபட்ட நாடுகள் நெருங்கி வந்தன. விண்வெளிப் பயணங்கள் மேற்கொள்ளப் பெற்றன. ‘சந்திர மண்டலத்தைக் கண்டு தெளிவோம்’[6] என்ற பாரதியின் கூற்று அம்புலியில் மனிதன் இறங்கியதால் நனவாகி விட்டது. மருத்துவத்தில் பல வியத்தகு முன்னேற்றங்கள், லேசர் போன்ற புதிய ஆற்றல் வாய்ந்த ஒளி அலைகளின் பயன் நடைமுறைக்கு வந்தன. இன்று கணிப்பொறி அன்றாட வாழ்க்கையில் இன்றியமையாததாகிவிட்டது.

## 2. சமயங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

கண்ணால் காண்பது, காதால் கேட்பது, தீர விசாரிப்பது என்ற போக்கில் அறிவியல் தொடங்கி வளர்ந்து; நம்பிக்கையில் தோன்றி

6. பா.க : தே.கீ : 5. பாரததேசம் - 11

வளர்ந்தது சமயம் என்பதை நாம் அறிவோம். உலகமெங்கும் வாழும் நம் மூதாதையர், மனிதகுலம் - உலகம், ஆன்மா, கடவுள் என்ற முப்பொருள்களைப்பற்றி ஆய்ந்தனர் என்றும், உலகம் பற்றிய ஆய்வை மேலைநாட்டார் அதிகமாய்ச் செய்து அறிவியலாய் உருவம் பெற்றது என்றும். நம் நாட்டார் ஆன்மா, இறைவன் என்ற இருபொருள்களை ஆய்ந்து சமயமாய் வளர்ந்தது என்றும் கருதலாம். ஆன்மா, இறைவன்பற்றிய எண்ணத் தெளிவுகளே சமயமாகவும் ஆன்மிகமாகவும் வளர்வதற்குக் காரணமாயின.

ஆன்மா, கடவுள் போன்ற கருத்துகள் மக்களின் வழிபாட்டு முறைகளோடு பிணைக்கப்பட்டு இருந்தன. அதனால் ஆன்மிகக் கருத்துகள் சமயங்களாய் மலர்ந்தன. ஆன்மிகத் தத்துவங்கள் என்பன ஆன்மா, இறைவன் என்ற இரு கருத்துகளையும் அளவை முறையில் (Logic) அமைத்த விளக்கங்கள் ஆகும். சமயங்கள் என்பன ஆன்மா, இறைவன் என்ற இரண்டையும் இணைத்து வழி பாட்டுச் சடங்கு களையும் வழிபாட்டு முறைகளையும் (அஃதாவது தோத்திரங் களையும்) அமைத்துக்கொண்ட வாழ்க்கை முறை களாகும். இவற்றை உற்று நோக்குங்கால், ஆன்மிக விளக்கங்கள் முற்றிலும் சமய விளக்கங்களில் அமைந்துவிட்டன என்று சொல்ல முடியாத நிலை உண்டாயிற்று. எடுத்துக்காட்டுகளால் இதனைத் தெளியலாம்.

(1) **பல்வேறு சமயங்கள் :** நம் நாட்டுச் சமயங்கள் நடைமுறை யில் பல கடவுள்களை (Polythesim) வழிபாட்டு முறையில் ஏற்றுக் கொண்டுள்ளன. சிவன், திருமால், முருகன், கலைமகள், திருமகள், விநாயகர் என்பவை இதற்கு எடுத்துக்காட்டுகள். 'ஒரு நாமம் ஒருருவம் இல்லாத கடவுளுக்கு ஆயிரம் திருநாமங்கள்' ஏற்பட்டுள்ளன. ஆனால், நம் நாட்டு ஆன்மிகத் தத்துவங்கள் **'ஒன்றே கடவுள்'** (Monothesim) என்ற தெளிவு கொண்டவை. 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்ற திருமூலரின் திருவாக்கு இதற்குச் சான்று. ஆன்மிகத் தத்துவங்கள் பல கடவுளர்கள் உள்ளனர் என்ற நம்பிக்கையினின்று வளர்ந்து, ஒரு கடவுள் என்ற நிலைக்கு மாறி இறுதியில் முதற்பொருள் ஒன்றே என்ற கருத்திற்கு வந்தவை.

*"பூமியிலே வழங்கிவரும் மதத்துக் கெல்லாம்*
*பொருளினைநாம் இங்கெடுத்துப் புகலக் கேளாய்;*
*சாமிநீ; சாமிநீ; கடவுள் நீயே;*
*தத்து வமஸி; தத்வமஸி,[7] நீயே அஃதாம்;*

7. **தத்வமஸி** - வேதத்திலுள்ள மகாவாக்கியங்களுள் மிகச்சிறப்புடையது இது. இது மூன்று சொற்களையுடையது. துவம் - நீ, **தத்** - அதுவாக, **அஸி** - இருக்கின்றாய் என்பது பொருள். சீவான்மாவாகிய நீ பரமான்மாவாகிய அதற்கு வேறுபட்டவன் அல்லன் என்பது இதன் பொருள். இக்கோட்பாட்டை எல்லாச் சாத்திரங்களும் ஏதோ ஒரு விதத்தில் இயம்புகின்றன.

"பூமியிலே நீகடவுள் இல்லை யென்று
புகல்வதுநின் மனத்துள்ளே புகுந்த மாயை:
சாமிநீ அம்மாயை தன்னை நீக்கிச்
சதாகாலம் 'சிவாஹோ' மென்று சாதிப் பாயே."[8]

என்று இக்கருத்தைப் பாரதியார் வலியுறுத்துவதைக் காணலாம். இதில் சர்வ சமய சமரசத்தையும், முழுமுதற்பொருள் ஒன்றே என்ற கருத்தை யும் வலியுறுத்துவதையும் காணலாம். இக்கருத்துகளுக்கு இசைவாய்,

"வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கில்
விளங்குபரம் பொருளே!நின் விளையாட் டெல்லாம்
மாறுபடும் கருத்தில்லை, முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா!" [9]

என்ற தாயுமான அடிகளின் கருத்து அமைந்திருப்பதையும் கண்டு மகிழலாம்.

"மூர்த்திகள் மூன்று; பொருள்ஒன்று; - அந்த
மூலப் பொருள்ஒளியின் குன்று"[10]

என்று அண்மையில் பாரதியார்கூட சொல்லிப் போந்தார். இங்ஙனம் அருளாளர்கள் முழுமுதற்பொருள் ஒன்றே என்ற கருத்திற்குக் கொண்டு செலுத்தினாலும், இந்திய சமயங்கள் இத்தகைய ஆன்மிகத் தத்துவக் கருத்துகளை இன்னும் தங்கள் வழிபாட்டு முறைகளிலும் ஏனைய சடங்குகளிலும் ஏற்று அதற்குத் தக்கவாறு மாற்றியமைத்துக் கொள்ளவில்லை என்ற நிலையைத்தான் காண்கின்றோம். சடங்கு களும் தோத்திரப் பாடல்களும் நமது வழிபாட்டுப் பண்பாடாய் வளர்ந்தோங்கியுள்ளன. ஆன்மிகத் தத்துவத் தாக்கங்கள் நமது சமய நெறிமுறைகளில் கணிசமாய்ப் பிரதிபலிக்கப்பெறாமல் இன்றும் இருந்து வருவதைத்தான் காண்கின்றோம். பல கடவுளர்களின் வழிபாடு பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்து காணப்பெறு கின்றது. ஆயினும், இறைவன் ஒருவனே என்ற கருத்து மக்களிடம் பரவலாய்க் காணப்பெறுகின்றது.

---

8. பாரதி அறுபத்தாறு - 66
9. தாயு. பாடல்கள் - 630
10. பா.க.-தோ.பா - 23, சக்தி விளக்கம் - 7

இந்தக் கருத்தினை அருளாசிரியர்களும் ஒரோவழி சுட்டியும் சென்றுள்ளனர்.

> "ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
> திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ?"
>
> - திருவா. திருதெள்-1

என்று மணிவாசகப்பெருமான் சுட்டியுரைத்துள்ளதை நினைக்கின்றார்கள்.

> "வணங்கும் துறைகள் பலபல
> ஆக்கி, மதிவிகற்பால்
> பிணங்கும் சமயம் பலபல
> ஆக்கி, அவைஅவைதொறும்
> அணங்கும் பலபல ஆக்கி,நின்
> மூர்த்தி பரப்பி வைத்தாய்"
>
> - திருவிரு.96

என்று நம்மாழ்வாரும் தெளிந்துரைப்பதையும் அவர்கள் நினைவு கூராமல் இல்லை. ஆயினும், அவர்தம் ஆசாபாசங்களையும் இன்பதுன்பங்களையும் ஆசை நிராசைகளையும் பகிர்ந்துகொள்ள ஏதோ ஒரு குறிப்பிட்ட உருவ வழிபாடு தேவைப்படுகின்றது. நம்பிக்கைக்கு ஏற்ப ஏதோ கடவுள் உருவகப்படுத்தப்பெறுகின்றார். பல்லாயிரக்கணக்கில் வழிபாட்டுத் தெய்வங்கள் அமைந்து விடுகின்றன. கொள்கையளவில் யாவற்றிற்கும் அடிப்படை ஒரு பொருள் (Monotheism) ஏற்றுக்கொள்ளப்பெற்றாலும் நடைமுறையில் - வழக்கில் - பல கடவுள் முறை (Polytheism) பேணி வளர்க்கப் பெறுகின்றது; பயன்படுத்தவும் பெறுகின்றது. அதிகம் பேசுவானேன்? பல்லாண்டுகளாய்ச் சமயங்களையும் தத்துவங்களையும் ஆய்ந்தவன் அடியேன். 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்ற திருமூலர் கருத்தில் அழுத்தமான நம்பிக்கை கொண்டு தெளிந்தவன். எனினும், திருவேங்கடவன், பழநிமுருகன், விநாயகப் பெருமான் இவர்களிடம் கொண்டிருக்கும் பற்றினைக் கழற்றிவிட முடியவில்லை.

(2) **சமயங்களின் ஒருமைப்பாடு :** "எல்லாச் சாலைகளும் உரோமாபுரியை நோக்கிச் செல்லுகின்றன" என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. இதனை நம் நாட்டுப் பழமொழி, "ஆறுகள் யாவும் ஆழ்கடலை நோக்கிச் செல்லுகின்றன" என்று கூறும். இக்கருத்தைக் குலசேகரப் பெருமாளின்,

"தொக்கு இலங்கி யாறுஎல்லாம்
பரந்து ஓடித் தொடுகடலே
புக்கு அன்றிப் புறம்நிற்க
மாட்டாத" (பெரு.திரு. 5 : 8)

என்ற வித்துவக்கோட்டு அம்மானின் பாசுரப் பகுதியில் கண்டு மகிழலாம். 'சாலைகளும்', 'ஆறுகளும்', 'உரோமாபுரியும்', 'ஆழ் கடலும்' குறியீடுகளாய் நின்று ஒரு பேருண்மையை உணர்த்து கின்றன. சமயங்கள் யாவும் ஆண்டவனை அடைய வழிகாட்டு கின்றன என்பதுதான் அந்தப் பேருண்மை. நாம் இருப்பது அறிவியல் காலம்; எல்லாவற்றையும் அறிவியல் நோக்கில் காண்பதற்கு மனம் விழைகின்றது.

**அநுபவ அறிவு :** ஆதியில் இயற்கையை ஆராயத் தொடங்கின மனிதனுக்கு ஓர் உண்மை புலப்பட்டது. ஒன்றாய் இருந்த விதை பின் வேராய், அடிமரமாய், கிளையாய், கொம்பாய், கவடாய், இலை யாய், பூவாய், காயாய் என்று பலவகையாய் மாறுவது போலவே, வித்தென அருவமாய் இருந்தவை மரம் என்று உருமாறியது என்று அவன் நினைத்தான். இக்கொள்கையைப் **பரிணாம வாதம் - கூர்தல் அறம்** என்று வழங்கினர். உலகில் எதனை அடிப்படை என்பது? மண் என்றனர் சிலர்; நீர் என்றனர் பிறர்; தீ என்றனர் ஒரு சாரார்; காற்று என்றனர் பிறிதொரு சாரார். வேறுசிலர் வான் என்றனர். இந்தப் பூசலில் கலந்துகொள்ள அஞ்சி, சிலர் 'தென்காசி வழக்காக', கோமுட்டி சாட்சி போல், ஐந்தும் அடிப்படை என்றனர். இக்கொள்கையை வற்புறுத்தியவர் **அரிஸ்டாட்டில்** என்பார். இதனை முன்னரும் குறிப்பிட்டோம்.

**(3) அகிலத் தோற்றம் :** இந்திய தத்துவ தரிசனம் இவ்வுலகம் - ஏன் இந்த அகிலமே (Universe) - ஐம்பெரும் பூதங்களால் ஆகியதாய்க் கூறுகின்றது. பண்டைய இலக்கணமாகிய தொல்காப்பியம் இதனை,

"நிலம்தீ நீர்வளி விசும்பொடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ......"[11]

என்ற நூற்பாவால் குறிப்பிடுகின்றது. ஈண்டு, உலகம் என்பது அகிலத்தினையும் குறிப்பதாய்க் கொள்ளலாம்.

இந்த நூற்பாவில் உலகம் என்றது உலகினையும் உலகினுட் பொருளையும் குறிக்கும் என்பது இளம்பூரணரது கருத்தாகும். உலகமாவது முத்தும் மணியும் கலந்தாற்போல நிலம், நீர், தீ, வளி,

11. தொல் - பொருள் - மரபு - 91

ஆகாயம் என விரவி நிற்கும் என்றும், உலகினுட் பொருள் பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி ஒன்றானாற்போல வேற்றுமைப் படாது நிற்கும் என்றும் அவர் கூறுவார். இவ்விரண்டனையும் உலகம் கொண்டிருத்தலால் **'கலந்த மயக்கம்'** என்றாராயிற்று.

இந்த நூற்பாவின் கருத்தினை அடியொற்றியது போல் கம்பநாடன்,

> "அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
> அரவுஎனப் பூதம் ஐந்தும்
> விலங்கிய விகாரப் பாட்டின்
> வேறுபாடு உற்ற வீக்கம்"[12]

என்று இராமர் தோத்திரமாய்க் கூறி விளக்குவான். அலங்கலைக் கண்டு அரவு என மருளுதல் திரிபுணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு. ஐந்து பூதங்களும் தனித்தனியாய் இருக்கும் தன்மையினின்றும் நீங்கி ஒன்றாய்ச் சேர்வதனாலும், அங்ஙனம் சேர்ந்து சேர்க்கை அறுவகையாய் விகாரப்படுவதனாலும் தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என்ற பாகுபாடு கொள்வதனாலான இந்த உலகத் தோற்றம் திரிபுணர்ச்சியை உண்டாக்குதல் கூடும். இந்தத் திரிபுணர்ச்சி உண்மைப் பொருளைக் கண்டமாத்திரத்தில் ஒழிந்துவிடும் என்பது கவிஞன் உணர வைக்கும் கருத்தாகும்.

> "பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
> மருளானாம் மாணாப் பிறப்பு" (மெய்யுணர்தல் - 1).

என்ற குறளின் கருத்தையும் இதில் காணலாம். "விபரீத உணர்வாவது மறுபிறப்பும், இருவினைப் பயனும், கடவுள் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையன சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்குகள் எனத் துணிதல், குற்றியை மகன் என்றும், இப்பியை வெள்ளி என்றும், இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாய்த் துணிதலும் அது" என்பது பரிமேலழகரின் விளக்க உரையாகும். மேலும், வள்ளுவப்பெருந்தகை,

> "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்பது அறிவு"
> (மெய்யுணர்தல் - 10).

என்று உணர்த்துவர். வைணவ தத்துவமும் இத்திரிபுணர்ச்சியை விளக்குகின்றது. உயிரல்லாத உடம்பை உயிர் என்ற எண்ணமும்,

12. கம்பரா - சுந்தர. காப்பு

கடவுளுக்கு அடிமைப்பட்ட உயிரைச் சுதந்தரம் உடையது என்று எண்ணுதலும், பிறருக்கு அடிமையல்லாத உயிரைப் பிறருக்கு அடிமையாகக் கருதுதலும், தலைமைத் தேவர் அல்லாதார் பக்கல் தலைமைத் தேவர் என்ற நினைப்பும் தலைமைப்பேறு (புருஷார்த்தம்) செல்வம் முதலியவற்றினிடத்துப் பரம புருஷார்த்தம் என்ற நோக்கமும் உபாயமாக மாட்டாத கர்மம் முதலியவற்றில் உபாயம் என்ற சிந்தனையும் தொடக்கமானவை என்பதாம்.

ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயம் மிகப்பெரியதாகலின், அவற்றுள் ஏனைய நான்கும் - அஃதாவது காற்று, தீ, நீர், பூமி ஆகியவை - அடங்கும். இந்தியத் தத்துவ தரிசனத்தின்படி நமது ஐம்பொறிகளின் வாயிலாய் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் பொருள்படுத்தப்படுகின்றது; நம்மனத்திற்கு இலக்கா கின்றது. ஐம்புலன்களாலன்றி உலகம் நமக்குப் புலனாகாது.

இதனை,

*"சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என்(று) ஐந்தின்*
*வகைதெரிவான் கட்டே உலகு."*[13]

என்று குறிப்பர், வள்ளுவப் பெருந்தகையார்.

காது கேட்கின்றது. ஓசைக்கு ஏதுவாயிருப்பது, ஆகாசம் (வானம்). உடல் ஊற்றுணர்வால் உணர்கின்றது. அதற்கு ஏதுவாயிருப்பது, காற்று. கண், வடிவத்தைப் பார்க்கின்றது. ஒளிக்கு ஏதுவாயிருப்பது, நெருப்பு (தீ அல்லது தேஜஸ் - தேயு). நாக்கு சுவைக்கின்றது. சுவைக்கு மூலகாரணம், அப்பு (நீர்). மூக்கு, நாற்றத்தை உணர்கின்றது. அதற்குக் காரணம் பிருதிவி (பூமி). ஆக, உலகாக அறிவதற்கு மூலப் பொருள்களாய் இருப்பன பூதங்கள் ஐந்தாகும்.

இந்த ஐம்பெரும் பூதங்களும் சூக்குமம், தூலம் என்று இரு நிலைகளில் உள்ளன. சூக்குமப் பூதங்கள் தூலமாக வடிவெடுப்பதற்கு ஒரு கணக்கு முறை உண்டு.

ஆகாயம்

$$\frac{1}{2} + \frac{1}{8} + \frac{1}{8} \dots \frac{1}{8} + \frac{1}{8}$$

வாயு

$$\frac{1}{2} + \frac{1}{8} + \frac{1}{8} \dots \frac{1}{8} + \frac{1}{8}$$

13. நீத்தார் பெருமை - 7 (27)

தேயு

$$\frac{1}{2} + \frac{1}{8} + \frac{1}{8} + \frac{1}{8} + \frac{1}{8}$$

அப்பு

$$\frac{1}{2} + \frac{1}{8} + \frac{1}{8} + \frac{1}{8} \quad \frac{1}{8}$$

பிருதிவி

$$\frac{1}{2} + \frac{1}{8} + \frac{1}{8} + \frac{1}{8} + \frac{1}{8}$$

சூக்கும பூதம் ஒவ்வொன்றும் இரு செம்பாகங்களாய்ப் பிரிகின்றன. ஒரு பாதி தன்னுடைய தூல அமைப்புக்கு நின்றுவிடுகின்றது. மற்றொரு பாதி, நான்கு அரைக்கால் ஆகி, ஏனைய நான்கு பூதங்களுக்குச் சமனாய்ப் பங்கிட்டுக் கொடுக்கப்பெறுகின்றது.

தூல ஆகாசம் 1 =

$\frac{1}{2}$ சூக்கும ஆகாசம்

$\frac{1}{8}$ வாயு

$\frac{1}{8}$ தேயு (தீ)

$\frac{1}{8}$ நீர்

$\frac{1}{8}$ பூமி

இங்ஙனம் சூக்கும பூதங்கள் தூல பூதங்களாய் மாறுவதைப் 'பஞ்சீகரணம்' என்று திருநாமம் இட்டு வழங்குவர்.

கீதையில் கண்ணன் "மண், நீர், தீ, காற்று, வானம், மனம், புத்தி, அகங்காரம் என்று இங்ஙனம் எட்டு விதமாய் என் பிரகிருதி பிரிவுபட்டு உள்ளது."[14] என்கின்றான்.

முதல் ஐந்தனை மேலே விளக்கினேன். உணரும் தன்மை மனத்திற்கு உண்டு. நல்லது, தீயது என்று புத்தி பாகுபடுத்து

14. கீதை 7 : 4

கின்றது. தன்னைக் கருத்தா என்று கருதுவது, அகங்காரம். அகங்காரமின்றிக் கருமம் ஒன்றும் நடைபெறாது. மண்ணோடு மண்ணாய் விதை புதைந்து கிடப்பது போன்று வாசனா சொரூப மாய் அகங்காரம் முதலிய அந்தக்கரணங்கள் மூலப்பிரகிருதியுள் புதைந்துள்ளன. தக்க வேளையில் எண்ணமாகவும் செயலாகவும் வடிவெடுக்க வல்ல இயல்புக்கு வாசனை என்று பெயர். இந்த எட்டு விதப் பிரகிருதியையே இருபத்துநான்கு தத்துவங்களாய் விரித்துச் சொல்வது வழக்கத்தில் உள்ளது. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் **நான்கு**. மெய், வாய், கண், செவி, மூக்கு என்ற ஞானேந்திரியங்கள் **ஐந்து**. ஞானேந்திரியங் களின் செயல்களான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற **ஐந்து**. இவையே தன்மாத்திரைகள். வாக்கு, கால், கை, கருவாய், எருவாய் என்ற கருமேந்திரியங்கள் **ஐந்து**. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பூதங்கள் **ஐந்து**. புருடன் எனப்படும் ஆன்மா இருபத்தைந்தாவது தத்துவம். பரமபுருடன் - புருடோத்தமன் - எனப்படும் பரம்பொருள் என்ற பரமாத் மாவுடன் சேர்த்து வைணவ தத்துவம் இருபத்தாறாகின்றது.

**அணுக்கொள்கையின் கரு :** பொருள்களை ஆக்கும் அடிப்படையான துகளே அணுவாகும் என்பது இன்றைய அணுவியல். இந்த உலகமும் இதனையொத்த வேறு அண்டங்களும் அணுவினால் ஆகியவையே. பூக்கள் சேர்ந்து பூமாலையாதல்போல, அணுக்கள் சேர்ந்து அண்டங்கள் ஆகின்றன. பழங்கால அணுவாதம் இதுதான்.

*"செகத்தையெல்லாம் அணுவளவும் சிதறா வண்ணம்*
*சேர்த்துஅணுவில் வைப்பை;அணுத் திரளை எல்லாம்*
*மகத்துவமாய் பிரம்மாண்ட மாகச் செய்யும்*
*வல்லவா நீநினைத்த வாறே யெல்லாம்"*[15]

என்று இரத்தினச்சுருக்கமாய்க் விள்க்குவர் தாயுமான அடிகள். நேற்றைய பொழிவிலும் இதனைச் சுட்டி விளக்கினேன்.

**'அசித்து'** என்ற வைணவ தத்துவமும் அணு அண்டமாதலை விளக்குகின்றது. அசித்து என்பது அறிவில்லாத பொருள். இஃது எம்பெருமானுக்கு உடலாய் (சரீர - சரீரி பாவனை) இருப்பது.

---

15. தாயு. பாடல் - தந்தைதாய் - 6

"திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவைய வைதொறும்
உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன."[16]

என்ற நம்மாழ்வார் பாசுரம் இதனை விளக்கும்.

"திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்
செழுநிலத்து உயிர்களும் மற்றும்
படர்பொருள் களும்ஆய் நின்றவன்." [17]

என்பர் திருமங்கை மன்னன்.

"மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீ
தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலின் நான்காய்
தரணிதலத் தஞ்சாகி"[18]

என்று கூறுவர், அப்பர் பெருமான். மணிவாசகப்பெருமானும்,

"நிலம்நீர் நெருப்புயிர்
நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ
டெண்பகையாய்ப் புணர்ந்துநின்றான்."[19]

என்று இவற்றோடு வேறு சிலவற்றையும் சேர்த்துப் பேசுவர்.

பஞ்சபூதங்களால்தான் உலகம் உண்டானது என்பது பண்டைய சமய நூலாரின் கருத்து. இதனை அப்படியே பின்பற்றி,

"வானின்று இழிந்து வரம்பிகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வுபோல்
உள்ளும் புறனும் உளன்என்ப."[20]

என்று கூறுவான் கம்பநாடன். வான் என்பது மூலப்பிரகிருதி. 'சுரர் அறிவு அருநிலை' (திருவாய் 1.1:8) என்ற பாசுரத்தில் 'விண்முதல் முழுவதும்' என்ற தொடரில் உள்ள **விண்** என்னும்

16. திருவாய் 1-1-7
17. பெரி. திரு. 4.3:3
18. அப்பர் தேவாரம் 6.54:5
19. திருவா. திருத்தோணோக்கம் - 5 (317)
20. கம்பரா. அயோத்தி - காப்பு.

சொல்லுக்குப் பூர்வாசிரியர் மூலப்பிரகிருதி **என்று** பொருள் கொண்டதையொட்டிப் பொருள் கொள்ளப்பெற்றது. வரம்பு கடந்து பரந்த ஐம்பெரும் பூதங்களின் காரியமாய் பரவியிரா நின்றுள்ள பௌதிகப் பதார்த்தங்கள்தோறும் (ஜகமெங்கும்) உயிரும் உடலும் போலவும், உயிரும் உணர்வும் போலவும் உள்ளும் புறத்தும் உளன் என்று சொல்லுவர், ஞானிகள். இங்கு உணர்வு என்பது தர்மபூத ஞானம். ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து அப்புவும், அப்பி லிருந்து பூமியும் தோன்றும் முறையை அருமறை கூறுதலால் 'வானின்றிழிந்து......மாபூதம்' என்றார் எனினும் பொருந்தும்.

ஐம்பெரும் பூதங்களைப்பற்றிய செய்தி 'அநுமன் துதி' யில் அற்புதமாய்க் காட்டப்பெறுகின்றது.

*"அஞ்சிலே ஒன்றுபெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி*
*அஞ்சிலே ஒன்றுஆறுஆக ஆரியற் காக ஏகி*
*அஞ்சிலே ஒன்றுபெற்றான் அணங்குகண்டு அயலார் ஊரில்*
*அஞ்சிலே ஒன்றைவைத்தான் அவன்எம்மை அளித்துக் காப்பான்."*[21]

**முதல்** ஒன்று - வாயு; **இரண்டாவது** ஒன்று - அப்பு (சமுத்திரம்); **மூன்றாவது** ஒன்று - ஆகாயம்; **நான்காவது** ஒன்று - பூமி; **ஐந்தாவது** ஒன்று - நெருப்பு.

ஐம்பெரும்பூதங்களுள் ஒன்றாகிய **வாயு** தேவனால் பெறப்பட்டு (1), பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய **ஆகாயத்தின்** வழியாக (3), ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய **அப்பைக்** (கடலைக்) கடந்து (2), இராமன்பொருட்டு ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய **பூமிதேவி** பெற்ற பெண்ணாகிய பிராட்டியைச் சேவித்து (4), அயலார் ஊராகிய இலங்கையில் ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய **நெருப்பை** வைத்துச் சென்றான் (5). அநுமன் கருணை செய்து எம்மைப் பாதுகாப்பான். - ஆதலால் அவனை வணங்குவோம் என்பது குறிப்பு.

**(4) உலகத்தோற்றம் (சமயக்கருத்து) :** (உலகத் தோற்றத்தில் - உலகம் உண்டாதலாகிய காரியத்தில் - ஈசுவரனே முதற் காரணம், நிமித்த காரணம், துணைக்காரணம் என்ற மூவகைக் காரணங்களாய் உள்ளான் என்ற வைணவ தத்துவம் கொண்டு அண்டம் உண்டாதலை விளக்கலாம். அசித்து சூக்குமமாய்

21. கம்பரா. பாலகாண் - அநுமன் துதி - 2.

(நுண்மையாய்) இருக்கும் நிலையில் - அஃதாவது, உலக உற்பத்திக்கு முன்னர் - அதனுள் இறைவன் அந்தர்யாமியாய் சங்கற்பத்தோடு நின்று இருக்கும் நிலையில் இறைவன் உலகிற்கு முதற்காரணமாகின்றான். இங்ஙனம் நுண்ணிய நிலையில் இருக்கும் அசித்தை வெளிப்படுத்த 'உலகப்படைப்பு செய்வோம்' என்று இறைவன் எண்ணுகின்ற நிலையில் இறைவன் உலகிற்கு நிமித்த காரணமாய் அமைகின்றான். இறைவனுடைய ஞானம், சக்தி முதலியவையே துணைக்காரணமாகின்றன. ஆக, இம்முறையில் இறைவன் உலகப் படைப்பிற்கு மூன்று காரணமாய் உள்ளான் என்று மெய்விளக்க அறிஞர்கள் முடிவு செய்துள்ளனர். இக்கருத்தினை ஆழ்வார் பல இடங்களில் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

"நினைந்த எல்லாப் பொருள்கட்கும்
வித்தும்ஆய் முதலில் சிதையாமே
மனஞ்செய் ஞாலத்து உன்பெருமை
மாசு ணாதோ மாயோனே."[22]

"தானோர் உருவே தனிவித்தாய்த்
தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய்."[23]

என்கின்ற பாசுரப்பகுதிகளிலும் வேறு பல பாசுரப் பகுதிகளிலும் இதனைக் கண்டு தெளியலாம்.

மேற்குறிப்பிட்ட மூன்று காரணங்களுள் இறைவன் உலகிற்கு முதற்காரணம் என்பது மிகவும் முக்கியமானது. காரணப் பொருள் பின் காரியப் பொருளாய் மாறுவது முதற்காரணம் என்பது பொது விதி. இங்கு இறைவனே இவ்வுலகப் பொருளாய் மாறினான் என்றால், அங்ஙனமன்று. இவ்வுலகப் பொருள்களுக்கு அவற்றின் நுண்ணிய நிலை, முதற்காரணம்; பருப்பொருளாய் மாறிய நிலை, காரியம்; 'இல்லது வாராது, உள்ளது சிதையாது' என்பது தத்துவம். வேதியியல் உண்மையும் இதுவே. இறைவன் நுண்ணிய நிலையிலுள்ள அசித்தின் உள்ளேயும் அந்தர்யாமியாய் உள்ளான்; பருப்பொருளாய் உள்ள நிலையிலும் அந்தர்யாமியாய் உள்ளான். நுண்மையான அசித்தில் இறைவன் அந்தர்யாமியாய் இருக்கும் நிலை முதற்காரண நிலையாகும்.

22. திருவாய் 1.5 : 2
23. திருவாய் 1.5 : 4

பருப்பொருளாயுள்ள அசித்தில் இறைவன் அந்தர்யாமியாய் யுள்ள நிலையே காரிய நிலையாகும். அதனால் இறைவன் முதற்காரணமாயுள்ள நிலையிலும் காரியமாயுள்ள நிலையிலும் சிறிதும் வேறுபடுவதில்லை.

> "சாணிலும் உளன்ஓர் தன்மை
> அணுவினைச் சதகூறு இட்ட
> கோணிலும் உளன்மா மேருக்
> குன்றினும் உளன்இந் நின்ற
> தூணினும் உளன்நீ சொன்ன
> சொல்லினும் உளன்;இத் தன்மை
> காணுதி."[24]

என்று இரணியனுக்குப் பிரகலாதன் கூறுவதாய் அமைந்த பாடலில் 'எங்கும் உளன் கண்ணன்' என்ற உண்மையைக் காணலாம். இதனால், ஈசுவரன் விகாரமற்றவன் - நிர்விகாரன் - என்று சொல்லுவதில் தவறில்லை. இக்கருத்தை ஆழ்வார் பாசுரத்தில் 'வித்தாய் முதலில் சிதையாமே' (திருவாய் 1-5 : 2) என்ற தொடர் அழகுடன் விளக்குவதைக் கண்டு தெளியலாம். உலகத்துப் பொருள்கள் போலன்றி இறைவன் தன்னிலையில் சிறிதும் சிதைவின்றி இருந்துகொண்டே எல்லாப் பொருள் களுக்கும் வித்தாய் உள்ளான் (முதற்காரணமாகின்றான்) என்பது கருத்தாகும். இங்ஙனம் இருத்தல் இவனுடைய ஆச்சரிய சக்தியாகும். இதனையே திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் அய்யங்காரும்,

> "சின்னூல் பலபலவாயால் இழைத்துச்
> சிலம்பி பின்னும்
> அந்நூல் அருந்தி விடுவதுபோல்
> அரங்கர் அண்டம்
> பன்னூறு கூடி படைத்துஅவை
> யாவும் பழம்படியே
> மன்னூழி தன்னில் விழுங்குவர்
> போதமனம் மகிழ்ந்தே."[25]

என்ற மிக அழகான உவமை கலந்த பாடலால் விளக்குவர். ஒரு சிலந்திப்பூச்சி தன்னிடத்திலிருந்து நூலை உண்டாக்கித் தான் அதனை விழுங்குகின்றது. நூல் உண்டாதற்கு முதற்காரணமா

24. கம்பரா - யுத்த. இரணியன் வதை - 124
25. திருவரங்க மாலை - 18

யுள்ள அப் பூச்சி அந்நிலையில் அழிவதில்லை. ஒரு சிலந்திக்கு இச்செயல் கூடுமேல், தன் நிலையில் சிதைவின்றித் தான் உலகிற்கு முதற்காரணமாதல் எல்லாம் வல்ல இறைவனுக்கு அரிதாகுமோ?

"ஒரு சிலந்திக்கு உண்டான ஸ்வபாவம் சர்வசக்திக்குக் கூடாதொழியா திறே" 26

என்ற தத்துவத் திரய வாக்கியமும் ஈண்டு நோக்கி உன்னற்பாலது.

மகாகவி பாரதியாரும் இவ்வுலகப் படைப்பையும், அதில் ஆருயிர்கள் துய்ப்பதையும்,

"எத்தனை கோடி இன்பம் வைத்தாய் - எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!"

என்று எக்களிப்புடன் போற்றுகின்றார். இதனை,

"சித்தினை அசித்துடன்
இணைத்தாய் - அங்கு
சேரும்ஐம் பூதத்து
வியனுல கமைத்தாய்
அத்தனை உலகமும்
வண்ணக் களஞ்சியம்
ஆகப் பலப்பலநல்
அழகுகள் சமைத்தாய்"

என்று மேலும் விளக்கி உரைக்கின்றார். மேட்டூர் அணை, கிருஷ்ணராஜ சாகர், கல்லணை முதலானவை கட்டுவதற்குக் கல், சீமைக்காரை (Cement) முதலான பொருள்கள் (அசித்து) தேவை. வினையாற்றுவதற்குத் தொழிலாளர்கள், பொறியாளர்கள் (சித்து) தேவை. சித்து, அசித்து ஆகிய இரண்டையும் இணையச் செய்தவன் கட்புலனுக்குக் காணப்பெறாத - காணமுடியாத - இறைவன் - மேற்பார்வை பார்க்கும் பொறியாளன். இதில் பங்கு பெறுபவை நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் என்ற ஐம்பூதங்கள். இவற்றின் விளைவு புன்செய் நன்செய் ஆனது; நெல்வயல்கள், பழத்தோட்டங்கள் முதலியவை அடங்கிய வியன் உலகு காணும் நமக்கு வண்ணக் களஞ்சியமாய்த் தோற்றமளிக்கும். இந்த விளக்கம் கொண்டு பாடலை நோக்குக.

26. தத். ஈசுவரப் - 29

இத்துணைப் பொருள்களையும் ஆருயிர்கள் உடல்களைப் பெற்று நுகருகின்றன; துய்க்கின்றன; அநுபவிக்கின்றன. அறம் பொருள், இன்பம் ஆகிய மூன்று செயல்களையும் புரிகின்றன. பிறவிப் பயனாய்ப் பெற வேண்டியது, முக்தி - வீடுபேறு. அதனை அடையும் உணர்வையும், அதனை அடையும் வழிகளையும் ஆருயிர்களுக்குக் காட்டுகின்றான், ஆண்டவன். இதனை,

*"முக்தி'யென் றொருநிலை*
*சமைத்தாய் - அங்கு*
*முழுதினையு முணரும்*
*உணர்வு அமைத்தாய்*
*பக்திஎன்று ஒருநிலை*
*வகுத்தாய் - எங்கள்*
*பரமா! பரமா! பரமா!"*[27]

**உலகிலுள்ள சமயங்கள் :** உலகில் எண்ணற்ற சமயங்கள் உள்ளன. பாரதியார் இவற்றை,

*"பூமியிலே கண்டம்ஐந்து, மதங்கள் கோடி!*
*புத்தமதம், சமணமதம் பார்ஸி மார்க்கம்*
*சாமியென யேசுமதம் போற்றும் மார்க்கம்*
*சநாதனமாம் இந்துமதம் இஸ்லாம்! யூதம்*
*நாமமுயர் சீனத்துத் 'தாவு' மார்க்கம்*
*நல்ல'கன் பூசி'மதம் முதலாம் பார்மேல்*
*யாமறிந்த மதங்கள்பல உளவாம் அன்றே*
*யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங் கொன்றே."*[28]

என்ற பாடலில் குறிப்பிடுவார். நம் நோக்கம் இவற்றை யெல்லாம் விளக்குவதன்று. இவற்றுள் சிலவற்றை மட்டிலும் ஈண்டு விளக்கலாம் எனக் கருதுகின்றேன்.

27. பா.க : தோ.பா - இறைவா! இறைவா! என்ற பாடலில் அமைத்துக் காட்டுவதில் முக்தி என்ற ஒரு நிலையையும் அமைத்துக் காட்டிய பேருத வியையும், அதனை அடைவதற்கான 'பக்தி' என்ற வழியை வகுத்துக் காட்டிய அற்புதத்தையும் வியப்புடன் நினைத்து நன்றியுடன் போற்றுகின்றார், கவிஞர்.

28. பாரதியார் - சுயசரிதை - 85

நம் நாட்டில் தோன்றி வளர்ந்த பழைய சமய நெறிகளை **மூன்றாய்ப்** பகுத்துரைக்கலாம். அவை : (i) ஆரியர் வருகைக்கு முற்பட்ட சிந்து வெளி மக்களின் சமயநெறி, (ii) வேத நெறிகள் அல்லது வைதிக நெறிகள், (iii) வேதங்களைப் புறக்கணித்த நெறிகள் என்பனவாகும். சிந்துவெளி நாகரிகம் மறைந்த பின்னர் எழுந்த வேதநெறியினர் சிந்துவெளி சமயக் கருத்துகள் சிலவற்றை மேற்கொண்டிருக்கலாம். எனவே, வேத நெறியினர் தமக்கெனச் சில வேள்விகளையும் சடங்குகளையும் தெய்வங் களையும் வழிபாட்டு முறைகளையும் அமைத்துக்கொண்ட போக்கினை உபநிடத நெறியினர் ஒருபுறமும்; உலகாயதம் (சாருவாகம்), ஆசீவகம், சமணம், பௌத்தம் ஆகியவற்றைப் பின்பற்றுவோர் மறுபுறமும் கண்டனம் செய்தனர். வேதநெறி கரும மார்க்கத்தை வற்புறுத்தும்; உபநிடத நெறியோ ஞானநெறியை வலியுறுத்தும்; உபநிடதங்கள் ஆரியரல்லா தாரின் சிந்தனைகளைக் கொண்டவை என்றும், வினைக் கொள்கை ஆரியர்க்கு முற்பட்டது என்றும் டாக்டர் A.L. பாஷம் என்பார் ஆய்ந்துள்ளார்.[29] ஆகவே, உபநிடதங்கள் வேதங்களின் சாரமாய், முடித்த முடிபாய் அமைந்தவை எனக் கருதப்பெறுவதால், உலகாயதம் (சாருவாகம்), ஆசீவகம், சமணம், பௌத்தம் ஆகிய நான்குமே வைதிக நெறிகளை முழுமையாகவே புறக்கணித்த புரட்சி நெறிகள் எனலாம். இவை **'புறச்சமய நெறிகள்'** என்ற பெயரால் வழங்கப்பெறுகின்றன.

வரலாற்று முறையில் சமயங்களை நோக்கினால், மன அமைதிக்காய், மனித நேயத்திற்காய், வாழ்க்கையை வளமாக்கு வதற்காய் அருளாளர்களால் (prophets) இவை தோற்றுவிக்கப் பெற்றன என்பது புலனாகும். ஆனால், பிற்காலத்தில் அவற்றை நெறிப்படுத்தி வழக்கத்திற்குக் கொண்டுவந்த குருமார்கள் (Priests) அரசர்களை மயக்கித் தம் வசமாக்கிக்கொண்டு மதத்தின் பெயரால் கொடுமைகளை இழைத்த செய்திகளும், வரலாற்றில் உள்ள சைவ-வைணவப் போராட்டங்கள், சமண சைவப் போராட்டங்கள், சிலுவைப் போர்கள் (Holy wars), நூற்றாண்டுப் போர்கள் போன்ற நிகழ்ச்சிகளும் வரலாற்றில் பதிவு செய்யப்பெற்றுள்ளன. போகிற போக்கில் இவற்றையும் சிந்திக்கின்றோம். பாரதியார் இவற்றையெல்லாம் இலக்கியச் சுவையுடன் தம் சுயசரிதையில் பதிய வைத்துள்ளார்.

---

29. History and Doctrines of the Ajivakas - pp.4-5.

## 2 (அ) வைதிக சமயத் தத்துவங்கள்

இந்து சமயத் தத்துவங்களுக்கு அருமறைகளே முதற்காரண மானவை என்று பகர்வார்கள். வேதங்களின் பல பகுதிகள் மறைந்து போய்விட்டன. ஆனால், அருமறைகளினின்றும் தெள்ளி எடுத்த **உபநிடதங்கள்** காப்பாற்றப்பெற்றுள்ளன. மெய்ப்பொருள் ஆராய்ச்சியில் உபநிடதங்களின் போக்கு எத்தகையது என்று விளக்குவது, பாதராயணரால் இயற்றப் பெற்ற **பிரம்மசூத்திரம்.** இதனை **வேதாந்த சூத்திரம்** என்று மற்றொரு திருநாமத்தாலும் வழங்குவதுண்டு. உபநிடதங்களில் அடங்கியுள்ள கருத்துகளையெல்லாம் மேலும் தெளிவு பெற விளக்குவது, **பகவத்கீதை.** இது பாரதப் போர்க்களத்தில் பார்த்தனுக்குப் பரந்தாமனால் புகட்டப்பெற்றது. மாபாரத வீடும பர்வத்தில் 25வது இயல்முதல் 42ஆவது இயல்வரையில் இந்த நூலைக் காணலாம்.

உபநிடதங்கள், பிரம்மசூத்திரம், பகவத் கீதை ஆகிய இந்த மூன்று நூல்களும் **பிரஸ்தானத்திரயம்** என்னும் பெயர் பெறுகின்றன. முடிவான பிரமாணமாய் அமைந்த மூன்று நூல்கள் என்பது இதன் பொருள். இம்மூன்றனுள் கருத்து வேற்றுமை இல்லை; முரண்பாடுகளும் இல்லை. அருமறைகளைச் (வேதங்களைச்) சார்ந்த வைதிகத் தத்துவங்கள் சாங்கியம், வைசேடிகம், நியாயம், யோகம், மீமாம்சை, வேதாந்தம், சித்தாந்தம் ஆகியவையாகும்.

(1) **சாங்கியம் :** இந்து சமய தத்துவங்களுள் - தர்சனங்களுள் - மிகவும் தொன்மையானது, சாங்கியம். இந்தத் தத்துவத்தை முறைப்படுத்தி முதலில் வெளியிட்டவர், கபிலர். (கி.மு.7,8 நூற்றாண்டு). முதலில் தோன்றியதால் இதற்கு முதன்மைச் சிறப்பு எப்பொழுதும் உண்டு. **சாங்கியம்** என்றால் பூரண அறிவு என்பது **ஒரு பொருள். 'சாங்கியா'** என்ற தாதுவிலிருந்து **'சாங்கியம்'** என்ற சொல் தோன்றியது. இத்தாதுவிற்குப் பகுத்தறிதல், எண்ணுதல் (Reasoning, Number) எனப் பல பொருள் உண்டு. உலகத் தோற்றத்தில் காணப்பெறும் கூறுகளைச் சிந்தித்துத் தெளிந்து பல வகை மூலப்பொருள்களாய் அடைவு செய்து, கண்டறிந்த தத்துவங்கள் 25 என்று எண்ணுதலால்

அகிலத்தைப்பற்றி (Universe) பூரண அறிவைத் தருவது இந்தத் தத்துவம்.

சாங்கியம் இந்த அகிலத்திற்கு மூலப் பொருள் இரண்டு என்று பேசும். அவற்றுள், ஒன்று, அறிவு சொரூபமானது. அது **புருடன்** (Soul)[30]. மற்றது, அறிவற்றது. அது **பிரகிருதி**. இவை இரண்டும் என்றும் உள்ள தத்துவங்கள் (மெய்ப்பொருள்கள்). இவற்றை யாரும் உண்டாக்கவில்லை. மூலப்பகுதி (பிரகிருதி) என்ற விதைத் தத்துவத்தினின்றுதான் இவ்வுலகப் பொருள்கள் உண்டாயின. பின்பு அவை அழிந்துபோய் சேரும் இடமும் பிரகிருதியே. புருடன் என்னும் அறிவுடைய பொருள் மாற்றம் அடையாதது. புருடன் உலகத்தோற்றத்திற்குக் காரணமும் அன்று; காரியமும் அன்று. பிரகிருதியே இந்த அகிலத் தோற்றத் திற்கான காரணம் (மூலப்பொருள்). இவ்விரு மூலப்பொருள் களின் அடிப்படையில்தான் இந்த அகிலத்திற்கும் அதில் நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் விளக்கம் தருகின்றது, சாங்கியம்.

**புருடன்** - ஆன்மா - பல என்ற கருத்தையுடையது, சாங்கியம். ஆன்மா ஒன்றேயானால் இறப்பு என ஒன்று வரும் போது யாவரும் ஒரே நேரத்தில் இறக்க வேண்டும். அப்படி ஒன்றும் நிகழாததிலிருந்து ஆன்மா பல என்ற முடிவுக்கு வந்தனர், சாங்கியர். சாங்கியம் வேதத்தை ஏற்றாலும் கடவுள் என்று ஒன்று இல்லை என்ற கருத்தையுடையது. பிரகிருதி தானே இயங்கவல்லது என்பது இதன் கொள்கை. இச்சமயத் தத்துவக் கணக்குப்படி மொத்தம் 25 தத்துவங்கள்தாம் உலகப் பொருள்கள் யாவற்றிற்கும் அடிப்படை.

(ii) **யோகம்** : சாங்கியத்துடன் ஒன்றெனக் கருதக்கூடியது இத்தத்துவம். சாங்கியத்தின் பெரும்பாலான கருத்துகளை அப்படியே ஏற்றுக்கொண்டது. பிரகிருதி, புருடன் என்ற இருதத் துவங்களுடன் **கடவுள்** (ஈசுவரன்) என்ற மூன்றாவது தத்துவத்தை யும் கொண்டது யோக தரிசனம்[31]. இறைவன் என்றும் உள்ளவன்; படைப்பிற்கு உதவுபவனேயன்றி முக்தியைக்

---

30. சாங்கியரது பிரகிருதியும் புருடனும் சமணர் கூறும் அசீவன், சீவன் என்ற கருத்தை நினைவுகூரச் செய்கின்றன.

31. இந்தக் கருத்தினால் இத்தரிசனம் சாங்கியத்தினின்றும் மாறுபட்டது.

கொடுப்பவன் அல்லன்; இறைவனும் ஒரு புருடனே. தொடக்க காலம் முதல் பிரகிருதியோடு கட்டுண்டு கிடக்காமல் தனித்திருக்கும் ஒரு புருடன். யோக தரிசனத்தை நிறுவியவர், **பதஞ்சலி.** இவருக்கு முன்பே இதன் தத்துவங்கள் வளர்ந்திருப்பினும் இவர் எழுதிய **யோக சூத்திரம்** என்ற நூல்தான் இவற்றிற்கு அடிப்படை.

சித்தத்தூய்மை பெற்று, 'யான்', 'எனது' என்ற அகப்பற்று புறப்பற்றுகளை அறவே நீக்குதலே **யோக தரிசனம்.** பிரகிருதியின் பிடியிலிருந்து விடுபட்டு அறிவுமயமான தனது உண்மை நிலையை அடைவதே புருடனின் (ஆன்மாவின்) குறிக்கோள். பரம்பொருளாகிய பிரம்மத்துடன் சேர்வது என்னும் வைதிகச் சமயங்களின் குறிக்கோளை யோக சமயத்தினர் ஏற்பதில்லை. பிரகிருதியிலிருந்து தனியாய்ப் பிரிந்து அறிவு மயமாய்த் தனித்திருப்பதுதான் ஆன்மாவின் குறிக்கோள் என்பது யோக சமயத்தினர் தரும் விளக்கமாகும். இதற்கு இவர்கள் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம் (புலன்களைக் கட்டுப்படுத்தல்), தாரணை (மனத்தை ஒருநிலைப் படுத்தல்), தியானம் (தத்துவ உண்மைகளை ஊன்றி எண்ணல்) சமாதி என்ற எட்டுப்படிகளைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்று கூறுவர். இவ்விதிகளை நடைமுறையில் கடைப் பிடித்தால்தான் முக்தி அடைய முடியும். அஃதாவது ஆன்மா, ஆசை, துன்பம், கேடு முதலியன நீங்கப்பெற்று பிரகிருதியி லிருந்து விடுபட்டுத் தனது ஆநந்த ஞான நிலையை எய்தும். சீவன் முக்தி என்பது இந்த வையத்தில் இப்பிறவியில் இறப்பதற்கு முன்பாகவே முக்தி அடைவது.

**(3) வைசேடிகம் :** இதுவும் வேதத்தைச் சார்ந்த தரிசனம். வேதக்கருத்துகளை ஒரு பரிமாணமாய் ஏற்றாலும், தனக்கென ஒரு சிந்தனையுடன் தத்துவங்களை அமைத்துக்கொண்டது, வைசேடிகம். இத்தரிசனத்தின் அடிப்படை நூல், **கணாத முனிவரால்** எழுதப்பெற்ற **வைசேடிக சூத்திரம்.** கணாதர் என்ற சொல்லின் பொருள் அறியத்தக்கது. கணம் - அணு; அதி - உண்ணுதல்; ஆதலின், அணு விழுங்கியார் (Atom swallower) என்று 'கணாதர்' என்ற சொல்லுக்குப் பொருள் உரைப்பர். மிக நுண்ணியதும், பிரிக்கவொண்ணாததுமான அணுவினை உள்பொருளாய் (Reality) மதித்ததால் இப்பெயர் இவருக்குப்

பொருந்தும் என்பர்[32]. இவருடைய இயற்பெயர், காசியபர் என்பது.

இவர் உருவாக்கிய வைசேடிகத் தத்துவத்திற்கு **ஔலூக தரிசனம்**[33] என்ற பெயரும் உண்டு. ஔலூகம்' என்ற சொல் உலூகம் (= கூகை, owl) என்ற சொல்லின் அடியாய்ப் பிறந்தது. பகற்பொழுது முழுதும் தியானத்தில் பழகி, இரவில்மட்டிலும் உணவு கொள்ளுதலின், இரவில் மட்டிலுமே விழித்திருக்கும் கூகை போன்றவர் என்ற கருத்தில் இப்பெயர் ஏற்பட்டது. அக்காலத்து முனிவர் பலரின் நடைமுறையினைக் கணாதரிடம் காண முடிகின்றது.

**பெயர்க்காரணம் :** வைசேடிகம் என்ற பெயர்க்காரணத்தையும் காட்டுவேன். வைசேடிகர் காட்சிப் பொருள் உண்மை வாதிகள் (Realists). இவர்கள் கண்ட அறுவகைப் பொருள்களுள் (ஷட்பதார்த்தங்கள்) விசேடம் என்பது முக்கியத்துவம் வாய்ந்தது. **'விசேடம்'** என்ற சொல்லின் அடியாய்த் தோன்றியது வைசேடிகம். குறிப்பிட்ட ஒரு பொருள் ஏனைய பொருள் களினின்றும் வேறுபடுத்தற்குரிய விசேட இயல்புகள் அல்லது சிறப்புத்தன்மைகளை ஆராய்தலின், இத்தத்துவம் வைசேடிகம் எனப் பெயர் பெற்றதாய்க் கூறுவர். ஏனைய தத்துவங் களுக்கில்லாத தனிச்சிறப்பு இதற்கு உண்டு. பொருள்களின் விசேடத் தன்மைகள்தாம் அவற்றின் உண்மைகளைச் சாதிப்பன என்பது இத்தத்துவத்தின் கருத்தாகும்.

உலகப் பொருள்களின் ஆக்கத்திற்கு **அணுக்களே** மூலப் பொருள்கள். அவை ஒன்றுசேர்ந்து மூலப்பொருள்களாகின்றன. அவற்றை அழிக்கும்போது மீண்டும் அணுக்களாகிவிடுகின்றன. இந்த அணுக்கொள்கையைத் தீவிரமாய் நிலைநிறுத்தியது வைசேடிகத் தத்துவம். இத்தகைய நுண்பொருள்களை அணுக்கள் என்றும், பரமாணுக்கள் என்றும் குறிப்பிடுகின்றது, இத்தத்துவம். அணுக்களை மேலும் பிரிக்க முடியாது என்பது இத்தத்துவம். இக்கொள்கையே இத்தத்துவத்தின் மிக முக்கியமானது.[34]

---

32. Rathakrishnan, S.Dr. Indian Philosophy, Vol. II, P.178

33. மாத்துவர் இப்பெயரினால்தான் இத்தத்துவத்தைச் சுட்டினர்.

34. நம் நாட்டுச் சமணமும் இக்கொள்கையுடையது. பௌத்தத்தின் ஒரு பகுதியினர் இக்கொள்கையை ஏற்பர். மேலைநாட்டு **டெமாகிரிட்டஸ், எபிகியூரஸ்** போன்றவர்களும் இதனை ஏற்பர்.

ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயத்தைத் தவிர நிலம், நீர், காற்று, நெருப்பு என்ற நான்கும் அணுக்களால் ஆனவை. அணுக்களின் சேர்க்கையால் இப்பூதங்கள் உண்டாகின்றன. இவ்வைந்து பூதங்களால்தாம் இந்த அகிலம் முழுவதும் தோற்றுவிக்கப்பெற்றுள்ளது என்பது இத்தத்துவம். இந்த ஐந்து பூதங்களோடு காலம், இடம், மனம், ஆன்மா என்ற நான்கும் சேர்ந்து, ஆக மொத்தம் **ஒன்பது** திரவியங்களாலாகியது, இந்த அகிலம் என்பது இத்தத்துவத்தின் கருத்து. இவ்வாறு மாறுவதற்குக் கடவுள் காரணமாகின்றார் என்பதையும் இத்தத்துவம் ஏற்கின்றது.

**(4) நியாயம் :** இதனை **நையாயிகம்** என்றும் வழங்குவர். 'நியாயம்' என்ற சொல் 'நய' என்ற வேர்ச்சொல்லின் அடியாய்த் தோன்றியது. மெய்ப்பொருள் முடிபிற்கு உய்க்கும் வழிகளை ஆராயும் அறிவியற்கலைதான் நியாய தத்துவம் ஆகும். உயர்ந்த தர்க்க ஞானத்தினால் ஆராயப்பெற்ற உண்மைகளைக் கூறுவது இது. பிரத்தியட்சப்பிரமாணத்தையும்[35] தர்க்க நியாயத்தையும் அடிப்படையாய்க் கொண்டது, இந்தத் தத்துவம்.

நியாய தத்துவம் உலகில் உள்ள பொருள்கள் யாவும் உண்மை என்று கூறும். உலகப் பொருள்களின் ஆக்கத்திற்கு **அணுக்களே** மூலப்பொருள் என்ற வைசேடிகர்களின் கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளது, இத்தத்துவம். ஆன்மாவும் உண்மைப் பொருள். சைதன்யம் அல்லது அறிவுடைமை அதன் சிறப்பியல்பு. இந்தச் சிறப்பியல்பு ஆன்மா உடலோடும் மனத்தோடும் ஒட்டியிருக்கும் போதுதான் ஏற்படுகின்றது. உடலும் மனமும் இல்லையேல் ஆன்மாவிற்குச் சைதன்யம் இராது என்பது இத்தத்துவத்தின் விளக்கம். **உணர்வுகளற்ற ஆன்மாவாய் மாற முயல்வதே முக்தியாகும்.** கடவுள் உண்டென்பது இத்தத்துவத்திற்கு உடன்பாடு. கடவுளும் ஓர் ஆன்மா என்று கூறுகிறது, இத்தத்துவம். ஆன்மாவைச் சீவான்மா என்றும், கடவுளைப் பரமான்மா என்றும் குறிப்பிடுகிறது. உலகைப் படைத்தல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் கட்வுளது கடமைகளாகின்றன. கடவுள் நியமித்த காரணன் என்று விளக்குகின்றது, இத்தத்துவம்.

---

35. உண்மையினை அளக்க உதவும் கருவியினைப் **'பிரமாணம்'** என்பர், வடநூலார். அழகிய தமிழில் இ∴தை 'அளவை' என்று கூறுவர் (சாத்தனார்).

இவண் கூறப்பெற்ற நான்கும் மக்களால் பின்பற்றப்படாமல் ஏட்டுச் சுரைக்காயாய் இருப்பவையாகும்.

5 **மீமாம்சை :** அருமறைக் கூறுகளை அப்படியே ஏற்றுக் கொள்ளும் சமயங்களுள் மீமாம்சை முன்னோடியானது. மீமாம்சை என்ற சொல் 'முறையாய் ஆராய்தல்' என்ற பொருளுடையது. மீமாம்சை பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை என்ற இருபிரிவுகளையுடையது. முன்னது, வேதத்தின் முதற்பகுதியாகிய பிரமாணத்தை அடிப்படையாய்க் கொண்டது. பின்னது, வேதத்தின் இரண்டாம் பிரிவான உபநிடதத்தை அடிப்படையாய்க் கொண்டது. மீமாம்சைபற்றிப் பல நூல்கள் உள்ளன. அவற்றுள் மிகவும் பழைமையானது **கல்ப சூத்திரம்.** எனினும், **ஜைமினியால்** இயற்றப்பெற்ற **மீமாம்ச சூத்திரம்** மிகவும் முக்கியமானது.

நியாய வைசேடிகர்களைப் போலவே மீமாம்சகரும் உலக ஆக்கத்திற்கான மூலப்பொருள்கள் பல என்ற கருத்தைக் கொண்டவர்கள். உலகப் பொருள்கள் யாவும் உண்மைப் பொருள்கள் என்பதை ஒத்துக்கொள்பவர்கள். இவர்கள் **அணுக் கொள்கையை** ஏற்பவர்கள். ஐம்பெரும் பூதங்கள் அணுக்களால் ஆனவை என்பதை ஏற்றுக்கொண்டாலும் கண்ணுக்குப் புலப்படும் கூட்டணுக்களைத்தாம் அணு என்கின்றனர். ஒற்றை அணுக்கள் இரண்டாகவும் மூன்றாகவும் இணைந்திருக்கும் அணுத் தொகுப்புகளுங்கூட கண்ணுக்குப் புலனாகாமல் உள்ளன என்ற வைசேடிகர்களின் கூற்றை இவர்கள் ஏற்பதில்லை. வேதத்தில் இவர்கள் அழுத்தமான நம்பிக்கையுடையவர்கள்.

ஆன்மாக்கள் பல என்பதும், அவை என்றும் இருப்பவை என்பதும், எங்கும் நிறைந்தவை என்பதும் இவர்தம் கொள்கை. ஆன்மாவை மனத்தில் உணர முடியும் என்ற கருத்தை யுடையவர்கள். ஆன்மாக்களுக்கெல்லாம் தலைமையான **பரமான்மா** என்ற ஒன்றில்லை என்பது இவர்தம் கருத்தாதலால் பல கடவுள்கள் உள்ளன என்பதும், முழுமுதற்கடவுள் ஒன்றில்லை என்பதும் இவர்தம் கொள்கைகளாகும். இதற்கு இவர்கள் கூறும் பல விளக்கங்களுள் மிக முக்கியமானது **பிரத்தியட்சம், அனுமானம், ஆப்த வாக்கியம்** என்ற மூன்றாலும் அறுதியிட முடியாது என்பதாகும். வேள்வி புரிவதில் நம்பிக்கை

மிக்கவர்கள்: வேள்வியால் விரும்பிய பலனை அடையலாம் என்பதும், அவற்றால் தெய்வங்களில் ஆற்றல் நின்று விடுகின்றது என்பதும் இவர்தம் அதிராத நம்பிக்கை.

2(அ) க. **வேதாந்தம் :** பிரஸ்தானதிரயம் புகட்டுகின்ற கோட்பாடுகளையெல்லாம் தொகுத்து வேதாந்தம் என்று கூறுவது முறை. வேதத்தினுடைய அந்தம் அல்லது முடிவு வேதாந்தம். இம்மை என்று நுவலப்பெறும் இவ்வுலக வாழ்க்கையைப்பற்றியும், மறுமை எனப்படும் சுவர்க்கம், மோட்சம் (வீடுபேறு) ஆகியவற்றைப்பற்றியும் பகர்வது. வேதம். இந்தக் கோட்பாட்டை வேறு விதமாய்க் கூறினால் **இந்திரியங்கள்**மூலம் நுகர்கின்ற அகில வாழ்க்கையைப்பற்றிப் பேசுவது, **வேதம்.** இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் அப்பாற் பட்ட பரத்தைப்பற்றிப் புகட்டுவது, **வேதாந்தம்.** இந்திரிய வாழ்க்கையைத் தியாகம் செய்தால் ஒழிய பரம் என்னும் நிலை கைவரப்பெறாது.

நம் நாட்டிலும் பிற நாடுகளிலும் தோன்றியுள்ள எல்லாச் சமயங்களின் அடிப்படைத் தத்துவங்களை வேதாந்தத்தில் காணலாம். வேதாந்தத்தில் இல்லாத கோட்பாடு உலகில் எந்தச் சமயத்திலும் இல்லை என்று உறுதியாய் உரைக்கலாம். ஆகவே, சமயங்களுக்கெல்லாம் தாய்ச் சமயமாய் இருப்பது, வேதாந்தம். மெய்ப்பொருளுக்கு எப்பெயர் இட்டு அழைப்பதும் வேதாந்தத்திற்கு உடன்பாடு. பெயரையும் விளக்கத்தையும் முன்னிட்டுச் சமயங்கள் சண்டையிட்டுக்கொள்கின்றன. அடிப்படையில் உள்ள கோட்பாட்டைக் காணுமாறு தூண்டுவது, வேதாந்தம். வேட்கையைத் தணிப்பது ஜலமா, தண்ணீரா, தீர்த்தமா, பானியா, வெள்ளமா என்று வாதாட வேண்டா. ஜலம், தண்ணீர், தீர்த்தம், பானி, வெள்ளம் என்ற சொற்கள் குறிக்கும் பொருள் யாது என்பதை ஆராய்ந்து பார்த்தலே அறிவுடைமை. இப்படி நோக்கினால் வேற்றுமையும் வீண் வாதமும் ஒடுங்கும். மனிதன் அடையும் மேலான நிலை ஐயம் திரிபின்றிப் புலனாகும். வேதாந்தம் இதற்கு வழி காட்டுகின்றது.

வேதாந்தத்தில் **அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம்** ஆகிய மூன்று தத்துவங்கள் தோன்றியுள்ளன. அவற்றைச் சுருக்கமாய் அறிந்துகொள்வோம்.

(1) **அத்வைதம் :** இது **சங்கர வேதாந்தம்** என்றும் வழங்கப் பெறும். **'அத்வைதம்'** என்று சொல் இரண்டற்றது என்று பொருள்படும். சகம், சீவன் என்ற சொல்லுபவை வேறு, பரம் வேறு அல்ல; உள்ளது ஒரே பொருள். அஃது அகண்ட **சத், சித், ஆனந்தம்.** தன்னைச் சகமாகவும் சீவனாகவும் காட்டிக் கொள்ளுகின்ற வல்லமை அதனிடத்து உள்ளது. அந்த வல்லமைக்கு அதனுடைய **மாயா சக்தி** என்று பெயர். பிரம்மமும் பிரமத்தினுடைய சக்தியும் இரண்டல்ல. சீவனிடத்துள்ள அஞ்ஞானத்தால் (அறிவின்மையால்) சகம் என்றும் சீவன் என்றும் பேதம் அவனுக்குத் தோன்றுகின்றது. பிரம்ம ஞானத்தில் பிரம்மம் ஒன்றே யாண்டும் உள்ளது. ஆறு ஆழியில் கலப்பது போன்று, ஞானம் அடைந்த சீவன் பரத்தில் கலந்து விடுகின்றான். இஃது அத்வைதம் புகட்டும் முக்தி.

கேரளத்தில் **காலடி** என்ற ஊரில் தோன்றிய ஆதிசங்கரர், அவர் ஆசிரியர் கோவிந்தர், கோவிந்தர். ஆசிரியர் கௌடபாதர் ஆகியோரின் எண்ணங்களில் உதித்தது இந்தத் தத்துவம். பிரம்ம சூத்திரத்திற்கு ஆதிசங்கரர் வரைந்த **'சங்கர பாஷியம்'** (சங்கரப் பேருரை) உலகப்புகழ் பெற்றது. தாயுமானவர் பாடல்களில் உள்ள **'பரமசிவ வணக்கப்'** பாடல்கள் அனைத்தும் அத்வைதக் கருத்துகள் கொண்டவை.

(2) **விசிட்டாத்வைதம் :** இஃது இராமாநுசருடைய வேதாந்தம் என்றும் பெயர் பெறும். இத்தத்துவத்தை இராமா நுசர் எங்கும் பரவச்செய்ததனால் இஃது **இராமாநுசர் தரிசனம்** என்ற பெயரும் பெற்றது. திருக்கோட்டியூர் நம்பி இதற்கு **எம்பெருமானார் தரிசனம்** என்றும் சிறப்புப் பெயரிட்டார் என்பது வரலாற்று உண்மை பொதிந்தது.

**'விசிட்டாத்வைதம்'** என்ற தொடர் மொழி விசிஷ்டய்ய + அத்வைதம் என விரியும். விசிஷ்டம் - விசேஷம். சித்து, அசித்து இவற்றை உடலாயுடைய விசேஷத்தை உடையது. அஃதாவது, உலகும் உயிரும் பிரம்மத்திற்கு விசேஷணங்கள்; இறைவன் விசேஷியம். இவை இரண்டும் சேர்ந்ததே விசிஷ்டம் என்பது. சித்து, அசித்து இவற்றின் சேர்க்கையால் விளங்கிடும் இரண்டற்ற ஒன்றானதே பிரம்மம். அத்வைதம் - அ + த்வைதம் என விரியும். இங்கு துவி - இரண்டு = துவைதம் என்றாகின்றது.

அ - இல்லை + துவைதம் - இரண்டற்றது என்று பொருள் படுகின்றது.

இராமாநுசரின் கருத்துப்படி உலகம் (அசித்து), உயிர் (சித்து), இறைவன் (ஈசுவரன்) யாவும் உண்மை; உலகும் உயிரும் பிரம்மத்திற்கு உடல். அது **சரீர - சரீரிபாவனை** (உடல் உயிர் உறவு) என்று வழங்கப்பெறும். ஆன்மாக்கள் பிரம்மத்தின் பகுதிகளே என்பதும், ஆன்மாவையும் உடலையும் இயக்கும் உயிரே இறைவன் என்பதும் இவருடைய விளக்கம். 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' (திருவாய் 1.1:7) என்று விளக்குவர், நம்மாழ்வார்.

> *"தனிமாப் புகழே எஞ்ஞான்றும்*
> *நிற்கும் படியாய்த் தான்தோன்ற*
> *முனிமாப் பிரம்ம முதல்வித்தாய்*
> *உலகம் மூன்றும் முளைப்பித்த*
> *தனிமாத் தெய்வம்"* — திருவாய் 8.10:7

என்று மேலும் விளக்குவர்.

**இறைவனின் திருமேனிகள் :** இறைவனுடைய திருமேனி பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்ற ஐந்து வகையோடு கூடியிருக்கும்.

**பரத்துவம் :** பெரிய பிராட்டியார், பூமிப்பிராட்டியார், நீளாதேவி இவர்களும் நித்திய முக்தர்களும் சூழ வைகுந்தத்தில் இருக்கும் இருப்பு, **வியூகம் :** பல்வேறு வகையில் இவ்வுலகைப் படைத்தல் முதலிய தொழில்களை நடத்துவதற்கும் பிறவற்றிற்கும் வியூகவாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருந்தரன் என்ற பெயர்களுடன் நான்கு நிலைகளில் இருக்கும் இருப்பு. **விபவம்:** இராமகிருஷ்ணாதி அவதாரங்கள் உட்பட எண்ணற்ற அவதாரங்கள் அடங்கியது. **அந்தர்யாமித்துவம் :** சேதநர்களின் உள்ளே புக்கிருந்து எல்லாச் செயல்களுக்கும் ஏவுபவனாய் இருக்கும் இருப்பு. **அர்ச்சை :** அன்பர்கள் எதைத் தமக்குத் திருமேனியாய்க் கொள்கின்றனரோ அதனையே தம் வடிவமாய்க் கொண்டுள்ள நிலை.

ஆன்மாக்கள் நித்தியமானவை, எண்ணற்றவை. சீவான்மாக்கள் **பத்தர்** - தளைப்பட்டிருப்பவர், **முத்தர்** - முன்னர்க் கட்டுண்டு, பின்னர் விடுபட்டு முக்தி நிலையை அடைந்தவர், **நித்தியர்** - என்றுமே கட்டுண்டு இருந்திராத முத்தி நிலையில் உள்ளவர் என மூவகைப்படும். ஆன்மாவின் முக்கிய குணம்

ஞானம் உடையை. இதுவே **தர்மபூத ஞானம்** என்பது. பரமான்மாவின் ஞானம் முழுமையானது; ஆன்மாக்களின் ஞானம் முழுமையுடையதன்று. இந்த ஞானத்தின் துணையின்றி ஆன்மாக்கள் இயங்க முடியாது. இன்பம், துன்பம், ஆசை, நிராசை போன்றவை தர்மபூத ஞானத்தின் வடிவங்கள்.

ஆன்மா முத்தியடையக் கர்மம், ஞானம், பக்தி என்று மூன்று வழிகள் உள்ளன. பக்தி, உயர்ந்த வருணத்தார்க்கே உரியது. எல்லோரும் எளிதில் அனுட்டிக்கக்கூடிய வழி, பிரபத்தி; இதுவே சரணாகதி என்பது. இவற்றிற்கெல்லாம் பெரிய பிராட்டியார் புருஷகாரமாய் (பரிந்துரைப்பவளாய்) இருப்பதாய்க் கொள்வது வைணவ தத்துவத்தின் சிறப்பாகும். இது சக்தியின் செயற்பாடு.

இராமாநுசர் தமிழகத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தவர். சங்கரரைப்போல இவரும் பிரம்மசூத்திரத்திற்கும் கீதைக்கும் விளக்க உரைகள் எழுதியவர். பிரம்மசூத்திரத்தின் விளக்க வுரையே மிகுபுகழ் பெற்ற **ஸ்ரீபாஷியம்** ஆகும். வைணவம் பற்றிய கருத்துகள் அனைத்தும் விவரமாய் இந்நூலில் விளக்கப் பெற்றுள்ளன.[36]

**(iii) துவைதம் :** இது **மத்துவ வேதாந்தம்** என்றும் வழங்கப் பெறும். ஆன்மா வேறு, இறைவன் வேறு; இரண்டும் என்றுமே ஒன்றாவதில்லை என்பது இவர் தரும் விளக்கம். இத்தத்துவப்படி ஈசுவரன், சீவன், சடம் ஆகிய மூன்றும் அநாதியானவை; உண்மையானவை. அவற்றிற்குத் தோற்றமும் இல்லை, முடிவும் இல்லை. திருமாலே பரம்பொருள். பிரத்தியட்சம், அனுமானம், ஆப்தவாக்கியம் என்னும் பிரமாணங்களையே ஒப்புக்கொள்வது இத்தத்துவம். உபநிடதங்களைவிடப் புராணங்களையே அடிப் படையாய்க் கொள்வது. **சீவன் முக்தி** என்ற கருத்து இவர் களிடம் இல்லை; அதைப்பற்றி அதிகமாய்ப் பேசுவதும் இல்லை. சில ஆன்மாக்களுக்கு உய்தி பெறும் வழியே இல்லை. எப்பொழுதும் இவை நரகத்தில் உழலும் என்ற கருத்தைக் கொண்டது. வீடுபேற்றிலும் ஆன்மாக்களின் வாழ்வு அவர்தம் இயல்புகளுக்கு ஏற்ப ஏற்றத்தாழ்வுகளோடுதான் ஆனந்த நிலையைப் பெற முடியும் என்பதும் இக்கொள்கையின் ஒப்ப முடிந்த முடிவு.

36. **முத்தி நெறி** - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (டி.டி. கே.சாலை, சென்னை - 18)

நம் நாட்டைப் பொறுத்தவரையில் தத்துவமும் சமயமும் வேறு வேறாய் இருப்பினும் இரண்டிற்கும் அடிப்படை வேதங்களும் ஆகமங்களும் ஆகும். தத்துவஞானம் என்பது அறிவு நிலையில் இந்த அகிலத்தின் மூலத்தையும், அது வளர்ந்த வழியினையும், மற்ற இயல்புகளையும் ஆராய்வது. சமயம், மக்களின் வாழ்விற்கு ஒரு நோக்கத்தையும், அதனை அடையும் வழியையும் வகுப்பது. அதற்காக முழுமுதற்கடவுளை அடிப்படையாய் முன்வைத்து வாழ்க்கை முறையை நெறிப்படுத்துவது சமயமாகும். தத்துவ ஞானத்தில் அனுமானிக்கப்பெற்ற முழுமுதற்பொருளுக்கும் நம்பிக்கையின் அடிப்படையில் அமைத்துக்கொண்ட இறைவனுக்கும் உள்ள தொடர்பை ஆராய முற்பட்டனர் பலர். இவர்களுள் முக்கியமானவர்களை மேலே கண்டோம்.

**2(அ) உ. சைவ சித்தாந்தம் :** சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபாய்க் கொள்ளப்பெறும் பொருள்கள் **பதி, பசு, பாசம்** என்ற மூன்றாகும். பதி - இறைவன். பசு - ஆன்மா. பாசம் - உலகம் (தளை). இம்மூன்றும் நிலையான பொருள்கள். இவை அநாதியாய் இருப்பவை.

*'பதிபசு பாசம் எனப்பகர் மூன்றின்*
*பதியினைப் போற்பசு பாசம் அனாதி.'*[37]

என்று தெளிவுபடுத்துவர், **திருமூலர்**. இவை நித்தியமாய் இருப்பினும் ஒன்றற்கொன்று சமமாய் இருப்பது அன்று.

இத்தத்துவப்படி இறைவனுடைய எட்டுக் குணங்களைக் குறுக்கி **சத்** (உண்மை), **சித்** (அறிவு), **ஆனந்தம்** என்று கூறுவர். இறைவன் உருவம், அருவம், அருவுருவம் என்ற மூன்று நிலைகளில் வழிபடப்படுபவன். உருவத்திற்குத் தில்லைச் சிற்றம்பலவனும், அருவத்திற்குச் சிதம்பர இரகசியமும், அருவுருவத்திற்குச் சிவலிங்கமும் எடுத்துக்காட்டுகள். பதி (இறைவன்) தன்னையே நோக்கி நிற்கும் நிலையில் காணப்படும் இயல்புகள் பதியின் சொரூப இலக்கணமாகும். பதி, உலகை நோக்கியிருக்கும் போதுள்ள இயல்புகள் தடத்த இலக்கணமாகும். சொரூப நிலையில் இறைவன் **'பரமசிவன்'** என வழங்கப்பெறுகின்றான். தாயுமான அடிகளின் பரமசிவ வணக்க முதற்பாடலில் சிவத்தின் 'சொரூப இயல்பு' நுவலப்பெற்றிருத்தலைக் காணலாம்.

37. திருமந் - முதல் தந். உபதேசம் - 3

பதி, பரசிவம் என நிற்குங்கால் அதன் சக்தி **'பராசக்தி'** என வழங்கப்பெறும். இதன் ஒரு சிறுகூறு உலகத்தைத் தொழிற்பட முற்படும். அப்பொழுது அஃது **'ஆதி சக்தி'** என வழங்கப்பெறும். **'திரோதான சக்தி'** எனப்படுவதும் இதுவே. திரோதானம் - மறைப்பது. இச்சக்தி, உலகத்தைத் தொழிற்படுத்த நினைக்குங் கால் அஃது **'இச்சாசக்தி'** எனப் பெயர் பெறுகின்றது. அதற் குரிய வழிகளை அறிதலால் **'ஞானசக்தி'** என்ற திருநாமத்தை யும் ஏற்கின்றது. அவ்வழியே தொழிற்படுத்தி நிற்றலால் **'கிரியா சக்தி'** என்ற திருப்பெயரையும் கொள்கிறது. இவ்வைந்து சக்திகளும் **'பஞ்ச சக்திகள்'** என வழங்கப்பெறும். இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் இருப்பதாய்க் கூறப்பெறும்.

*பசு* - ஆன்மா. இது மூன்று வகைப்படும்; மூன்று நிலையில் இருக்கக்கூடியது. ஆணவ மலத்தோடு மட்டும் கலந்திருக்கும் நிலை **'கேவலம்'** என்று வழங்கப்பெறும். கேவலம் - தனிமை. இந்நிலை **இருள்நிலை.** இந்த ஒருமலம் உடைய ஆன்மாக்கள் **'விஞ்ஞானகலர்'** எனப் பெயர் பெறுவர். ஆணவத்தை அடுத்து நிற்பது, கன்மம். ஆணவம், கன்மம் என்ற இருமலங்களையும் உடைய நிலை **மருள் நிலை.** இந்நிலை ஆன்மாக்கள் **'பிரளயா கலர்'** என வழங்கப்பெறுவர். மூன்றாவது மலம் மாயை. ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களையும் உடைய நிலை **'அருள் நிலை'** இந்த நிலை ஆன்மாக்கள் **'சகலர்'** எனப் பெயர் பெறுகின்றனர்.

ஆன்மா எப்போதும் தனித்திருப்பதில்லை. ஒன்று, ஆணவத் தோடு சார்ந்திருக்கும்; அல்லது இருமலம், மும்மலங்களோடு சார்ந்திருக்கும்; அல்லது இறைவனோடு சார்ந்திருக்கும். அஃதாவது, ஆன்மா அஃது அடையும் பொருளின் தன்மையாய் மாறிவிடும். இதனைச் சித்தாந்தம் **'சார்ந்ததன் வண்ணமாதல்'** என்று பேசும். 'நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்' (குறள் - 452 - சிற்றினஞ்சேராமை) என்று வள்ளுவரும் உவமையால் விளக்கிப்போந்தார். சைவசமயக் கருத்துகள் அனைத்தும் என் நூலில் விரிவாய் விளக்கப்பெற்றுள்ளன.[38]

---

38. சைவ சமய விளக்கு - சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் (டி.டி.கே. சாலை, சென்னை-18)

ஆன்மா வீடுபேறு அடைவதற்குச் சைவத்தில் **நான்கு வழிகள்** உண்டு. முதலாவது, கிரியை எனப்படும் **தாச மார்க்கம்** அல்லது **தொண்டுநெறி.** நாவுக்கரசர் கடைப்பிடித்த நெறி இது. இரண்டாவது, சரியை எனப்படும் **சற்புத்திர மார்க்கம்** அல்லது **மகன்மை நெறி.** இது ஞானசம்பந்தர் பின்பற்றிய நெறி. மூன்றாவது, யோகம் எனப்படும் **சகமார்க்கம்** அல்லது **தோழமை நெறி.** சுந்தரமூர்த்தி இதற்கு எடுத்துக்காட்டாய் அமைகின்றார். நான்காவது, **சன்மார்க்கம்** எனும் **ஞானநெறி.** இஃது ஈசுவரனைப்பற்றிய அறிவு சார்ந்த நெறி. மணிவாசகப்பெருமான் இதற்கு எடுத்துக்காட்டாகின்றார்.

**பாசம்** என்பது மூன்றாவது தத்துவம். இதில் ஆணவம், கன்மம், மாயை என்று மூன்று பொருள்கள் அடங்கியுள்ளன. இவை **'மும்மலங்கள்'** என வழங்கப்பெறும். மலம் - அழுக்கு. ஆணவமும் கன்மமும் ஆன்மாவைப் பற்றுவன. கன்மம் - வினை. மாயையால்தான் உலகம் உண்டாகின்றது. மாயை கண்ணுக்குப் புலனாகாதது. சைவம் 36 தத்துவங்களைப்பற்றிப் பேசுகின்றது. மாயையிலிருந்து 24 தத்துவங்கள் தோன்றுகின்றன. பஞ்ச பூதங்கள் இவற்றில் அடங்கும். 36 தத்துவங்களை 36 மூலப் பொருள்களாகவும் (Elements), அவற்றின் **அணுக்களாகவும்** (Atoms) கொள்வது அறிவியல் பார்வை. ஆகவே, மாயை என்பது அணுவிற்குள் உள்ள பகுதிகளைச் (Sub-atomic particles) சுட்டுவதாய்க் கொள்ளலாம். இன்றைய அறிவியல் உண்மைகள், சமயங்களின் சில விளக்கங்களோடு முழுவதுமாய்ப் பொருந்து வதைக் காணமுடிகின்றது.

2 (ஆ) **புறச்சமயத் தத்துவங்கள் :** அருமறைகளைச் சாராமல் தனிப்பட்ட முறையில் நம் நாட்டில் வளர்ந்த தத்துவங்கள் **'புறச்சமயத் தத்துவங்கள்'** என்று வழங்கப்பெறுகின்றன. வேதங் களைச் சாராத இத்தத்துவங்களை அவைதிகத் தத்துவங்கள் என்றும் வழங்கலாம். இவற்றுள் முக்கியமானவை, நான்கு; உலகாயதம், ஆசீவகம், சமணம், பௌத்தம் என்பனவாகும்.

(1) **உலகாயதம் :** 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்' என்ற இத்தத்துவம் வேத விளக்கங்களை ஏற்றுக்கொள்ளாத ஒரு தத்துவம். இத்தத்துவவாதிகள் கண்ணாலும் மற்றப் புலன் களாலும் உணரக்கூடியவற்றை மட்டும் ஒப்புக்கொள்பவர்கள். அனுமானிக்கக்கூடிய பொருள்களிலும் ஆப்த வாக்கியங்களிலும் நம்பிக்கை கொள்ளாதவர்கள். கடவுள், ஆன்மா என்பவை

புலன்களால் உணர முடியாதவையாதலாலும் அனுமானிக்க மட்டிலும் கூடியவையாதலாலும் உலகாயதர் அவற்றை நம்புவதில்லை. இவர்கள் உலகப்பொருள்களைமட்டிலும் விளக்கியுள்ளனர். இவர்களது விளக்கங்கள் இக்கால அறிவியலறிஞர்கள் மெய்ப்பித்த விளக்கங்களோடு ஒத்திருப்பவை. உலகப் பொருள்களின் உற்பத்தி. அவற்றின் அழிவு, உயிர்பற்றிய கருத்து இவற்றைப் பன்னெடுங்காலத்திற்கு முன்னரே விளக்கியுள்ளனர்.

உலகப்பொருள்கள் யாவும் நிலம், நீர், காற்று, நெருப்பு என்ற நான்கு அடிப்படைப் பொருள்களாலானவை என்றும், அவை அழியும்போது மீண்டும் அந்த நான்கு பூதங்களாய் மாறிவிடுகின்றன என்றும் இவர்கள் விளக்குவர். ஐந்தாவது பூதமாகிய ஆகாயம் நேரிடையாய் உணரமுடியாதாதலாலும் அனுமானத்தால் மட்டிலும் உணரக்கூடியதாதலாலும் இதன் இருப்பை இவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. இன்று அறிவியலால் விளக்கப்பெறும் நூற்றுக்கு மேற்பட்ட தாதுப் பொருள்கள்யாவும் இந்தத் நான்கு பூதப் பொருள்களின் வெவ்வேறு விகிதச் சேர்க்கையால் ஆனவை என்றும், அவை இயல்பாகவே அவ்வாறு சேரக்கூடியவை என்றும் விளக்கமும் தந்துள்ளனர். இத்தகைய சில வகை பூதப்பொருள்கள் ஒன்று சேருங்கால் இயல்பாய் ஏற்படும் கூடுதல் குணந்தான் உயிர் என்பது இவர்தம் கருத்தாகும். கர்மம் (புண்ணியம், பாவம்) மறுபிறவி என்பவற்றையெல்லாம் இவர்கள் நம்புவதில்லை. **'வாழ்வாவது மாயம்; மண்ணாவது திண்ணம்'** என்ற கொள்கையை இவர்கள் ஏற்பதில்லை. உலகில் உயிருடன் வாழும்போது கிடைத்தவற்றை அநுபவிப்பதே நன்று என்பது இவர்தம் கொள்கை. மேலை நாட்டார் கூறும் சிற்றின்பக் கோட்பாட்டாளர் (Epicureans) களோடு ஒப்ப வைத்து எண்ணக் கூடியவர்கள் இவர்கள்.

இன்றைய அறிவியலறிஞர்கள், உலகிலுள்ள அடிப்படைப் பொருள்களை 92 வகையான தனிமங்களில் அடக்கிக் காட்டியுள்ளனர். இவை தம்மொடு தாமும் பிறிதுமாய்க் கலந்து அணுத்திரளைகள் (Molecules) ஆகின்றன. இத்தகைய கலவைகள் உலகில் ஏழு இலட்சத்திற்கு மேல் உள்ளனவாம். இத்தனை வகையாகப் பல்கிப் பெருகியுள்ள உலகம் 92 தனிமங்களில் (Elements) அடங்கிவிடுவது வியப்பினும் வியப்பே.

உலகிலுள்ள அடிப்படைப் பொருள்கள் 92 ஆனாலும் வழக்கில் வருபவை பன்னிரண்டுக்குமேல் இல்லை. ஆகையால், இந்தக் கணக்கை உற்று நோக்கல் வேண்டும். உலகில் 1000 பாகத்தில் ஏறக்குறைய பாதி ஆக்ஸிஜென் என்ற உயிரியம் 492/1000 பங்கு. இந்த உயிரியம் காற்றில் ஐந்தில் ஒருபங்கு. நீரில் ஒன்பதில் எட்டுப் பங்கு. இது கல்லிலும் உண்டு. உலகில் சிலிகன் (Silicon) என்பது 257/1000 பங்கு. இது தரையில் கால் பங்கு. மணல் என நாம் வழங்குவது சிலிகனோடு உயிரியம் சேர்ந்த கலவையாகும். உலகில் அலுமினியம் 74/1000 பங்கு. இது மண்ணில் உண்டு. உலகில் இரும்பு 47/1000 பங்கு. இஃது உயிரியத்தோடு கலந்தே கலவையாய்க் கிடக்கின்றது. கால்சியம் என்ற சுண்ணாம்புச்சத்து உலகில் 34/1000 பங்கு. சோடியம் என்பது உலகில் 26/1000 பங்கு. இது சோற்றுப்பிலும் உள்ளது. பொட்டாசியம் என்ற உப்பு அபிரேகம் முதலியவற்றிலும் உண்டு. இஃது உலகில் 24/1000 பங்கு. மக்னீஷியம் என்பதனை பெட்ரோமாக்ஸ் விளக்கின் திரியாய் எரிவதற்கு வெள்ளைச் சல்லடை உறையாகப் போட்டிருக்கக் காணலாம். இது கடல் நீரிலும் உண்டு. இஃது உலகில் 19/1000 பங்கு. ஹைட்ரஜன் நீரிய ஆவி நீரில் உள்ளது என அதன் பெயரே கோள் சொல்லுகிறது. (Hydrogen = hydro - water; gen - generated) இஃது உலகில் 9/1000 பங்கு. இது மண்ணிலும் மணலிலும் உண்டு. குளோரின் என்பது 2/1000 பங்கு. இது சோற்றுப்பில் நாம் மேலே கூறிய சோடியத்தோடு கலவையாய்க் கிடக்கின்றது. பாஸ்வரம் என்பது எரிகந்தகம். இது 1/1000 பங்கு. இஃது எருவுக்கு இன்றியமையாதது. இது நாம் உண்ணும் வெண்டைக் காயில் உண்டு. மூளைக்கு நல்லது என்று சொல்லுவார்கள். இந்த 12 பொருள்களே உலகில் 991/1000 பங்கானால் மிகுதி நிற்கும் 80 அடிப்பொருள்களும் 9/1000 பங்கு அளவே இருக்கக் காண்கின்றோம். பொன், வெள்ளி, ஈயம் என்றெல்லாம் பேசுகின்ற நாம், உலகில் பரந்து கிடக்கும் பொருள்களை விட்டு எங்கெங்கெல்லாமோ ஓடி அலைகின்றோம். ஆதலின், இதில் வாராத பொருள்களைப்பற்றியும் அறிய வேண்டும். ஆனால் அது முழு அறிவியலுக்கு இட்டுச் சென்றுவிடுமாதலால் அதனை இத்துடன் நிறுத்துவோம். இதனை வைணவம் **அசித்து** என்று வழங்கும்; சைவ சித்தாந்தம் **பாசம்** என்று குறிப்பிடும். பாதம் அல்வாவைச் சுவைக்கின்றோம். இஃது அசித்துதான். ஆண்டவன் படைப்பில் அசித்தும் எவ்வளவு சுவையாகப் பயன்படுகின்றது, பாருங்கள். சித்தாந்தம் பாசம் என்கின்றது. உண்மைதானே!

(2) **ஆசீவகம் :** அழிந்தொழிந்துபோன இந்தச் சமயம் இப்போது முழுவதும் மறக்கப்பட்டுவிட்டது. இது வட

இந்தியாவில் மகத நாட்டில் தோன்றியது. இச்சமயத்தை நிறுவியர் மற்கலி ஆருக மதத்தை என்பர்.[39] (சமணத்தை) நிறுவிய மகாவீரரும், புத்த மதத்தை நிறுவிய கௌதம புத்தரும் வாழ்ந்த காலத்தில் இருந்தவர். மகாவீரர் ஆருக மதத்தை உலகத்தாருக்குப் போதித்து வந்த காலத்தில் அவரது புகழையும் செல்வாக்கையும் கேள்வியுற்ற மற்கலி, அவரிடம் சென்று தம்மை ஆட்கொள்ள வேண்டினார். ஆனால், மற்கலியின் மாறுபட்ட போக்குகளை அறிந்த மகாவீரர் அதற்கு முதலில் உடன்படவில்லை. ஆயினும், எவ்வாறோ உடன்பாடு பெற்றுச் சில காலம் அவரிடம் தங்கியிருந்தார். பின்னர், அவருடன் மாறுபட்டுத் தனியே பிரிந்து சென்று, ஒரு புதிய சமயத்தை உண்டாக்கினார். அதுதான் **ஆசீவகம்** என்பது. ஆருகத சமயக் கொள்கைகள் சிலவற்றையும் தாம் உண்மை என்று கண்ட சிலவற்றையும், திரட்டி, முன்னதனுடன் சேர்த்து இந்தப் புதிய ஆசீவக மதத்தை நிறுவினார் எனக் கூறப்பெறுகின்றது.

மகாவீரரும் புத்தரும் இவர் காலத்தவர்களாயினும் இவர்கள் இருவருக்கும் முற்பட்டவர் மற்கலியே என்பது பாலிபீடகங் களாலும் சமண சூத்திரங்களாலும் அறியப்பெறுகின்றது. மற்கலி சற்றேறக்குறைய கி.மு. 500இல் காலமானதாய்க் கருதப்பெறு கின்றது. இதற்குப் பதினாறு ஆண்டுகளுக்குப் பின்னர் மகாவீரர் வீடு பெற்றார் என்பர். இதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர் புத்தர் பெருமான் நிர்வாணம் அடைந்தார்.

ஆசீவகர், பௌத்தர், சமணர், வைதிகர் ஆகிய இந்த சமயத்தவர்களுள் எப்போதும் சமயக்காழ்ப்பு இருந்துகொண் டிருந்ததாய் அறியக் கிடக்கின்றது. பாலி, பாகதம், சிங்களம், தமிழ் ஆகிய நான்கு மொழிநூல்களிலும் ஆசீவகம்பற்றிய செய்திகள் மிகுதியாய்க் காணப்பெறுகின்றன.

**ஆசீவகம் - பொருள் :** 'ஆசீவகம்' என்ற சொல்லுக்குப் பல் வேறு பொருள்களைப் பகர்ந்துள்ளனர்.

(i) சீவ - வாழ்க்கை; அ - சீவ - வாழ்வின்மை. ஆதலின், பிறர் தயவில் (ஐயமேற்று) வாழும் துறவி எனப் பொருள் கண்டார் **பர்னோவ்** (Burnouf).

(ii) சீவனை உண்ணாதார் (புலால் மறுத்தவர்) ஆசீவகர் எனப் பொருள் உரைத்தார் **லேசன்** (Lassen) என்பார்.

39. மற்கலிக்குப் பூரணர் என்ற பெயரும் உண்டு. களங்கமற்ற ஞான முடையவராகலின் அவருக்கு இப்பெயர் உண்டாயிற்று என்பர். (பூரணருடைய இயல்பு, 'நீலகேசி' - ஆசீவகவாதச் சருக்கம், 15ஆம் பாடல் - உரை காண்க.)

(iii)'ஆசீவ' என்ற சொல் வாழும் முறை - இல்லறத் தாராயினும் துறவறத்தாராயினும் கடைப்பிடிக்கும் வாழ்க்கை முறையினை உரைக்கும் என்று விளக்கம் காண்பார் **ஹார்ன்லே** (Hoernle) என்பார்.

**ஆசீவகக் கொள்கைகள் :** இந்தச் சமயத்தைப்பற்றிய உண்மை வரலாறுகளும் கொள்கைகளும் இப்போது முழுதும் கிடைக்க வில்லை. இப்போது கிடைப்பன எல்லாம் இந்தச் சமயத்தின் பகைவர்களால் எழுதப்பெற்றவை. ஆகவே, இவை நடுநின்று கூறாமல் சார்புபற்றிக் கூறியுள்ளன என்று கருதப்பெறுகின்றது. **மணிமேகலை** என்ற பௌத்த நூலிலும் (சமயக்கணக்கர் தந்திறம் கேட்ட காதை), **நீலகேசி** என்ற சமண நூலிலும் (ஆசீவகவாதச் சருக்கம்), **சிவஞானசித்தியார்** என்ற சைவ சாத்திர நூலிலும் (பரபக்கம் - ஆசீவக மதம்) இந்தச் சமயக் கொள்கைகள் எடுத்துக்காட்டப்பெற்று மறுக்கப்பெற்றுள்ளன. இக்கொள்கைகளின் சுருக்கம் ஈண்டு சில தலைப்புகளில் காட்டப்பெறுகின்றது.

(i) **அணுக்கொள்கை :** இக்கொள்கையினை முதன்முதலில் அறிந்துரைத்த சிறப்பு ஆசீவகர்க்கு உரியது. நிலம், நீர், தீ, வளி, இன்பம், துன்பம், உயிர் என்ற ஏழுவகை அணுக்களால் அமைந்தன என்பது மற்கலியின் கொள்கையாய்ப் பிடகம் பேசுகின்றது. ஆகாயபூதம் ஆசீவகர்க்கு உடன்பாடில்லை. மணி மேகலையில் வரும் ஆசீவகவாதி 'மற்கலி நூலின் வகை' இதுவென எடுத்துரைக்கும்போது, 'துரந்தரும் உயிரோடு ஒரு நால் வகை அணு' (மணிமேகலை 27:113) என்றும், 'இன்பமும் துன்பமும் இவையும் அணுவெனத்தகும்' (மேலது 27:163) என்றும் பாலிபிடகத்தின் வழிநின்று தம் கருத்தினை உரைத்தல் உளங்கொள்ளத்தக்கது. அணுவின் இயல்புகளை,

*"ஆதி யில்லாப் பரமா ணுக்கள்*
*தீதுற்று யாவதும் சிதைவது செய்யா*
*புதிதாய்ப் பிறந்தொன் றொன்றிற் புகுதா......*
*......................... முளைக்கும்"          (மேலது 27 : 126 - 136)*

என்று இயம்புதலைக் காணலாம். ஓர் அணு ஓர் அணுவில் புகாவிடினும் அணுத்திரளைகளாய் இணைதல் உண்டு என்பது ஆசீவகரது கொள்கையே (மேலது 27:116-117). ஆசீவகரின் கருத்துப்படி தனித்த ஓர் அணு தெய்வக் கண்ணுக்குத்தான்

புலப்படும். அணுத்திரளைகளான பொருள்தான் (Molecule) அனைவர்க்கும் புலப்படும். இக்கருத்தினை,

> "ஓர்அணு தெய்வக் கண்ணோர் உணர்குவர்
> மாலைப் போதில் ஓர்மயிர்அறியார்
> சாலத் திரள்மயிர் தோற்றுதல் சாலும்" (மேலது 27:146-9)

என்று ஆசீவகவாதியின் விளக்கமாய் அமைகின்றது. சாத்தனார் காலத்தில் ஆசீவகத்தில் அணுக்கொள்கைதான் மிகவும் முக்கியத்துவம் பெற்றிருந்தது. ஆசீவகரைப் பின்பற்றியே சமணர்களும் அணுக்கொள்கையை வளர்த்துக்கொண்டனர்.

(ii) **நியதிக்கொள்கை :** தன் இச்சைக்கு அப்பாற்பட்ட ஆற்றல்களால் செயல்கள் தீர்மானிக்கப்பெறுகின்றன என்ற கருத்தில் ஆசீவகர் நியதிக் கொள்கையினைக் கடைப் பிடித்தனர். உலகாயதத்தைத் தவிர, எல்லாச் சமயங்களும் வினைக் கொள்கையினை ஏற்கின்றன. ஆசீவகத்தை உருவாக்கிய **மற்கலி கோசாலர்,** வினைகள் மனிதனின் இன்பதுன்பங்களை ஆக்க வில்லை என்றும், ஒத்த ஆற்றலுடைய இருவர் புரியும் ஒரே வினை ஒருவர்க்கு இன்பமும் மற்றவர்க்குத் துன்பமும் தருதலால், வினைகள் பயன்தரவில்லை என்றும், நியதிப்படிதான் இவை விளைகின்றன என்றும், உலக நிகழ்ச்சிகள் அனைத்தும் நியதி யின் ஆற்றலால்தான் நடைபெறுகின்றன என்றும் கருதுகின்றார். "எவ்வளவு முயன்றாலும் உளதாதலைப் போக்கவோ இலதா தலை ஆக்கவோ இயலாது; எந்தச் செயலும் வினைகளால் தீர்மானிக்கப்படவில்லை; நியதியால்தான் முடிவு கட்டப் பெறுகின்றது; ஆதலின் மனித முயற்சிகள் பயனற்றவை. வலி யார் மெலியார் அனைவருமே நியதிக்கும் அதன் வெளிப் பாடாகிய எதேச்சை (Chance) சுபாவங்கட்கும் முழுமையாய்க் கட்டுப்பட்டவர்கள். நியதி வெளிப்படுமிடத்து எதேச்சையாகவும் சுபாவமாகவும் தோன்றும்" என்பது இவர் கருத்து. ஆதலின், ஆசீவகம் எல்லா உயிர்களும், ஒரு கால எல்லைவரையில் நன்மை தீமைகளைக் கட்டாயம் நுகர்ந்து, பின்னர் வேறு பாடின்றி ஒரு குறிப்பிட்ட கால இறுதியில் விடுதலை அடையும் என்ற பரந்த நியதிக் கொள்கையினைத் தெளிவுறுத்துகின்றது. நியதிக் கொள்கையும் வினைக்கொள்கைகளும் அருமறைகளில் காணப்பெறவில்லை. இவ்விரண்டும் திராவிடப் பெருமக்களுக்கு

உரியன என்று மேலை நாட்டு இந்தியச் சிந்தனையாளர்கள் (Indologists) ஆய்ந்து கூறிய முடிவு.

ஆசீவகரின் நியதிக் கொள்கையின் கருத்து 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (புறம் - 192) என்ற கணியன் பூங்குன்றனாரின் புறப்பாடலில்,

> *"தீதும் நன்றும் பிறர்தர வாரா*
>
> ..................................................
>
> *கல்பொரு திரங்கும் மல்லற்பேரியாற்று*
> *நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்*
> *முறைவழிப் படூஉம்* (அடி 2,8-10)

என்ற அடிகளில் காணலாம். இவ்வடிகளில், ஓடும் வெள்ளத்துடன் ஒத்தோடும் மிதவையினை, நியதிப்படி செயலாற்றும் உயிர்க்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருத்தல் காணத்தக்கது. நியதியை **'முறை'** என்று அழகு தமிழால் சுட்டுவது நமக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. மனிதச் செயல்கள் நியதியால் முடிவு கட்டப்பெறுபவை என்பதும், நியதியை மீறியோ எதிர்த்தோ செல்லுதல் இயலாது என்பதும் இவ்வுவமையால் கவித்தைச்சுவை கொப்புளிக்கக் கணியன் பூங்குன்றனார் தெளிவுறுத்தல் அறியப்பெறும்.

(iii) **சுபாவக் கொள்கை :** இக்கொள்கையும் ஆசீவகர்க்குரியது. அண்டம் சுபாவத்தால் தோன்றப்பெற்றது என்றும் ஒவ்வொன்றும் சுபாவம் ஒன்றனால்தான் வெளிப்படும் என்றும் ஆசீவகர் கருதினர். மனித முயற்சி பயனற்றது என்பது இவர்தம் உறுதிப்பாடு. இதனால் ஆசீவகம் மனித முயற்சியைப் புறக்கணித்தது என்று கருதுதல் கூடாது. மனிதன் தான் ஆற்ற வேண்டிய கடமைகளைப் புரிந்துகொண்டுதான் இருத்தல் வேண்டும்; ஆனால், அவையெல்லாம் இயல்பாய் நிகழ்வன என்று எண்ணுதல் வேண்டும். சுபாவ வாதத்தைத் தமிழ்ச் சமயக் காப்பியமாகிய சீவகசிந்தாமணியில் காணலாம்.

(iv) **உய்யும் வழி :** பிறப்பு இறப்புகளினின்றும் உய்வதற்குரிய ஆசீவக முறை **'சம்சார சுத்தி'** என்று குறிக்கப்பெறும் (பாலிபிடகம்). "உய்தி பெற குறுக்கு வழி இல்லை.

நியதிக்காகக் காத்திரு. ஒருவன் நுகரும் இன்பமும் துன்பமும் நியதியால் கிடைப்பன. எல்லா உயிர்களும் மாறிமாறிப் பிறந்தபின் தூய்மை பெறுகின்றன. ஆதலின், வருவது குறித்து ஆவலுற வேண்டா; அது தானே வரும்" என்பதே ஆசீவகரின் கொள்கையாகும்.

(2) **மண்டல மோட்சம் :** ஆசீவகக் கொள்கைக்குத் தீங்கு நேரின் அவ்வப்பொழுது அதனைக் காக்கவும் பரப்பவும் விடுதலையடைந்த தீர்த்தங்கரர் அவதாரம் எடுப்பார் என்பது ஆசீவகரின் நம்பிக்கை. அவதாரக் கொள்கை என்பது இந்தியச் சமயங்கள் பலவற்றிலும் காணப்பெறும் ஒரு பொதுக் கூறு ஆகும். இத்தீர்த்தங்கரரை **மண்டலர்** என்று குறிப்பிடுவர். இங்ஙனம் மீண்டும் தீர்த்தங்கரர் தோன்றுவதற்குக்கூட நியதியே காரணமாகும்.

உலகில் இவ்வளவு ஆன்மாக்கள் இருத்தல் வேண்டும் என்னும் வரம்பினைக் காக்கவும், விடுபட்ட உயிர்களை மீண்டும் பிறக்கவும் நியதிதான் வகை செய்யும். நியதியின்படி திரும்பாத விடுதலை பெற்ற சில ஆன்மாக்களும் உண்டு. அவர்கள் **'செம்போதகர்'** என்ற திருநாமத்தால் வழங்கப்பெறுவர். அவர்கள் அண்டத்தின் அப்புறத்தில் இருப்பர் என்றும், அவர்கள் சமண தீர்த்தங்கரருக்குச் சமானமானவர் என்றும் சிவஞான சித்தியார் பரபக்கம் பகர்கின்றது (பா.175, 164). மகாயான பௌத்தத்தில் போதிசத்துவரும் வைணவத்தில் அவதாரபுருடரும் ஆசீவகத்தில் மண்டல புருடரும் ஒரு வகையில் ஒரு நிலையினர் என்று கருதலாம். ஆசீவக நிர்வாணப்பேறுகூட நியதிக்குக் கட்டுப் பட்டதேயன்றி மற்றைய சமயங்கள் மொழிவன போலக் கட்டற்ற நிலையன்று. மண்டல மோட்சக் குறிப்பு மணிமேகலை சுட்டும் ஆசீவகத்திலும் உண்டு (27:158).

(3) **சமணம் :** அருமறைக் கூறுகளை ஒப்புக்கொள்ளாத தத்துவங்கள் கொண்டது, சமணம் : இதனை நிறுவியவர், **மகாவீரர்.** சங்க காலத்திலிருந்தே தமிழகத்தில் 'சமணம்' பரவி இருந்தது. வைதிக ஆகம நெறியினரைப் போலச் சமணர்கள் பரம்பொருள் வழிபாடு கொண்டிலர். பிறப்பினின்றும் விடுபட்ட ஆன்மாவை **'அருகன்'** எனக் கொண்டு அவனையே முழுமுதற் பொருளாய்ப் பணிந்தேத்தும் மரபு சமணர்க்குரியது. இவர்கள் வழிபடும் திருக்கோயில் **நிக்கந்தக் கோட்டம், ஸ்ரீகோயில்**

என்று குறிப்பிடப்பெறும். இளங்கோ அடிகள் (சமணர்) தங்கியிருந்த இடம் **'குணவாயிற்கோட்டம்'** என்பது சிலப்பதிகாரத்தால் அறியும் செய்தியாகும். அக்காலத்தில் பல்வேறு கடவுட்கோயில்களையும் **'கோட்டம்'** என்ற பொதுச்சொல்லால் குறித்தனர். புறநானூற்றில் (299) பொன்முடியார் முருகன் கோயிலை 'அணங்குடை முருகன் கோட்டத்து' என்று குறிப்பிட்டிருத்தலால் இதனை அறியலாம். சென்னையில் கந்தசாமிக் கோயிலை வள்ளல் பெருமான் **'கந்தகோட்டம்'** என்று வழங்குதல் காண்க.

அருகன் கோயிலை **'நிக்கந்தக் கோட்டம்'** என்று குறிப்பிடுவர், இளங்கோ அடிகள். 'நிர்க்கிரந்த' என்ற வடமொழியின் பாகதச்சிதைவாய் 'நிக்கந்தன்', 'நிகண்டன்' என்ற சொற்கள் வழங்கும். இச்சொல் 'கிரந்தம் இல்லாதவர்' எனப் பொருள்படும். சமண மரபுவழிச் செய்தியின்படி அங்கம் 12, உபாங்கம் 12, பிரகீரணம் 10, சேத சூத்திரம்6, மூலசூத்திரம் 4, நந்தி, அனுயோகதாரம் ஆகிய நூல்கள் சித்தாந்தம் அல்லது ஆகமம் எனப் பெயர் பெறும் என்றும், இவற்றை மகாவீரர் அருளிச் செய்தனர் என்றும் அறியப்பெறும். 'அங்கம் பயந்தோன்' என்பது இளங்கோ அடிகளின் திருவாக்கு.

மகாவீரரின் (24ஆவது தீர்த்தங்கரர்) வாய்மொழிகளுக்கு நூல் வடிவம் தந்தவர்கள் அவரது உத்தம சீடர்களான கணாதரர் பதினொருவர். இந்நூல்களேயன்றி 14 பூர்வங்களும் மகாவீரரால் கணாதரர்களுக்குப் புகட்டப்பெற்றன என்றும், கி.பி.4ஆம் நூற்றாண்டில் சந்திரகுப்தன் பாடலிபுரத்திலிருந்து ஆண்ட காலத்தில் நேரிட்ட பஞ்சம் காரணமாய் இவை அழிந்து பட்டன என்றும் அறிஞர் கருதுவர். இம்மன்னன் காலத்தில்தான் **பத்திரபாகு** என்ற சமணப்பெரியாரின் தலைமையில் எண்ணாயிரம் சமணர்கள் தென்னாடு போந்து 'சிரவண பெல் கொள' (கர்நாடகம்) என்ற இடத்தில் தங்கினர் என்றும், தென்னாட்டிலும் இலங்கையிலும் சமணம் பரவியதற்கு இவர்களே காரணம் என்றும் அறிகின்றோம்.

தாயகத்தில் தங்கிவிட்ட சமணத்துறவியர் அனைவரும் **தூலபத்திரர்** என்ற பெரியாரின் தலைமையினை ஏற்றனர். பஞ்சம் தணிந்ததும் பாடலிபுரத்தில் தூலபத்திரரின் தலைமையில் சமணச் சான்றோர் அனைவரும் கூடி மேற்கூறிய அங்கம்,

உபாங்கம் முதலிய நூல்கள் பலவற்றையும் தொகுத்தனர். எனினும், நாயகம் திரும்பிய பத்திரபாகுவின் கூட்டத்தார் இந்நூல்களை மகாவீரரின் வாய்மொழிகளாய் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அன்றியும், துறவியர் வெள்ளாடை உடுத்த வேண்டும் என்று வலியுறுத்தும் **தூலபத்திரர்** குழுவும், ஆடையும் மிகை என அம்மணமாய் நின்ற **பத்திரபாகுவின்** குழுவும் முறையே சுவேதாம்பர, திகம்பரப் பிரிவுகளுக்கு வித்திட்டன என்பதையும் அறிய முடிகின்றது. இக்கொள்கை வேறுபாடு பழமையானதுதான். 23ஆவது தீர்த்தங்கரராகிய **பார்சுவநாதர்** வெள்ளாடை உடுத்தலையும், 24ஆவது தீர்த்தங்கராகிய **மகாவீரர்** ஆடையின்மையையும் (தர்க்கிரந் தத்துவம்) வற்புறுத்தினர். கி.பி. 79 (அல்லது 82) இல் திகம்பர, சுவேதம்பரப் பிரிவுகள் நிலைபெற்றன. சுவேதம்பரர்களின் கிரந்தங்களை உடன்படாத திகம்பரர்களுக்கு **நிர்க்கிரந்தர்** என்ற திருநாமம் வழங்கலாயிற்று. மேலும், **'கிரந்தம்'** என்ற சொல் நூல், ஆடை என்ற பொருள் தருதலின் ஆடையற்ற திகம்பரருக்கு 'நிர்க்கிரந்தர்' என்ற காரணப் பெயர் வழங்கியதாகவும் கருதலாம்.

**சமணர்களின் கொள்கைகள் :** உலகப் பொருள்கள் உண்டானதற்கு - அஃதாவது, அவற்றின் தோற்றத்திற்கு - மூலப் பொருள் ஒன்றன்று, பல என்பது சமணர்களது கொள்கை. பிரம்மம் அல்லது கடவுள் என்ற ஒன்றுதான் அனைத்துத் தோற்றத்திற்குக் காரணம் என்ற கருத்தைச் சமணர்கள் ஒப்புக்கொள்வதில்லை. சமணக் கொள்கைப்படி உலகிலுள்ள பொருள்கள் யாவும் (1) உயிருள்ளவை, (2) உயிரற்றவை (சீவன், அசீவன்) என்ற **இருபிரிவுகளில்** அடங்கும். ஆன்மா என்ற ஒன்று உண்டு என்று ஒப்புக்கொள்ளும் இவர்கள், ஒவ்வொரு சீவனிடத்தும் ஒவ்வோர் ஆன்மா உள்ளது என்று கூறுவர். சீவன் (ஆன்மா) ஓர் உயிருள்ள உடலில் சார்ந்திருக்கும்போது அஃது அந்த உடல் முழுவதும் பரவி இருக்கும். அஃது உடலுடன் இருக்கும்போது கட்டுண்டு அறிவு மழுங்கி இருக்கும்; உடலை விட்டுப் பிரிந்திருக்கும்போது தெளிவாகவும், ஞானத்துடனும், சாந்தமாகவும், புலன்களால் கட்டுப்படாமலும் இருக்கும். உடலுடன் சார்ந்திருக்கும் ஆன்மாவைப் **பெத்தநிலையிலுள்ளது** என்றும், உடலை விட்டுத் தனித்திருக்கும்போது **ஞானநிலையில்** உள்ளது என்றும் அவர்கள் குறிப்பிடுவர். ஆசீவகத் தொடர்பால் மழுங்கிய ஞானத்தை ஒளியூட்ட முயல்வதே வாழ்க்கையின் நோக்கம். உடலில் சிக்குண்டு அறிவு மழுங்குவதற்குக் காரணம், கன்மம்;

வினை. இதனைப் போக்க வழி காணல் வேண்டும் இதுதான் ஆன்மாவைப்பற்றிய சமணதத்துவம். உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் சீவன் உண்டு; மரம், உலோகம், கற்கள் முதலிய யாவும் சீவத் தன்மையுடையவை; ஆனால், அவற்றின் சீவத்தன்மை சற்றுக் குறைவாகவே இருக்கும் என்பதுவே அவர்களுடைய சித்தாந்தம். கடவுள் என்ற ஒன்று உண்டு என்ற கருத்தைச் சமணர்கள் ஏற்றுக்கொள்வதில்லை.

**ஆன்மாக்களின் வகைகள் :** சமணர்கள் உயர்நிலை ஆன்மாக்களை மூன்று வகைகளாகப் பகுத்துரைப்பர்.

(i) **சித்தர்கள்** எனப்படும் விடுபட்ட ஆன்மாக்கள். இவர்களுள் தீர்த்தர் அல்லது தீர்த்தங்கரர் முதன்மையர். சாமானிய சித்தர்கள் அடுத்த நிலையினர்.

(ii) எல்லாக் குணங்களிலும் அறிவிலும் முழுமைத்தன்மை எய்திய **அருகர்கள்** (தீர்த்தங்கரர்கள்)[40]

(iii) **சிரமணர்** எனப்படுவோர். இவர்களும் மூவகையினர்.

(அ) **ஆசாரியர்** அல்லது கணாதரர்.

(ஆ) **உபாத்தியாயர்** அல்லது அத்யாபகர்.

(இ) **சாதுக்கள்**

குந்தகுந்தாச்சாரியர் தென்னாட்டவர் என்றும், இவருக்கு ஏலாச்சாரியர் என்ற மறுபெயரும் உண்டென்றும், திருக்குறளின் ஆசிரியர் இவரே என்றும் சமணர்கள் சாற்றுவர். இவர்தம் பிரவசன சாரத்தின் 41ஆம் பாட்டில் அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்கள் என்ற ஐவர்க்கும் வணக்கம் கூறியுள்ளார். ஆதலின், இதே நூலின் முதற்பாடலில் குறிக்கப்பெறும் **கணாதரர்** என்பார் ஆசாரியர் என்றும், அத்யாபகர் என்பார் உபாத்தியாயர் என்றும் அறிகின்றோம். மகாவீரரின் பதினொரு தலையாய சீடர்தாம் சமண கணங்களுக்குத் தலைவர்களாய் விளங்கினர். இவர்கள் இந்திர பூதி, அக்கினிபூதி, வாயுபூதி முதலியோராவர். தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் இடபதேவர், நேமிநாதர், மகாவீரர் முதலியோரின் வழிபாடு பெருவழக்காய் இருந்தது. கணாதாரரேயன்றி ஆசாரியர்

---

40. தீர்த்தங்கரர் - 'தீர்த்த' என்ற சொல்லிற்கு (பிறவிப் பெருங்கடலினின்றும் விடுபட்டு ஏறும்) கரை என்பது பொருள். இக்கரையினை அடைந்தவர்கள் தீர்த்தங்கரர் எனப்படுவர். அன்றியும் இக்கரையினை எய்தத் துணையாய் இருத்தலின் இப்பெயர் எய்தினர் எனலாம்.

நிலையிலை அடைந்த பெருமக்களையும், ஆகமங்களை அறிவுறுத்தி சமைந்த உறுதுணையாய் நின்ற ஏனைய மூவரையும் அருக நிலையில் நிலைத்துத் திகழ்பவர் விளங்கினதாகச் சொல்வர். இதற்குச் சிலப்பதிகாரத்திற்கு முன்னும் பின்னும் எழுந்த பாகத, தமிழ்ப் பனுவல்கள் சான்று பகர்கின்றன.

**உலகம் - படைப்பு :** கடவுளே இல்லை என்னும்போது அசிவன் என்ற உயிரற்ற பொருள்கள் எவ்வாறு தோற்றுவிக்கப் பெறுகின்றன என்ற வினா எழுகின்றது. இதற்கு விடையாய் அவர்கள் கருத்திலமைந்த **அணுக்கொள்கை** கை கொடுத்து உதவுகின்றது. நம் புலனால் அறிபவை உலகப் பொருள்கள். அவை பல பொருள்கள் சேர்க்கையால் ஒன்றாகின்றன; ஒன்று - அழியும்போது பல பொருள்களாகின்றன. அவை மீண்டும் அழியும்போது நுண்ணிய பொருள்களாகின்றன. இந்த வட்டங்கள் மாறிமாறி வந்துகொண்டே உள்ளன. அத்தகைய சிறிய பொருள்களைச் சமணர்கள் **'புற்கலம்'** எனக் குறித்தனர். இவை ஒன்றுசேர்ந்து முழுப்பருமனை அடையும் பொருள்களை **'ஸ்கந்தங்கள்'** என்ற பெயரால் வழங்கினர். ஸ்கந்தங்களின் சேர்க்கையே இவ்வுலகமாகும். இதனை **'மகாஸ்கந்தம்'** என்று குறிப்பிடுகின்றனர்.

**இவர்தம் அணுக்கொள்கை :** ஒரு பொருளை மீண்டும் மீண்டும் உடைத்துக்கொண்டே போனால் கண்ணுக்குப் புலனாகாத துகள்களாகும். இத்துகள்களே அணுக்கள். இந்த அணுக்கள் தாமாகவே ஒன்றுசேர்பவை; புதுப்பொருள்களாய் மாறுபவை. இதுவே இவர்தம் அணுக்கொள்கையின் சுருக்கமாகும். அணுக்களின் கூட்டுப் பொருள்களே ஐம்பெரும் பூதங்களாகும்.[41] இவையே உலகம் உண்டாவதற்கு மூலப் பொருள்களாகும்.

உலகத் தோற்றத்திற்குப் புற்கலங்களும் ஸ்கந்தங்களும் மட்டிலும் போதா; காலம், இடம் (Time and Space) என்பவையும் தேவை என்ற எண்ணமும் கொண்டவர்கள். இந்த

41. இந்த அணுக்கொள்கையை வைசேடிகர்களும், நியாய சமயத்தினரும், கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளாகிய லெயுசிபஸ், டெமாகிரிட்டஸ் என்போரும் ஆதரித்துள்ளனர். இவர்களது கொள்கையே இன்று மேலைநாட்டு அறிவியல் விளக்கமாய் இயற்பியல், வேதியியல் துறைகளில் அணுக்கொள்கை (Atomic theory) என்ற திருநாமத்தில் வளர்ந்து ஓங்கியுள்ளது.

உன்னதமான எண்ணத் தெளிவு. மிக உன்னதமான அனுமானம், உயர்ந்த சிந்தனைத் தெளிவு. காலமும் இடமும் அணுக்களா லானவை அல்ல என்பதும் இவர்தம் கருத்து. ஸ்கந்தங்களின், உலகத்தோற்றத்திற்கு அணுக்களாலான ஸ்கந்தங்களும் (பஞ்ச பூதங்களும்) அணுக்களைச் சாராத கால, இடப் பரிமாணங்களும் இன்றியமையாதவை என்று உணர்த்தியவர்கள் சமணர்கள்.. இவர்களது விளக்கம் இன்றைய அண்டவியல் பற்றிய அறிவியலோடு ஓரளவு பொருந்தியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

ஆகாயம் எனப்படும் விண்வெளிபற்றிய இவர்தம் கருத்தையும் காண்போம். இவர்கள் விண்வெளியை இருபகுதி களாய்க் காண்பர். ஒன்று, இயற்பியல்பற்றிய பகுதி; இதனை **லோகாகாசம்** என்பர். மற்றொன்று, **அலோகாகாசம்** என்பது. இது லோகாகாசத்திற்குமேல் அமைந்திருப்பது. உடலாகிய தளைகளினின்றும் வினைகளினின்றும் விடுபடும் ஆன்மா, அலோகாகாசத்தை ஞானானந்த இருப்பிடமாய்க்கொண்டு தங்கும் என்பது இவர்தம் தத்துவக் கருத்தாகும்.

**சக்திகள் :** உலகத் தோற்றத்துக்கு மூலப் பொருள்கள் மட்டுமேயன்றிச் சக்தியும் இன்றியமையாதது என்று உணர்ந்த வர்கள் சமண் பெருமக்கள். இந்தச் சக்திகளுள் ஒன்று **இயக்கு சக்தி;** மற்றொன்று **நிறுத்து சக்தி,** இவற்றை இவர்கள் முறையே **தர்மம், அதர்மம்** என்ற பெயர்களால் குறிப்பிடுவர். தர்மம், இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு பொருளை இயக்க வல்லதேயன்றி நிலையான ஒரு பொருளை இயக்காது. இம்முறையில் அதர்மமும் இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு பொருளை நிறுத்தாது. இது நிலையானவற்றை அதே நிலையில் இருக்க உதவுவது.

உலகம் அணுக்களாலாவதற்குத் துணைநிற்பவை, காலம், இடம் (ஆகாயம்), தர்மம், அதர்மம் என்பவை : இங்ஙனம் அணு, காலம், இடம், தர்மம், அதர்மம் என்ற ஐம்பொருள்களின் அடிப்படையில் தோன்றும் பொருள்களே அசீவன் என்பது. சீவன் என்பது ஞானமாகிய முற்றறிவின் நிலை.

**வினைக்கொள்கை :** சமணத்தில் வினைக்கொள்கை சிறப் பிடம் பெறுகின்றது. காப்பியப் பாவிகங்களுள் ஒன்று ‘ஊழ்

வினை உருத்து வந்தூட்டும்' என்ற உண்மையாகும். சமணர்க்கு முழுமுதற்கடவுள் உடன்பாடில்லையாதலின், ஊழ்வினை தானே உருவெடுத்துக் கருத்தாவைப் பயன் நுகரச்செய்யும் என்று எண்ணினர். சிலம்பில் சாரணர் கூறும் சமயப் பேருரையில்,

"ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை
இட்ட வித்தின் எதிர்த்துவந் தெய்தி
ஒட்டும் காலை ஒழிக்கவும் ஒன்ணாது." (10:171-3)

என வரும் பகுதியால் அறியலாம். ஒருவர் புரியும் செயல்களின் விளைவு அவருக்கு வந்து சேருங்கால் யாவராலும் நீக்க முடியாது. எதனை விதைக்கின்றோமோ அதுதான் விளையும். **'வல்வினை'** என்றதால் வினையின் வலிமை போதரும். 'ஒழிக்கவும் ஒண்ணாது' என்பதால் அதன் பிடியினின்றும் தப்ப முடியாது. பாண்டியன் நெடுஞ்செழியன் உயிர் துறந்ததை 'வல்வினை வளைத்த கோல்' என்றார், இளங்கோ அடிகள். வள்ளுவரும் **'ஊழிற் பெருவலி"** என்றார். செய்த வினையை போக்க யாவராலும் முடியாது, அநுபவித்தே தீர வேண்டும் என்ற உறுதியான வினைக்கொள்கையினைச் சமணத்தில் காண்கின்றோம்.

கன்மமும் ஓர் இயற்பியல் பொருள் என்பது இவர்களது முடிவு. கன்மமும் ஒரு புற்கலம் போன்றது. அதன் அணுக்கள் உலக முழுவதும் பரவியுள்ளன. சீவனைச் சார்ந்திருக்கும் கன்மம் வேறு, உடலோடு சார்ந்திருக்கக்கூடிய கன்மம் வேறு. இவை இரண்டும் பால கன்மம், திரவிய கன்மம் என முறையே குறிப்பிடப்பெறுகின்றன. உடலை விட்டுச் சீவன் நீங்கும் போது கன்மம் அதனைத் தொடர்ந்து செல்லும். இறுதியாய், சீவன் வீடுபேறு அடையும்போதுதான் அது நீங்கும். வீடுபேறு அடையாமல் மறுபிறப்பிற்கு வந்தால் சீவனோடு கன்மமும் தொடரும்.

**விடுதலைக்கு வழி :** பற்றுதான் பிறப்பிற்குக் காரணம்; பாசம் நீக்கினால் பற்று அகன்று போகும். 'அற்றது பற்றெனின் உற்றது வீடு"(திருவாய் 1:2:5) என்பது திருவாய்மொழி. அருகதேவன் அருளிய ஆகமங்களைக் கற்றுணர்ந்து மெய் யுணர்வாகிய ஒளியினைப் பெற்றால்தான் பிறவிச் சிறையி னின்றும் விடுதலை பெற வழி அமையும். இதனைச் சாரணர்,

"பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
ஓதிய வேதத்து ஒளியுறின் அல்லது
போதார் பிறவிப் பொதியறையோ........".[42]

எனக் கவுந்தியடிகளுக்குத் தெளிவுறுத்தல் காணலாம். இந்தியத் தத்துவங்களுள் பலவும் அவா அறுத்தலை விடுதலைக்கு வழியாய் வகுத்திருத்தலின் இக்கருத்தின் பொதுமை உணரப்படும்.

மானிடர் வீடுபேறு அடைய வேண்டுமாயின், புதிய கன்மங்கள் மேலும் சேரவிடாதபடி செய்யவும், சேர்ந்த கன்மங்களைக் கழிவு செய்யவும் முற்பட வேண்டும். முன்னதைச் சமணர்கள் **'சமுவரம்'** என்பர்; பின்னதை **'நிர்ச்சரம்'** என்று வழங்குவர். வீடுபேற்றை அடைய (1) சரியான கொள்கை (சம்யக் தரிசனம்), (2) சரியான ஞானம் (சம்யக் ஞானம்), (3) சரியான சீலம் (சம்யக் சாரித்திரம்), (4) சரியான தவம், (5)சரியான வீரியாசாரம் என ஐவகை ஆசாரங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். முதல் மூன்றும் **'திரி ரத்தினங்கள்'** என வழங்கப்பெறும். சரியான சீலத்தைப் பெற ஐந்து விரதங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். இவை தனித்தனியே துறவிகளுக்கென்றும் இல்லறத்தார்க்கென்றும் (சம்சாரிகள்) அறுதியிடப்பெற்றுள்ளன. இவை முறையே **மகாவிரதம், அனுவிரதம்** என்று உரைக்கப்பெறும்.

**சாவக நோன்பு :** சமணச் சான்றோர் கூறுவனவற்றைக் கேட்டு நடப்பவர், **சிராவகர்;** இவர்கள் இல்லறத்தார். சிராவகர் என்ற சொல் பாகதச் சிதைவாய்ச் **சாவகர்** எனத் தமிழில் வழங்கும். இவர்களுக்குரிய அனுவிரதங்கள் **சாவக நோன்பு** என்று வழங்கப்பெறும். இவை உலக வாழ்க்கையை ஒட்டி நிற்றலின் **உலக நோன்பு** என்று வழங்குதலும் உண்டு. இவர்களைச் சாவக மாக்கள் (15:195), சாவக நோன்பிகள் (16:18), உலக நோன்பிகள் (10:24, 15:153) எனச் சிலம்பு செப்பும். இவர்கட்குரியது சாவக நோன்பு. இதில் கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை விரும்பாமை, பொருள் வரைதல் (தேவைக்குமேல் பொருள் சேர்க்காமை), கள்ளுண்ணாமை, ஊன் உண்ணாமை, தேன் உண்ணாமை, இரவுண்ணாமை, குரவரைப் பணிதல் என்ற பத்தும் அடங்கும்.

---

42. சிலம்பு - 10 : (188-91)

**பட்டினி நோன்பு :** துறவியருக்கு உரிய மகாவிரதம் என்பது இது. துறவியர் பின்பற்ற வேண்டிய மகாவிரதங்கள் என்பவை அணுவிரதங்களின் முற்றிய நிலையாகும். இல்லறத்தார்க்குப் பிறனில் விழையாமை என்று ஓதப்பெற்ற விரதம் துறவறத்தார்க்கு மாணிநிலை (பிரமச்சரியம்) என்ற உறுதி வாய்ந்த புலனடக்க நிலையாய் உரைக்கப்பெற்றுள்ளது. பிரமச்சரியம் காத்தலை 'ஒருதனி வாழ்க்கை' என்றும், விரதியரை 'உரவோர்' என்றும் சிலம்பு ஒலிக்கும் (14:38). உலகாயதக் கருத்தைக் கண்டிக்கும் பாங்கில் காமம் கடிதலைச் சிலம்பில் காணலாம். (14:39-45).

காமம் கடிதற்கும் தவம் இயற்றற்குரிய ஆற்றலைத் தருவதற்கும் மாணிநிலை தேவையாகும். இவ்விரதத்தைக் கடைப் பிடிப்பார்க்கு ஐந்து கட்டளைகள் நுவலப்பெற்றுள்ளன. அவை : (1) பெண்ணைப்பற்றிப் பேசாமை (2) பெண் வடிவத்தைப் பாராமை, (3) இல்லறத்தில் இருந்தபொழுது நுகர்ந்த அநுபவங் களை நினைவுகூராமை, (4) ஊன் உணவினைக் கடிதல் (5) பெண் உறையும் இடங்களைத் தவிர்த்தல் என்பவையாகும். இவ்வைந்தும் பிக்குணிகளுக்கு வரும்பொழுது ஆண் தொடர்பு நீக்கமாய் அமையும்.

அபரிக்கிரக விரதம் மகாவிரதம் ஆகுங்கால் தனக்கேனும் தான் உறையும் சங்கத்திற்கேனும் எப்பொருளையும் தேவைக்கு அதிகமாய்ச் சேமித்தலும் காத்தலும் கடியப்படும். உண்மைச் சமணத்துறவியர் இவண் நுவலப்பெறும் பண்புகள் படைத்தவராய்த் திகழ்தல் வேண்டும். (1) பஞ்சமகாவிரதங் களைப் கடைப்பிடித்தல், (2) இரவு உண்ணாமையை மேற்கொள்ளல், (3) எவ்வகை உயிருக்கும் இரக்கம் காட்டிப் பேணுதல், (4) புலன்களை அடக்கி ஆளுதல், (5) ஆசைகளை நீத்தல், (6) மன்னிப்பு உணர்ச்சியைப் பயிலுதல், (7) மேலான குறிக்கோள்களைப் பெற்றிருத்தல், (8) அற்பமாயினும் சிறிதாயினும் எவ்வுயிர்க்கும் எவ்வகையிலும் தீங்கு புரியா திருத்தலில் உறுதியுடனிருத்தல், சிறந்த சமணத்துறவிகளின் இயல்புகளாகும். (9) தன்னிலை மறுப்புடன் திரிகரணத் தூய்மைக்குரிய காயகுப்தி (= உடலினால் தீமை புரியாமை),

(10) வாக்குகுப்தி (= சொல்லினால் தீமை புரியாமை). (11) மனோகுப்தி (=மனத்தினால் தீமை புரியாமை) என்ற மூவகை நெறிகளையும் பேணுதல். (12) வேதனைகளை உயிர்க்கிறுதி வரினும் சகித்துக்கொள்ளுதல் ஆகியவை துறவியரின் நல்வினைக்கணமாகும்.[43] இவற்றுடன். 14 குணஸ்தானங்கள், 12 சூள், 11 பிரதிமாக்கள் முதலியவற்றையும் அநுசரித்தல் வேண்டும்.

**சமண மந்திரம் :** சைவர்கள் ஐந்தெழுத்தினை மந்திரமாய் ஓதுதல் போல, திகம்பரர் **'பஞ்சநமஸ்காரம்'** என்னும் மந்திரத்தை ஓதுவர். திருத்தக்கதேவர் இந்த மந்திரத்தினை **'ஐம்பதம்'** என்று குறித்தனர் (சிந்தா.951). மதுரைப்பயணம் மேற்கொள்ளும் கவுந்தியடிகள் "மொழித்துணைத் தெய்வம் வழித்துணையாக"ப் புறப்பட்டதாய்ச் சிலம்பு பேசும். கவுந்தியடிகள் ஓதியது **பஞ்சமந்திரம்** என்பதும், அஃது அ, சி, ஆ, உ, சா என்ற ஐந்தெழுத்தாலானது என்பதும் சிலம்பின் உரையால் தெளியலாம். இந்த எழுத்துகள் முறையே அருகர், சித்தர், ஆசாரியர், உவாத்தியாயர், சாதுக்கள் என்ற ஐவகைப் பெரியார்களை (பரமேட்டிகளை)[44] - குறிக்கும். இவர்களை வணங்குதல்தான் இம்மந்திரத்தின் உட்கிடையாதல் தெளிவாகும். திகம்பர நெறியினைக் கடைப்பிடிக்கும் துறவிக்குக் குரு முதன்முதலாய் இந்தப் பஞ்சநமஸ்கார மந்திரத்தை ஓதுவிப்பார் என்று சமண நூல்களால் அறிகின்றோம். காலைக் கதிரவன் கீழ்த்திசையில் எழுங்கால் திகம்பரத்துறவி பஞ்சநமஸ்காரம் சுட்டும் பரமேட்டிகள் ஐவரையும் வழிபடுதல் கடமையாகும்.[45] சீவகன் இம்மந்திரத்தினை ஓதியே நாயினைத் தேவனாய் உருக்கொளச் செய்தான் (சிந்தா.951). அரவு தீண்டி உயிர் துறந்த பதுமையினையும் சீவகன் இம்மந்திரத்தால்தான் உயிர்பெறச் செய்தான் (சிந்தா.1289). ஆதலின், சமணர்கள் உயிரினும் மேலாய் மதிக்கும் இம்மந்திரப் பொருளாய் விளங்கும் பரமேட்டிகள் ஐவர்க்கும் வடிவம் அமைத்து வழிபாடு புரிந்தனர் என்பது வரலாறு.

---

43. Misra Umesha, Dr : History of Indian Philosophy.

44. Deo. S.B. : History of Jaina Monachism (From Inscriptions & Literature)

45. **பரமேட்டிகள்** - பக்குவம் பெற்ற பவ்விய சீவன்கள் ஆன்மிக முதிர்ச்சியின் அடிப்படையில் ஐந்து வகையாகப் பாகுபாடு செய்யப்பெறுவர். அனைவராலும் வணக்கத்தக்க இவர்களைப் பரவுதல் சமணர் மரபாகும்.

இவர்களை வழிபடுவோர் கோரிக்கைகளை முன்வைத்து விண்ணப்பிப்பதில்லை; வரம் வேண்டுதலும் இல்லை. இவர்தம் நிலையினைத் தாமும் பெறுவது ஒன்றே வழிபடுவோரின் குறிக்கோளாகும். சமணர்கள் வழிபடும் 'கடவுள்' இவர்கள்தாம். தனித்தத்துவமாய்க் கடவுளை அவர்கள் ஏற்பதில்லை.

கிறித்துப் பெருமான் பிறப்பதற்கு முன்பு (சுமார் கி.மு. 560) **வர்த்தமானர்** என்பவரால் சமண தத்துவம் விளக்கப்பெற்றது. **மகாவீரர்** என்பவரும் இவரே. ஆனால், இவர் காலத்திற்கு முன்பே சமணத்தத்துவம் வழக்கில் இருந்திருப்பதாய் வரலாற் லறிஞர்கள் கூறுவர்.

**(4) பௌத்தம் :** பௌத்த சமயம் பாரத நாட்டுப் பழம்பெரும் சமயங்களுள் ஒன்று. இது நம் நாட்டில் தோன்றியதானாலும் இங்கு பின்பற்றப்பெறாமல் பிற நாடுகளில் நன்கு பரவி வழக்கிலிருப்பது. இது கௌதம புத்தரால் நிறுவப்பெற்றதாய்ச் சொல்லப்பெற்றாலும், (சுமார் 2600 ஆண்டுகளுக்கு முன்) அவருக்கு முன்னதாகவே பல புத்தர்கள் இருந்திருப்பதற்குச் சான்றுகள் உள்ளன. அப்பெருமக்கள் கூறிய தத்துவங்களை ஒருமைப்படுத்தித் தம்மிடம் உதித்த ஞானஒளியினால் விளக்கம் தந்தவர், புத்தர் பெருமான். புத்தரே இச்சமயத்தை நிறுவியதாய் ஏற்றுக்கொள்ளப்பெற்ற கருத்தும் உண்டு.

இஃது ஒரு காலத்தில் தமிழகத்தில் நன்கு வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்று ஊகிக்க இடம் உண்டு. மணிமேகலையை இயற்றிய கூலவாணிகன் சாத்தனார் இயற்றிய பாடல்கள் அக நானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் எட்டுத் தொகை நூல்களில் காணப்பெறுகின்றன. **இளம் போதியார்** இயற்றிய ஒரு பாடல் நற்றிணையில் (பாடல் 72) காணப் பெறுகின்றது. திருக்குறளிலுள்ள 'ஆதிபகவன்', 'அறவாழி அந்த ணன்', 'வாலறிவன்', 'மலர்மிசை ஏகினான்', 'ஐந்தவித்தான்', 'எண்குணத்தான்', 'பற்றற்றான்', 'வகுத்தான்' என்பன போன்ற சொற்கள் புத்தரைக் குறிப்பதாய் ஆய்வாளர்கள் கூறுவர்.[46] திருக்குறள் கருத்தாகிய கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய் யாமை, கள்ளாமை போன்ற கருத்துகள் பௌத்த சமயத் தாக்கத்

46. கந்தசாமி, சோ.ந. (டாக்டர்) : தமிழும் தத்துவமும் (மணிவாசகர் வெளியீடு).

தால் விளைந்தவை என்பதாகவும் கூறுவர். அசோகர் காலத்துக் கல்வெட்டுகள் பௌத்த சமயம் கடைச்சங்க காலத்திற்கு முன்பிருந்தே தமிழகத்தில் பரவியிருந்தமையைப் பறைசாற்று கின்றன. பல ஆண்டுகள் உடலை வருத்தித் தவங்கிடந்து இறுதியாய்ப் போதி மரத்தின் அடியில் அமர்ந்து தியானத்தில் இருந்த பொழுது பூரண ஞான ஒளி பெற்றதாய் வரலாறு.[47]

**திரிபிடகம் :** புத்தர் தமது கருத்துகளை - கொள்கைகளை - நூல் வடிவில் எழுதி வைக்கவில்லை. அவர் சீடர்கள்தாம் அவர் போதித்த கருத்துகளைப் பாலி மொழியில் இரு தொகுப்புகளாய்த் தொகுத்து வைத்துள்ளனர். புத்தர் பெருமான் நிர்வாண மோட்சம் அடைந்த சில திங்களுக்குப் பின்னர் மகத நாட்டுத் தலைநகரான இராசகிருகம் என்ற நகருக்கு அருகில், ஒரு மலைக்குகையில், கார்காலத்தைக் கழிப்பதற்காக ஐந்நூறு தேரர்கள் - வயது முதிர்ந்த பிட்சுகள் - ஒருங்கு கூடினர். இதுவே பிட்சுகள் கூடிய **முதல் மாநாடாகும்.** இம்மாநாட்டிற்குப் புத்தருடைய முக்கிய சீடர்களுள் ஒருவரான **மகா காசிபர்** என்பார் தலைமை தாங்கினார். **உபாலி** என்ற மற்றொரு சீடர் புத்தர் பெருமான் அருளிய விநய போதனைகளைத் தொகுத்து ஓதினார். இவை பிட்சுகளும் பிட்சுணிகளும் ஒழுகவேண்டிய ஒழுக்கங்களைப்பற்றியவை. இன்னொரு முக்கிய சீடராகிய **ஆநந்தர்,** புத்தர் அருளிய தம்ம போதனைகளை ஓதினார்; இவை அறநெறிகள்பற்றியவை. இவை முறையே **விநய பிடகம், தம்ம பிடகம்** அல்லது **அபிதம்ம பிடகம்** என்று பெயர் பெற்றன. பிற்காலத்தில் அபிதம்ம பிடகத்திலிருந்து **சூத்திர பிடகம்** என்ற மூன்றாவது பிடகம் தொகுக்கப்பெற்றது. இந்த மூன்றும் இன்று **திரிபிடகம்** என்று வழங்கப்படுகின்றன. இவையே பௌத்த மறைகளாகும். பிடகம் என்றால் பாலி மொழியில் **கூடை** என்பது பொருள். திரிபிடகம் என்றால் மூன்று கூடைகள் என்று பொருள்படும். அஃதாவது, மூன்று தொகுப்புகள் என்பது கருத்து. ஒவ்வொரு பிடகத்திலும் பல பிரிவுகள் உள்ளன. திரிபிடகங்கள் தொகுக்கப்பெற்ற பிறகும் அவை இறையனார் களவியல் உரைபோலவும், வைணவ வியாக்கியானங்கள் போலவும் எழுதா மறைகளாகவே இருந்து வந்தன; ஆசிரியர் - மாணாக்கர் வழி முறையாகவே நெடுங் காலமாய் ஓதப்பெற்று வந்தன.

47. வடநாட்டில் (பீகார் மாநிலம்) கயை நகரத்திற்கு ஐந்து கல் தொலைவிலுள்ள புத்த கயையிலுள்ள போதி விருட்சம் (அரச மரம்). 1969இல் அடியேன் என் துணைவியுடன் நேரில் கண்டு வழிபட்டேன்.

**பெளத்த சமயப் பிரிவுகள் :** எல்லாச் சமயங்களிலும் தீர்க்க தரிசிகள் (Prophets) கண்ட உண்மைகள் - போதித்த கருத்துகள் - மார்க்கண்டேயமாய் இருப்பதில்லை. சில பழக்கவழக்கங்கள், நடைமுறைக் கோட்பாடுகள், கருத்து மாறுபாடுகள் புகுந்து பிளவுகளை உண்டாக்கிவிடுகின்றன. இன்றைய அரசியல் கட்சிகளிலும் இந்தப் பிளவுகளைக் காணலாம். பெரும்பாலான மக்கள் சில தலைவர்களின்கீழ் செம்மறியாடுகள்போல் திரண்டு செயற்படுகின்றனர்.

பெளத்த சமயத்திலும் பிற்காலத்தில் பிளவுகள் ஏற்பட்டன; பல பிரிவுகள் உண்டாயின. பிட்சு சங்கத்தில் புதிதாய்ச் சில பழக்கவழக்கங்கள் புகத் தொடங்கின. அவற்றைக் கண்டிக்கும் பொருட்டு வைசாலி நகரத்தில் 700 பிட்சுகள் மாநாடு கூடி, எட்டு மாதம் ஆராய்ந்தனர். கண்டிக்கப்பெற்ற 10,000 பிட்சுகள் தனிப்பிரிவாய்ப் பிரிந்து போய்விட்டனர் என்று **தீப வம்சம்** என்ற நூலால் அறிய முடிகின்றது. புத்த பகவானின் ஆதிக் கொள்கைகளைப் பின்பற்றி வரும் பெளத்த மதத்தைத் **தேரவாத பெளத்தம்** என்றும், புதிய கொள்கைகளைக் கொண்ட பெளத்தத்தை **மகாயான பெளத்தம்** என்றும் வழங்குவர். தேரவாத பெளத்தமே பிற்காலத்தில் **ஹீனயான பெளத்தம்** என்ற திருநாமம் பெற்றது. ஹீனயான பெளத்தம் பர்மா நாட்டிலும் இலங்கைத் தீவிலும் பரவியுள்ளது; மகாயானம் நேபாளத்திலும் (புத்தர் அவதரித்த மாநிலம்) திபேத், மங்கோலியா, கொரியா, சீனம், ஜப்பான் ஆகிய நாடுகளில் நடைமுறையில் உள்ளது. தேரவாத பெளத்த நூல்கள் யாவும் பாலி மொழியில் எழுதப் பெற்றவை; மகாயான பெளத்த நூல்கள் வடமொழியில் வரையப்பெற்றவை. மணிமேகலையில் கூறப்பெற்ற சமயக் கருத்துகள் யாவும் **தேரவாத பெளத்தத்தைப்**பற்றியவையாகும். இவற்றைச் சாத்தனார் திரிபிடகத்திலிருந்து மிக அழகாய்ச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்துக் கூறியுள்ளார்.

புத்தர் உலகம், ஆன்மா, இறை என்பவற்றை ஆய மேற்கொண்ட வழிமுறைகள் முக்கியமாய் இரண்டு. அவை, பிரத்தியட்சமும் அநுமானமும் ஆகும். அருமறைகளிலுள்ள கருத்துகளை அவர் ஏற்கவில்லை. ஆகவே, கடவுள் உண்டு என்ற கொள்கை அவருக்கு உடன்பாடு இல்லை. பெளத்தம், பிறப்பு பல உண்டு என்பதை ஏற்றுக்கொள்ளுகின்றது. கன்ம பலன்களின் வழி மறுபிறப்பு அமையும் என்பதற்கும் உடன்பாடு

தெரிவிக்கின்றது. அந்தக் கன்மம் ஆன்மாவை அடைவதற்கு கடவுள் என்ற ஒன்று வேண்டா; தானாகவே நோக்கூடியது என்ற கருத்தையுடையது, பௌத்தம். ஆன்மா கன்மங்களி லிருந்து வீடுபேறு அடைவதற்கும் கடவுள் வேண்டா என்பதும் அச்சமயக் கொள்கை. மனித முயற்சியாலும், ஒழுக்க முறை களாலும், பிறரது துன்பங்களை நீக்குவதன் மூலமும் வீடுபேறு எய்த முடியும் என்பது இச்சமயத்தின் முடிந்த முடிபாகும்.

**பௌத்த சமயக் கொள்கைகள் :** புத்த பெருமானின் தலையாய கொள்கைகளாவன: "இவ்வுலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவை; யாவும் நிலையற்றவை. மிகவும் நெருங்கியுள்ள பொருள்களினின்றும் நாம் நம்மை விலக்கிக் கொள்ளவேண்டும். அதுவே பேரின்பத்தை அடைவதற்கான வழி" என்பதாகும். இக்கருத்து,

> *"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
> *அதனின் அதனின் இலன்"* (குறள் - 341)

என்ற வள்ளுவப் பெருமான் கருத்தோடு ஒப்புமை உடையதாகும்.

புத்தர் பெருமான் கூறியது: "நாம் விதைப்பது, அன்பு; தூய பணிகளே அதனை வளப்படுத்தும் மழை; ஞானமும் அடக்கமும் உழுபடைகள்." மாறிமாறிப் பிறக்கும் பிறவிகள் பல உள என்பது புத்தரின் கொள்கையாகும். உலகமே துன்ப மயம்; அதிலிருந்து ஒருவர் விடுபடுவதே நிர்வாண மோட்சம்.

**நான்கு உண்மைகள் :** நிர்வாண மோட்சம் அடைவதற்கு நான்கு உயர்ந்த உண்மைகளை அறிதல் வேண்டும். அவை : (i) துக்கம், (ii) துக்கோற்பத்தி, (iii) துக்க நிவாரணம், (iv) துக்கநிவாரண மார்க்கம் என்பனவாகும். புத்தர் பெருமான் போதி மரத்தடியில்[48] மெய்ஞ்ஞானம் பெற்ற பொழுது இவற்றை அறிந்தார். இந்த நான்கன் அடிப்படையில்தான் அப்பெருமான் எழுப்பிய சமயக் கருத்துகளாய் மாபெரும் கட்டடங்கள் யாவும் நிற்கின்றன. இவை நான்கும் மணிமேகலையில் தெளிவாய் விளக்கப்பெற்றுள்ளன.

---

48. 1969ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்களில் இந்தப் போதிமரத்தடியில் யானும் என் துணைவியும் இருக்கும் பேறு பெற்றோம். புத்தர் பெருமான் பெற்ற அநுபவத்தை ஓரளவு பெற்றோம்.

**இரு அறங்கள் :** பௌத்த மதத்தில் இல்லறம், துறவறம் என இரு அறங்களே உள்ளன. இல்லறத்தார் சாவக நோன்பிகள் எனப்படுவர். இவர்கள் மும்மணிகளை வணங்கிப் பஞ்ச சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். ஆனால், இல்லறத்தார் பிறவா நிலையாகிய நிர்வாண மோட்சம் அடைய இயலாது. துறவற வழி நின்றவர் மும்மணிகளை வணங்கிப் பத்து வகைச் சீலங்களைக் கடைப்பிடித்து, நான்கு வாய்மைகளை மேற்கொண்டு, அஷ்டாங்க மார்க்க வழி ஒழுகி, ஞானம், யோகம் முதலியவற்றைச் செய்வார்களானால் பிறவா நிலையாகிய பேரின்பத்தை நல்கும் நிர்வாண மோட்சத்தை எய்துதல் கூடும்.

**மும்மணிகள் :** புத்தர் நிறுவிய புத்தம், தர்மம், சங்கம் என்ற மூன்று நிறுவனங்கள் 'மும்மணிகள்' எனப்படும். இவற்றைச் சரணம் அடைதல் வேண்டும். இது **'திரிசரணம்'** என்று வழங்கப்பெறும்.

"புத்தம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி"

(கச்சாமி - அடைக்கலம் புகுகின்றேன்)

இவ்வாறு மூன்று முறை நாவினால் நவிற்றி, மும்மணியை மூன்று முறை வணங்க வேண்டும். "முத்திற மணியை மும்மையின் வணங்கி" (30 : 4) என்பது மணிமேகலைத் தொடராகும்.

**அஷ்டாங்க மார்க்கம் :** இவை நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லமைதி என்ற எட்டுவித ஒழுக்கங்களாகும். இந்த ஒழுக்கம் **'விசுத்தி மார்க்கம்'** என்றும் **'பழுதிலா வாழ்க்கை'** என்றும் வழங்கப்பெறும்.

இந்த மார்க்கத்தை மேற்கொண்டு ஒழுகுபவர்களுக்கு முக்கியமாய் மூன்று குணங்கள் வேண்டும். அவை சீலம், சமாதி, பிரதிஜ்ஞை என்பன. சீலமாவது, விலக்கியவற்றையே செய்தல். சமாதியாவது, மனத்தை ஒருமுகப்படுத்துதல். பிரதிஜ்ஞையாவது மெய்ஞ்ஞானம். இம்மூன்றும் திரிபிடகத்தில் அடிக்கடி சொல்லப்பெறுபவை.

***சீலங்கள் :*** சீலம் பஞ்சசீலம் என்றும், அஷ்டசீலம் என்றும், தசசீலம் என்றும் மூவகைப்படும். கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை, பொய்யாமை, கள்ளுண்ணாமை என்னும் இவை **பஞ்சசீலம்** ஆகும். இஃது இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியது. இவற்றினோடு இரவில் தூய்மையற்ற உணவை உண்ணாமை, சந்தனம் முதலிய நறுமணமுள்ள பொருள்களை நுகராமை, பஞ்சணை போன்றவற்றைப் பயன்படுத்தாமை என்ற மூன்றும் சேர்க்கப்பட்டு **அஷ்டசீலம்** என்று பெயர் பெறும். இஃது இல்லறத்தாரில் சற்று உயர்நிலையடைந்தவர்க்கு உரிய ஒழுக்கமாகும். இவ்வெட்டனோடு நாட்டியம், இசை முதலிய விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமை என்ற இரண்டும் சேர்த்து **தசசீலமாகும்.** இது துறவறத்தாருக்குரிய ஒழுக்கமாகும்.

***மாற்றமுடைமை :*** இந்த உலகில் மாற்றமடையாத நிலையான பொருள்கள் என்பவை இல்லை. எல்லாப் பொருள்களும் எப்போதும் மாற்றம் அடைந்தவண்ணமே உள்ளன. மாற்றமே **உண்மை;** மாற்றமே நித்தியம் என்பது இச்சமயத்தின் அதிராக் கொள்கை. அம்மாற்றங்கள் சிறுசிறு அளவில் நேரிடுவதால் அம்மாற்றங்களை நம்மால் உணர முடிவதில்லை.

நம் முயற்சியால் நாம் நிர்வாணத்தை அடையலாம் என்று ஹீனயானிகளும், உலகில் மற்ற உயிர்களின் துன்பத்தை நீக்குவதே நிர்வாணத்தை அடையும் வழி என்று மகாயானிகளும் கூறுவர். நிர்வாணம் என்பது ஒன்றும் இல்லாத - சலனமற்ற - ஓர் அமைதியான சூனியம் என்பது ஹீனயானிகளின் விளக்கம். இந்த அகிலம் முழுவதற்கும் மூல நிலைக்களமான ஓர் உயர்ந்த நிலையே நிர்வாணம் என்பது மகாயானிகளின் கருத்து.

### 3. அறிவியல், சமயம், தத்துவம் - மீள் பார்வை

உலகச் சிந்தனையாளர் அனைவரும் கடவுள், ஆன்மா, உலகம் என்ற மூன்று பொருள்கள்பற்றித் தம் சிந்தனையைச் செலுத்தியுள்ளனர் என்பதைக் குறிப்பிட்டேன். இவை மூன்றும் வேத காலத்திற்கு முன்பும் பின்பும் பல ஞானிகள் பல காலகட்டங்களில் ஆராய்ந்து தங்கள் எண்ண விளக்கங்களை நல்கியுள்ளனர் என்று சுட்டியுரைத்தேன். நம் நாட்டுத் தத்துவ ஞானிகள் புற உலகப் பொருள்களை (அஃதாவது, உலகத்தை)த்

தவிர்த்து ஆன்மா இறை போன்ற கருத்துகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வளர்த்தனர். உலகமும் உலகப்பொருள்களும் அநித்தியமானவை (என் உடலே அநித்தியமானது) என்ற அடிப்படையில் அத்திசையில் தம் ஆய்வைத் தொடராது விட்டனர். இதன் காரணமாய் அறிவியலாய் வளர்ந்த உலகப் பொருள்களைப்பற்றிய ஆய்வின் முடிவுகள் அவ்வளவாய் வளரவில்லை என்ற கருத்தையும் உங்கள் முன் வைத்தேன்.

வேத, உபநிடத, ஆகம அடிப்படையில் தோன்றி வளர்ந்த சாங்கியம், யோகம், வைசேடிகம், நியாயம், மீமாம்சை ஒரு பக்கமாகவும்; இவற்றைத் தவிர்த்த புறச்சமயங்களாகிய உலகாயதம் (சாருவாகம்), ஆசீவகம், சமணம், பௌத்தம் மற்றொரு பக்கமாகவும் நிற்கின்றன. முன்னவை நம்பிக்கைமீதும் பின்னவை 'தரவு அறிவு' ஆகிய இரண்டன்மீதும் நிற்கின்றன. கடவுள் என்ற ஒரு மாபெரும் ஆற்றல் இந்த அகிலத்தைப் படைத்து ஆட்டிவைக்கின்றது என்ற நம்பிக்கையே முன்னவற்றின் அடித்தளம். இந்த அடிப்படையைக்கொண்டே அனைத்தையும் சமயங்கள் விளக்குகின்றன. அகிலத்தில் காணும் ஒவ்வொரு பொருளையும் தனித்தனியாய் அணுகி, அவற்றின் அமைப்பு, இயக்கம், அவற்றின் இடையே காணப்பெறும் தொடர்பு ஆகியவற்றின் தரவுகளைத் திரட்டி ஆராய்ந்து முடிவு சொல்ல முனைகின்றது, அறிவியல். வைதிகச் சமயங்கள் (ஆன்மிகம்) உளது என்ற கருதுகோளை (Hypothesis) மையமாய்க் கொண்டது. இலது என்ற கருதுகோளை (Null-hypothesis) மையமாய்க்கொண்டு விடையைத் தேடுகின்றது, அறிவியல். இரண்டன் நோக்கம் ஒன்றாயினும், அணுகுமுறைகளும் ஆய்வு முறைகளும் இரண்டு துருவங்கள்போல் பிரிந்து நிற்கின்றன.

வைதிகச் சமயங்கள் யாவும் இறைவன் உலகினைப் படைத்தான் என்ற கொள்கையை ஒப்புக்கொள்கின்றன. புறச் சமயங்கள் இக்கருத்தை ஒப்புக்கொள்ளாது உலகத் தோற்றமும் வளர்ச்சியும் அணுக்கொள்கையின் அடிப்படையில் நடைபெறு கின்றன என்கின்றன. சமணர்கள் **'சக்திகள்'** உலகத் தோற்றத் திற்குத் தேவை என்று பிறிதொரு கருத்தையும் கூடுதலாய் முன் வைக்கின்றனர். இப்போது நாம் அறிவியல் அடிப்படையில் இவற்றை நோக்குவோம்.

(1) **அண்டமும் பிண்டமும் :** 'அண்டத்தில் போலத்தான் பிண்டத்திலே' என்பது நம் மக்களிடையே வழங்கிவரும் ஒரு முதுமொழி. இந்தப் பழமொழியின் உண்மை, அணு ஆராய்ச்சியில் புலனாவதை அறியலாம். அணுவின் அமைப்பும் அண்டங்களின் அமைப்பும் ஒப்புடையனவாயுள்ளன என்று அறிவியலறிஞர்கள் மெய்ப்பித்துள்ளனர். அறிவியலறிஞர்கள் ஆய்வுகள் மூலம் கண்டவற்றையே நம் நாட்டு ஞானச்செல்வர்கள் உள்ளுணர்வால் அநுபவமாய்க் கண்டுள்ளனர். அறிவியலறிஞர்களின் அணுவியலும் ஞானச்செல்வர்களின் அநுபவ இயலும் ஓரிடத்தில் சந்திப்பதை ஆராய்ந்து பார்ப்போர் நன்கு அறிவர். அணுக்கோயிலின் முன்நிற்கும் அறிவியல் அறிஞர்களும் அண்டக்கோயிலின் முன் நிற்கும் அருளாளர் பெருமக்களும் ஒரே உண்மையைத்தான் காண்கின்றனர் என்பதை நாம் அறியுங்கால் எல்லையற்ற மகிழ்ச்சியடைகின்றோம். இறைவன் படைப்பை எண்ணிஎண்ணி வியக்கின்றோம்.

(2) **அண்டங்களின் அமைப்பு :** முதலில் அண்டங்களின் அமைப்பை நோக்குவோம். இந்த அகிலத்திலுள்ள அண்டங்கள் யாவும் ஆதவ மண்டலத்தில் அமைந்துள்ளன. ஆதவ மண்டலத்தில் நடுவிலிருக்கும் ஆதவனுக்கு மிக அண்மையிலிருப்பது, புதன்; தொடர்ந்து சுக்கிரன், பூமி, செவ்வாய், குட்டிக் கோள்கள் (Asteriods), வியாழன், சனி, யுரேனஸ் (நிருதி), நெப்டியூன் (வருணன்), புளூட்டோ (குபேரன்) என்ற வரிசையில் அமைந்துள்ளன. இவை ஒன்றையொன்று வேறுவேறு தளத்தில் வேறு வேறு திசையில் சுற்றிக்கொண்டுள்ளன. இப்படியே எண்ணற்ற ஆதவ மண்டலங்கள் விண்வெளியில் அமைந்து உலவிக்கொண்டுள்ளன. இவை தவிர, பல்லாயிரக்கணக்கான நட்சத்திரக் கூட்டங்கள் வானவெளியில் கண் சிமிட்டிக்கொண்டுள்ளன. இவற்றுள் சூரியன், சந்திரன் (துணைக்கோள்), செவ்வாய், புதன், வியாழன் (குரு - பிரகஸ்பதி), வெள்ளி (சுக்கிரன்), சனி, இராகு, கேது இவற்றின் அடிப்படையில் சோதிடக்கலை (Astrology) உருவாகியுள்ளது. அறிவியல் அடிப்படையில் அண்ட கோளங்களிலுள்ள அனைத்தின் அடிப்படையில் வான சாத்திரம் (Astronomy) அமைந்துள்ளது. சோதிடக்கலை சமயத்தில் புகுந்துவிட்டதால் திருக்கோயில்களில் ஒன்பது கோள்கள் **'நவகிரகங்கள்'** என்ற பெயரில் இடம் பெற்று வழிபாடும் நடைபெற்று வருகின்றது. இந்த அண்டங்களை

யெல்லாம் 'விசிட்டாத்வைதம்' **'அசித்து'** என்ற தத்துவத்திலும், **'சைவ சித்தாந்தம்' 'பாசம்'** என்ற தத்துவத்திலும் அடக்கி விளக்கும். மேலும், 'அசித்து' எம்பெருமானுக்கு உடலாய் இருப்பதாய் வைணவம் பேசும். இதனைச் **'சரீர-சரீரி பாவனை'** (உடல் - உயிர் - உறவு) என்று வழங்குவர்.

**(3) அணுவின் அமைப்பு :** அணுவின் அமைப்பையும் நோக்குவோம். அணு மிகமிக நுண்ணிய துகள். பேராற்றல் வாய்ந்த நுண்பெருக்கியால் (Microscope) காண முயன்றாலும் அது நம் ஊனக் கண்ணுக்குப் புலனாகாது. அரைக்கோடி அணுக்களை அணிவகுத்து நிற்க வைத்தால், அவை நாம் எழுதும் போது இடும் முற்றுப்புள்ளியில் அடங்கிவிடும். எனினும், அறிவியல் அறிஞர்கள் மிகச்சிறிய அணுவின் அளவினையும் கணக்கிட்டுள்ளனர். ஓர் அங்குலத்தினை இருபத்தைந்து கோடிகளாய்ப் பங்கிட்டால் கிடைக்கும் அளவே அணுவின் குறுக்களவாகும் என்று கண்டுள்ளனர். பெரிய அணுவின் குறுக்களவு இதனைவிட இரண்டரை மடங்கு பெரியது; அஃதாவது, ஓர் அங்குலத்தினைப் பத்துகோடியாய்ப் பங்கிட்டதில் ஒரு பங்காகும். இதனை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம். ஒரு திராட்சைப் பழத்திலுள்ள ஒவ்வோர் அணுவும் ஓர் அங்குல விட்டமுள்ள பந்துபோல் பெருக்கமடைவதாய்க் கற்பனை செய்துகொண்டால், அந்தத் திராட்சைப்பழம் நம் பூமியளவு உப்பிப் பெருக்கமடைந்துவிடும். இன்றைய அறிவியலறிஞர்கள் அணுவின் எடை, அதன் அகலம், நீளம், கனம், அமைப்பு, இனம், ஆக்கப்பாடு, அழிவாற்றல் முதலிய அனைத்தையும் ஆய்வகத்தில் ஆய்வுக்கருவிகளைத் துணையாய்க் கொண்டு அறுதியிட்டுள்ளனர். அணுவின் நுட்பம் முழுவதையும் அறிந்தால் இயற்கையின் இரகசியம் முழுவதையும் அறிந்து கொள்ள முடியும். வைணவ 'அசித்தும்' சைவ 'பாசமும்' தெளிவாகும்.

அணுவின் நுட்பத்தை இன்னொரு விதமாகவும் விளக்கலாம். **'மகிமா'** என்பது எண்வகைச் சித்துகளுள் ஒன்று; அது விருப்பம் போல் ஓர் உருவத்தைப் பருக்கச்செய்யும் ஒருவகைப் பேராற்றல். அணுவினை அண்டமாக்கும் மகிமாச்சித்து விளையாடும் ஒருவரிடம் மிகச்சிறிதாயுள்ள நீரிய அணு (Hydorgen atom) ஒன்றனையும் பந்து ஒன்றனையும் கொடுத்தால், 'அவர்

இரண்டனையும் தம் இரு உள்ளங்கைகளில் வைத்துக்கொண்டு சித்து விளையாடி, ஒரே விதத்தில் இரண்டனையும் விம்மிப் பெருகச் செய்துகொண்டே போவார். பந்து இவ்வுலக அளவு பெரியதாய் விம்மித் தோன்றுங்கால், அணு ஒரு பையன் விளையாடும் பந்து போலத்தான் தோன்றுகின்றது. பந்துக்கும் உலகுக்கும் எவ்வளவு வேற்றுமை! அணு அவ்வளவு நுட்பமானது. அதனால் அதனைக்கொண்டுதான் அறிவியலறிஞர்கள் பண்டைக்காலத்துச் சித்தர்கள்போல் பந்தாட்டமும் கோலியாட்டமும் விளையாடுகின்றனர். எல்லா விளையாட்டுகளும் அவர்களது கற்பனையுலகிலேயே நடைபெறுகின்றன!

அணுவின் நுட்பத்தை இன்னொரு விதமாகவும் தெளியவைக்கலாம். ஓர் அங்குல நீளம், ஓர் அங்குல அகலம், ஓர் அங்குல உயரம் உள்ள இடத்தில் அடங்கிக் கிடக்கும் அணுத்திரளைகள் ஆறு இலட்சம் கோடி கோடி. இதனை எண்ணால் எழுதினால் 6,00,00,000,000,000,000,000 என்றாகின்றது. இப்பேரெண்ணை மனத்தில் பதித்துக்கொள்ள முடியாது. சுருக்கி எழுதினால் $6 \times 10^{19}$ என்று ஆகும். இதனை விநாடிக்கு ஒரு எண் வீதம் எழுதினால் ஓராண்டில் ஒருவரால் எண்ணி முடிக்கக்கூடியது மூன்று கோடியே பதினைந்து இலட்சத்து முப்பத்து ஆறாயிரம். நாற்பது கோடி மக்களும் அந்த அணுக்களை எண்ணுவதில் ஈடுபட்டால் எண்ணி முடிய ஏறக்குறைய 5000 ஆண்டுகள் ஆகும். அவர்கள் கலியுகம் பிறந்ததிலிருந்து இந்த நூற்றாண்டு வரை அவற்றை எண்ணிக்கொண்டே இருக்க வேண்டும்! இப்பொழுது அணுவின் நுட்பமும் எண்ணிக்கையும் ஓரளவு நமக்குப் புலனாகும்.

அணுவின் உட்பகுதியை **உட்கரு** (Nucleus) என்று வழங்குவர். இதில் நேர் மின்னூட்டம் பெற்ற புரோட்டான்களும் (Protons) மின்னேற்றம் அற்ற நியூட்ரான்களும் (Newtrons) அடங்கியுள்ளன. இதனைச் சுற்றிலும் பல வட்டங்களில் எதிர் மின்னேற்றமுள்ள எலக்ட்ரான்களும் (Electrons) சுழன்றுகொண்டுள்ளன. எலக்ட்ரான்கள் நிறையற்றவை எனக் கருதப்பெறும் அளவுக்கு மிகவும் சிறியவை; நுண்ணியவை. இவற்றிலுள்ள மின்னேற்றம் உட்கருவின் நிறையையொட்டி அதிகமாகும். புரோட்டான் எலக்ட்ரானைவிட 1850 மடங்கு எடைமிக்கது. அணுவோ மின்னேற்றம் ஏற்படாமல் சமநிலையிலுள்ளது. உட்கருவைச் சுற்றிக் கோள் நிலையாகச் சுழன்றுகொண்டிருக்கும் எலக்ட்ரான்கள் ஒன்றிலிருந்து படிப்படியாய் 92 வரையிலும் உயர்ந்துகொண்டே போகும். இந்த எதிர் மின்னேற்

றத்தைச் சரிப்படுத்தப் புரோட்டான்களும் ஒன்றிலிருந்து 92 வரை மிக்கு வருகின்றன. எனவே, ஓர் அணுவில் எத்தனை புரோட்டான்கள் உள்ளனவோ அத்தனை எலக்ட்ரான்களும் இருக்கும். இவற்றையொட்டியே அணுக்களின் வகையும் 92 என்றாகியுள்ளது. அணுக்கள் பலவகையாய்க் காணப்படுவதற்கு இந்த மின்வேற்ற வேறுபாடே காரணமாகும். மிகச்சிறியதாகிய எலக்ட்ரானோ அதனையொட்டிப் புரோட்டானோ ஓர் அணுவில் ஒன்றுசேர்வதால் ஓரணு வேறு ஒரு வகை அணுவாய் மாறுகின்ற தன்மை நம்மை வியப்பினில் ஆழ்த்துகின்றது. இதனால் அணுவெல்லாம் அடிப்படையில் ஒரு தன்மையனவே என்பதை அறிகின்றோம். மின்துகள்களின் ஏற்றக்குறைவே வேற்றுமைக்கு அடிப்படை. மின்துகள்களின் எண்ணிக்கையை ஏற்றவும் குறைக்கவும் கூடுமானால் ஓர் அணுவை வேறு ஓர் அணுவாக்கலாம். பண்டையோர் கருத்திலமைந்த இரசவாதமும் - அஃதாவது, இரும்பைப் பொன்னாக்கும் முறையும் - இந்த அடிப்படையிலேயே அமைந்தது. இதனால் பொன்னும் (Gold) மண்ணும் (Silicon) ஒன்றாகின்றன. இதனையுணர்ந்தே யோகியர் "ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும்" மனப்பான்மையைப் பெற்றுள்ளனரோ என்று கருத வேண்டியுள்ளது.

இவ்விடத்தில், இராமகிருஷ்ண பரமஹம்சரின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி நினைவிற்கு வருகின்றது. ஒரு சமயம், இராமகிருஷ்ணரும் அவர் துணைவியார் சாரதா தேவியாரும் வாரணாசித் தெருவில் நடந்து சென்றனர். பரமஹம்சர் முன்னே செல்ல, தேவியார் பின்னே சென்றார். வழியில் தரையில் ஏதோ ஒரு பொருள் (பித்தளைத்துண்டு?) மின்னுவதைக் கண்டார்; அதனைக் காலால் மண்ணைத் தள்ளி மூடினார். பின்னால் வந்துகொண்டிருக்கும் தேவியார் அதனைக் கண்டார். கணவரை நோக்கி, "என்ன மறைக்கின்றீர்கள்?" என்று தேவியார் வினவினார்; இராமகிருஷ்ணர் அதற்கு "ஏதோ தங்கம்போல் மின்னுகின்றது. நின் மனம் சலனப்படும் என்று கருதி மூடினேன்" என்றார். "இன்னும் தங்களுக்கு மண்ணும் தங்கமும் வேறு வேறாய்த் தோன்றுகின்றனவோ?" என்று வினவினாராம். இவற்றால், தேவியார் மனம் பக்குவப்பட்ட அளவுக்கு அவர் கணவரின் மனம் பக்குவப்படவில்லை என்பதையும் அறிகின்றோம். சிவனடியார்களைப்பற்றிப் பெரிய புராணம்,

*"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்*
*ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்."*[49]

49. பெரி. புரா. செய்.143

என்று குறிப்பிடும். இந்த மனநிலை - ஓட்டையும் பொன்னை யும் ஒன்றுபோல் கருதும் மனநிலை - மண்ணையும் பொன்னை யும் ஒன்றுபோல் கருதும் மனநிலை - இன்னும் இராம கிருஷ்ணருக்கு வரவில்லை என்ற கருத்தையும் சிந்திக்கின்றோம்.

மீண்டும் அணுவிற்கு வருவோம். அணுவின் உட்கருவிலுள்ள துகள்கள் (புரோட்டான், நியூட்ரான்) மிக இறுகப் பிணைக்கப் பெற்றுள்ளன. நாம் இதுகாறும் அறிந்த ஆற்றல்கள் அனைத் திலும் இவை பிணைந்திருக்கும் ஆற்றல் மிகப்பெரியது. இந்த ஆற்றலை உட்கருவின் பிணைப்பாற்றல் (Binding Energy of the Nucleus) என வழங்குவர். அணுவின் உட்கருவிற்கும் எலக்ட்ரான் களுக்கும் இடையேயுள்ள மின்னாற்றலைவிட இவ்வாற்றல் பத்து இலட்சம் மடங்கு பெரியது; வன்மையும் வாய்ந்தது. இந்த ஆற்றல்தான் ஹிரோசீமாவை அழித்தது; நாகசாகியை நாச மாக்கியது[50]. இதுவே அணுகுண்டு செயற்படும் ஆற்றலாகும்.

**(4) பொங்கல் திருநாள் :** அணுவாற்றலைப் பேசிக்கொண் டிருக்கும் நமக்குப் பொங்கல் திருநாளும் நினைவிற்கு வரு கின்றது. இந்திரனை மருதநிலக் கடவுளாய்த் தொல்காப்பியம் குறிப்பிடும். அவனுக்கு **'மேகநாதன்'**[51] என்ற பெயரும் உண்டு. அவனே மழைக்கடவுளாகவும் பிற்கால இலக்கியங்களில் குறிப் பிடப்பெறுகின்றான். உயிர்களுக்கு இன்றியமையாத வெப்பத்தையும் ஒளியினையும் தருபவன், ஆதவன். ஆகவே, கடவுளாகின்றான். பொங்கலன்று அவனுக்கு வழிபாடு நடைபெறுகின்றது. இந்த வழிபாட்டின் தத்துவம் அறிவியலடிப்படையில் அமைந்துள்ளது. இதனை,

> "காதல் கொண்டனை போலும் மண்மீதே
> கண்பிறழ் வின்றி நோக்குகின் றாயே;
> மாதர்ப் பூமியும் நின்மிசைக் காதல்
> மண்டி னாள்இதில் ஐயம்ஒன் றில்லை;
> சோதி கண்டு முகத்தில் இவட்கே
> தோன்று கின்ற புதுநகை என்னே!
> ஆதித் தாய்தந்தை நீவிர் உமக்கே
> ஆயி ரந்தரம் அஞ்சலி செய்வேன்."[52]

---

50. ஹிரோசீமா, நாகசாகி என்பன ஜப்பானிலுள்ள நகரங்கள். இரண்டாம் உலகப் பெரும் போரில் அமெரிக்க அணுகுண்டுகளால் அழிக்கப்பெற்றன.

51. இராவணனின் மூத்த மகனின் பெயரும் இதுவே. பிற்காலத்தில் இந்திரனைப் போரில் வென்று 'இந்திரசித்து' என்ற பெயர் பெற்றான்.

52. பா.க. ஞாயிறு வணக்கம் - 2

என்ற பாரதியாரின் ஞாயிறு விளக்கப் பாடலைக்கொண்டு விளக்குவேன்.

இப்பாடலில் கவிஞனின் ஆழ்ந்த சிந்தனை நிழலிடுகின்றது. ஞானியர் காண்கின்ற 'ஆழ்ந்த நோக்கை'க் கவிஞர்களும் சில சமயம் காண்கின்றனர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாய் அமைகின்றது.

> "கவிக ளாகுவார்
> காண்பவர் மெய்ப்பொருள்" [53]

என்பது கம்பன் வாக்கல்லவா? இப்பாடலில் ஆதவனைக் காதலனாகவும் பூமிதேவியைக் காதலியாகவும் காண்கின்றான், கவிஞன். இந்த இருபொருள்களும் **'காதலன் - காதலி தரிசனம்'** தந்து நிற்கின்றன, கவிஞனுக்கு. ஆம், உண்மையும் அதுதானே. இந்த இரண்டும் இணங்கி இணைந்து இயங்குவதால்தான் இவ்வுலகிலுள்ள நிலைத்திணையும் இயங்குதிணையும் தோன்றி நிலைபெற்றுள்ளன. "செம்பொன்னை உருக்கி வார்த்தாலெனக் காட்சி அளிக்கும் அந்திவான் செக்கர் அழகும், கொண்டல் கொண்டலாய் ஓடும் புயலின் அழகும், அது பொழியும் மழையின் அழகும், அத்தண்புனல் மணற்கற்களை அரித்தோடும் அருவியின் அழகும், பச்சைப் பசேலெனப் பெருங் காட்சி அளிக்கும் பயிர்களின் அழகும், அவற்றில் பச்சைப் பாம்பெனப் பின்னிக் கிடக்கும் பசுங்கொடிகளின் அழகும், அவற்றினின்றும் அரும்பியுள்ள நகைமலரின் அழகும்"[54] நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. கதிரவன் - பூமி என்ற இரண்டும் கலந்து வாழும் வாழ்க்கையில் நாம் காணும் காட்சிகள் இவை. இவற்றின் அறிவியல் உண்மைகளை விளக்குவேன்.

**(5) ஆற்றல் மூலம் :** 'ஆதவனே ஆற்றல் மூலம்' (The Sun is the ultimate source of energy) என்பது இன்றைய அறிவியல் உண்மை. ஆதவனிடம் இரு புரோட்டான்களும் இரு நியூட்ரான்களும் இணைந்து பரிதிய உட்கருவை இயற்றுகின்றன. ஒவ்வொரு நொடியிலும் கோடானுகோடி உட்கருக்

---

53 கம்பரா. இரணியன் வதை - 32

54 திரு.வி.க. முருகன் அல்லது அழகு.

களில் இந்நிகழ்ச்சி நடைபெற்று வருகின்றது. இதனால் ஏராள மான ஒளி ஆற்றல் அல்லது கதிர்வீச்சு ஆற்றல் ஆதவனிடம் உற்பத்தியாகி, விசும்பு வெளியைக் கடந்து, நொடி ஒன்றுக்கு 1,86,000 மைல் வீதம் விரைந்து வந்து பூ மண்டலத்தை அடை கின்றது. அது நம்மை வந்தடைவதற்கு, எட்டு மணித்துளிகள் ஆகின்றன. ஆதவனின் உட்புறத்திலுள்ள வெப்பம் 20,000,000° கழியுள்ளது. அங்குள்ள அமுக்கமும் ஓர் அங்குலத்திற்கு 15,000,000,000 இராத்தல்களாய் உள்ளது. இவ்வளவு வெப்பமும் அமுக்கமும் ஆதவனிடம் ஒன்றாய்ச் சேர்ந்து இருப்பதால்தான் ஆதவனிடமுள்ள கோள நிலை எலக்ட்ரான்கள் முற்றிலும் உதிர்க்கப்பெறுகின்றன.

**ஆதவனின் தேய்வு :** ஒவ்வொரு நொடியிலும் ஆதவனிட மிருந்து ஒன்றரைக் கோடியே கோடி குதிரைத்திறன் (Horse - Power) அளவுகொண்ட ஆற்றலைப் பூமி பெறுவதாய் அறிவிய லறிஞர்கள் கணக்கிட்டுள்ளனர். இதில் மூன்றில் ஒரு பங்கு ஏரி, கடல் முதலிய நீர்நிலைகளிலிருந்து நீரை ஆவியாய் மாற்று வதற்குப் பயன்படுகின்றது. இவ்வாறு நீராவியாய்ச் செல்லும் நீர்தான் பின்னர் மலைகளின் உச்சியில் மேகமாய் நின்று மழையாய்ப் பொழிகின்றது. மழைநீர் ஆறுகளாய்ப் பாய் வதனால் அருவிகள் (Water Falls) உண்டாகின்றன. உலகிலுள்ள எல்லா ஆறுகளிலும் ஓடுகின்ற நீரின் ஆற்றலைக்கொண்டு சுமார் 35 கோடி குதிரைத்திறன்[55] அளவு ஆற்றலைப் பெறலாம் என்று மதிப்பிடுகின்றனர். ஆதவனின் வெப்பத்தையெட்டியே காற்று களும் வீசுகின்றன; பருவக்காற்றுகளால்தான் மழையும் பெய் கின்றது. உழவுத்தொழில் நடைபெறுவதற்கு ஆதவனே முதற்காரணம் ஆவான். இத்தனை நிகழ்ச்சிகளுக்கும் நெருப்புக் கோளம்போல் உள்ள ஆதவன், ஒவ்வொரு நொடிக்கும் நாற்பது இலட்சம் டன் அளவு தேய்ந்து அழிகின்றமையே காரணமாகும்.

**(6) தாவரங்கள் பகலவனின் ஆற்றலைப் பெறல்**
இயற்கையில் நடைபெறும் ஓர் அற்புத நிகழ்ச்சி ஒளிச்சேர்க்கை (Photo - synthesis) என்பது. தாவரங்கள் காற்றிலுள்ள கரியமிலவாயு, வேர்களின்மூலம் பெறும் நீர் இவற்றை

---

55. **குதிரைத்திறன்** - திறமை வாய்ந்த குதிரைகள் வேலை செய்யும் திறனின் சராசரியை அளவிட்டு இந்த அலகை வகுத்தவர், ஜேம்ஸ் வாட் என்பார். 550 இராத்தல் எடையுள்ள பொருளை ஒரு விநாடி நேரத்தில் ஓர் அடி உயரம் தூக்கக்கூடிய திறனே குதிரைத்திறன் ஆகும்.

உட்கொண்டும், கதிரவன் ஒளிக்கற்றைகளாகவும் வெப்பக் கதிர்களாகவும் உமிழும் ஆற்றலைத் துணைக்கொண்டும் (இதுதான் அணுவாற்றல்; நீரிய உட்கருக்கள் பரிதிய உட்கருக்களால் மாறும்போது உண்டாவது) கார்ப்போஹைட்ரேட்டுகள் போன்ற பொருள்களைச் சேமித்து வைக்கும் நிகழ்ச்சிதான் ஒளிச்சேர்க்கை என்பது. தாவரங்கள் கதிரவனின் ஒளியைக்கொண்டே வாழ்கின்றன என்பதை அறிவோம். அவை ஆதவனிடமிருந்து ஒளியையும் வெப்பத்தையும் நேரே விழுங்குகின்றன. இந்த வையத்தில் தாவரங்களைத் தவிர வேறு எந்தப் பொருள்களும் கதிரவனிடமிருந்து நேரடியாய் ஆற்றலைப் பெறும் திறனை அடையவில்லை. மனிதன் உட்பட விலங்கு, பறவை முதலிய பிராணிகள் யாவும் கதிரவன் காலும் வெப்பத்தையும் ஒளியையும் விழுங்காமல் – விழுங்க முடியாமல் – அவற்றை விழுங்கிய தாவரங்களை விழுங்கிக் கதிரவனின் ஆற்றலைப் பெறுகின்றன. புலி, சிங்கம் போன்ற புலால் உண்ணும் விலங்குகளோ கதிரவன் ஆற்றலை நேரே விழுங்குவதில்லை; தாவரங்கள் உண்டாக்கும் பொருள்களை விழுங்குவதுமில்லை. அவை பயிருண்ணும் விலங்குகளைக் கொன்று தின்று ஆற்றலைப் பெறுகின்றன. ஏன்? திருமாலின் வாகனங்களாய்ச் செயற்படும் பெரிய திருவடி (கருடன்) புலால் உண்பவன்; சிறிய திருவடியோ (அநுமன்) மரக்கறியை உண்பவன். இதனால்தான் வைணவர்களுள் சிலர், புலால் உண்பவர்களாய் உள்ளனரோ என்று நினைக்க வேண்டியுள்ளது. சிவபெருமானின் வாகனமாகிய எருது மரக்கறி உண்பதுதான். சைவர்களுள் சிலர் அசைவ உண்பது ஏனோ தெரியவில்லை! சமரச சன்மார்க்கம் கண்ட வள்ளல் பெருமான்,

> "உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும்
> உடையவர்கள் எல்லாம்
> உறவினத்தார் அல்லர்அவர்
> புறஇனத்தார் அவர்க்குப்
> பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல்
> மாத்திர மேபுரிக" 56

என்று பகவர்வர். மேலும் அப்பெருமான்,

56. திருஅருட்பா - ஆறாம் திருமுறை - அருள் விளக்க மாலை - 71 (4160)

"வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன்; பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்."[57]

என்று எல்லோர்மீதும் கருணை காட்டுவார்.

எனவே, ஆராய்ந்து பார்த்தால் இப்புவியிலுள்ள பிராணி கள் அனைத்தும் பகலோனிடமிருந்து ஆற்றலைப் பெறுகின்றன என்பது வெள்ளிடை மலையென அறிகின்றோம். இதன் அறிகுறியாய்த்தான் தமிழர்கள் பொங்கல் விழாவைக் கொண் டாடுகின்றனர். ஆந்திர வேளாண் மக்கள் 'பெத்த பண்டுக' (பெரிய பண்டிகை) என்று சிறப்பாய்க் கொண்டாடுகின்றனர்.

**(7) கதிரவனின் தேங்கிய ஆற்றல் :** தாவரங்களின் ஒவ்வோர் அணுவிலும் கதிரவனிடமிருந்து வரும் ஆற்றல் அடங்கிக் கிடக்கின்றது. இந்த ஆற்றல்தான் பூமியிலிருந்து கிடைக்கும் நிலக்கரியிலும் மண்ணெண்ணெய் போன்ற நீர்ம எரியைகளிலும் (Liquid fuel) அடங்கிக் கிடக்கின்றது. நிலக்கரி என்பது என்ன? பண்டைக் காலத்திலிருந்த காடுகள்தாம் காலப்போக்கில் நிலத்தினுள் அழுந்தி உருமாறி நிலக்கரியாய் மாறியுள்ளன. நீர்ம எரியைகள் யாவும் இப்பழைய மரங்களின் சாறுகளேயாகும். ஆகவே, தாவரங்களின் ஒளிச்சேர்க்கையால் கதிரவனிடமிருந்து மரத்தினுள்ளே அன்று புகுந்த ஆற்றல் அங்கேயே உறைந்து கிடக்கின்றது. அவ்வாறு உறைந்து கிடக்கும் ஆற்றல்தான் நம் உடலினுள்ளோ வெளியிலோ எரிதல் நிகழும் பொழுது உருகி வழிகின்றது; நாம் மீண்டும் வெப்பத்தையும் பெறுகின்றோம்; ஒளியையும் அடைகின்றோம். எரியை களிடமிருந்து கிடைக்கும் ஆற்றலைக்கொண்டு இயந்திரங் களையும் இயக்குகின்றோம். நான் இன்று உங்கள் முன்னால் பேசுவதற்கு வேண்டிய ஆற்றலைத் தந்தவை காலையில் உண்ட 2 இட்டிலியும் 2 பூரியுந்தாம் என்பதை உணரவேண்டும். இட்டிலியும் பூரியும் சூரிய மின்கலங்கள் போல் (Solar batteries) செயற்படுகின்றன. இந்த நிகழ்ச்சிகளால், 'ஆதவனே ஆற்றல் மூலம்' என்ற உண்மையும் நமக்கு ஒருவாறு புலனாகின்றது.

57. திருவருட்பா - ஆறாம் திருமுறை - பிள்ளைப் பெருவிண்ணப்பம் - 62 (3411)

**(8) கதிரவன், வாழ்க்கையின் உயிர்நாடி :** கதிரவன்தான் இவ்வுலக வாழ்க்கைக்கு உயிர்நாடியாய் அமைகின்றான். இந்த அறிவியல் உண்மையினை அநுபவமாய்க் கண்ட இளங்கோ அடிகள் என்ற கவிஞர் பெருமான்,

*"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்*
*காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு*
*மேரு வலந்திரித லான்"*[58]

என்று தாம் இயற்றிய காவியத்தில் மங்கல வாழ்த்துப் பாடலாய் வெளியிட்டார். 'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பில்' திளைத்த நக்கீரர் பெருமானும்

*"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு"*[59]

என்று தம் திருமுருகாற்றுப்படையைத் தொடங்குகின்றார். 'உலகம்' என்பது சீவான்மாக்களை உணர்த்துகின்றது. 'பலர்' என்பது எல்லாச் சமயத்தினையும் குறிக்கின்றது. ஆற்றலின் மூலமாய் - ஆதிமூலமாய் - விளங்கும் ஆதவனே பொங்கல் விழாவின் கடவுளாய் - உழவர்கள் போற்றும் 'சூரியநாராயணன்' என்ற தலைவனாய் - விளங்குகின்றான். ஒவ்வோர் ஆண்டிலும் உழவின் பயனாய்ப் புதியனவாய்ப் பெற்ற பொருள்களை ஆண்டவன் திருவடியில் காணிக்கையாய் வைத்துத் தம் நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றனர் உழவர் பெருமக்கள்; பொங்கல் விழாவினைப் பூரிப்புடன் கொண்டாடுகின்றனர்.

பகலவனிடமிருந்து இயற்றப்பெற்ற ஆற்றல் (அணுவாற்றல்) தாவரங்கள்மூலம் பாய்ந்து பல்வேறு பொருள்களைத் தோற்றுவிக்கின்றன; இப்பொருள்கள் யாவும் ஒன்றுசேர்ந்து பொங்கல் வடிவில் காட்சியளிக்கின்றன. பொங்கலிலுள்ள பொருள்கள் யாவும் உழவன், தாவரங்களின் மூலம் பெற்றவை. நெய், தாவரங்களை உண்ட பசுவின்மூலம் அடைந்த பொருளாகும். பொங்கல் வடிவமாயுள்ள ஆற்றல், ஆற்றல் வடிவமாயுள்ள ஆண்டவனுக்கும் (கதிரவனுக்கும்) படைக்கப்

58. சிலப். மங்கல வாழ்த்து - அடி 4-6.
59. திருமுருகாற். அடி 1-2.

பெறுகின்றது. இயற்கை வாழ்வில் தோய்ந்த தமிழரின் பொங்கல் விழா, அறிவியல் உண்மைகள் அடங்கிய ஒரு பெருவிழாவாய் ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. அணுயுகத்தில் வாழும் நமக்கு அஃது அணுவின் தத்துவத்தை ஒருவாறு விளக்கி நிற்கின்றது. இந்த அடிப்படையில் மேலே குறிப்பிட்ட பாரதியின் ஞாயிறு வணக்கப் பாடலுக்குப் பொருள் கண்டு மகிழலாம்.

**(9) ஆடலரசனின் தத்துவம் :** ஆதவனே ஆற்றலின் மூலம் என்பதை மேலே விளக்கினேன். இதுவே இன்றைய அறிவியல் உண்மை. ஆற்றல் முழுவதும் அணுவின் உட்கருவில் தேங்கிக் கிடக்கின்றது என்பதும் இன்றைய நவீன அறிவியல் மெய்ப்பித்த உண்மை. இந்த அகிலத்தைச் சிவமாய்க் கொண்டால் ஆதவன் ஆற்றலாகின்றான். அங்ஙனமே அணுவின் உட்கருவும் சக்தியாகின்றது. ஒருவருடைய உயிர்ப்பு ஆற்றல் தடைபடாத அவருடைய இதயத்துடிப்பில் இருப்பதைப் போலவே, இந்த அகிலத்தின் ஆற்றல் ஆதவனிடத்திலும், அணுவின் ஆற்றல் அதன் உட்கருவிலும் அடங்கியுள்ளன. அண்டங்களின் தத்துவமும் அணுவின் தத்துவமும் தில்லைத் திருநடனத் தத்துவத்தில் - அம்பலவாணனின் ஆனந்தக் கூத்தில் - வைத்து விளக்கப்பெற்றுள்ளன. இத்திருவுருவத்தின் திருவாசி **'ஓம்'** என்னும் பிரணவமாகும்; அவரது சடை, ஞானமே வடிவமானது. அதனை விரித்து நின்று ஆடுவது அவர் ஞானத்தை அள்ளி வழங்குகின்றார் என்பதைக் குறிக்கும். வீசிய கரத்தால் மாயையை உதறி, ஊன்றிய பாதத்தினால் மலத்தினை அமுக்கி, தூக்கிய திருவடியாகிய அருளை எடுத்து, ஆன்ம கோடிகளை ஆனந்தத்தில் அழுத்துகின்றார் என்பதுதான் தில்லைக் கூத்தின் உட்பொருள். ஒருகையில் உடுக்கையையும், மற்றொரு கையில் சிவந்த மழுவையும் அவர் தாங்கியிருப்பதிலிருந்து உலக அமைப்பில் ஒலி, ஒளிகளின் முக்கிய தத்துவத்தை உணரலாம். ஒலி ஒளிகளின் மூல காரணமும் துடிப்பேயாகும். இந்தத் தில்லைக் கூத்தனின் தத்துவமே ஒவ்வோர் அணுவினுள்ளும் ஆடல் அசைவுகளாய் அமைந்து கிடக்கின்றது என்பதை இன்றைய அறிவியல் உணர்த்துகின்றது.

திருமூலரும் இந்த நடராச தத்துவத்தை,

> "எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
> எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
> எங்கும் சிவமா யிருத்தலால் எங்கெங்கும்
> தங்கும் சிவனருட் டன்விளை யாட்டதே"[60]

60. திருமந்திரம் - ஒன்பதாந்தந்திரம் - திருக்கூத்துத் தரிசனம்.

என்று விளக்குவர். எங்கும் சிவனுடைய திருமேனி உள்ளது. பார்க்குமிடந்தோறும் அவனுடைய அருளாற்றல் நீக்கமற நிறைந்துள்ளது. அவன் திருவருளால் நடைபெறும் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்ற திருத்தொழில் கள் ஐந்தும் ஆருயிர்களின் நன்மையின்பொருட்டேயாகும். இவையனைத்தும் சிவசக்தியின் வாயிலாகவே அவன் செய் தருள்கின்றான். அம்மையும் அப்பனும் நுண்ணறிவு அம்பலமாம் திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்கியருள்கின்றனர். அதனால் எல்லாம் சிதம்பரமாகின்றது. அப்பன் செய்தருளும் திருக்கூத்தும் எங்கும் நிறைந்து காணப்பெறுகின்றது. அம்மையின் ஆற்றல் ஒவ்வொரு செயலிலும் தென்படுகின்றது. எல்லா உயிர்களும் உலகங்களும், எல்லா உலகியற்பொருள்களும் அவனைச் சார்ந்து நிற்கின்றன. எல்லாச் செயல்களும் அவனைச் சார்ந்துள்ளன. சுருங்கக் கூறின், உலகமெல்லாம் சிவசக்தியின் திருக்கூத்தாகும். இதனால் திருமூலரும் 'அம்பல மாவது அகில சராசரம்'[61] என்றனர். இதனையே சிவஞான சித்தியாரும்,

"உலகமே உருவ மாக யோனிகள் உறுப்ப தாக
இலகுபேர் இச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
அலகிலா உயிர்ப்பு லன்கட்கு அறிவினை ஆக்கி ஐந்து
நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிக்கும் நாதன்."[62]

என்று விளக்கியுரைக்கின்றது. ஆருயிர்கள் எல்லாமும் பேரின்பம் எய்தும்பொருட்டே இறைவன் இந்த ஐந்தொழில் களையும் புரிந்து வருகின்றான்.

இவ்வாறு அறிவியல் அடிப்படையில் ஆற்றலைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது **'சக்தி தத்துவம்'** (ஆற்றல் தத்துவம்) நினைவிற்கு வருகின்றது. அதனைப்பற்றியும் சிறிது சிந்திப் போம்.

**(10) சக்தி தத்துவம் :** இது சைவத்திலும் உண்டு, வைண வத்திலும் உண்டு. சைவ சமயத்தினர் இறைவனை 'அம்மை யப்பன்' என்று கருதுவது போலவே, வைணவ சமயத்தினர் இறைவனை 'இலக்குமி - நாராயணன்', 'சீநிவாசன்', 'திருவாழ் மார்பன்' என்றெல்லாம் கருதுகின்றனர். இருகடவுளர்களின்

---

61. திருமந்திரம் - திருக்கூத்துத் தரிசனம் - 54 (2775)

62. சிவஞான சித்தியார் - சுபக்கம் - 257

பெயர்களிலும் தேவிக்கு முதலிடம் இருப்பது கருதத்தக்கது. இம்மரபினைக் கருதியே இல்லக்கிழத்தியர்கள் தம் கணவன்மார்களின் பெயரைத் தம் பெயர்களுடன் சேர்த்து 'விசயலக்குமி - இராமகிருஷ்ணன்', 'பிரேமா - இராமலிங்கம்', 'தனலட்சுமி - துரைசாமி', 'கல்யாணி - துரை', 'சீதா - அரங்க ராசன்', 'யசோதா - ஜயபால்' என்றெல்லாம் பெயர்கள் வழங்கி வருவதைக் காணலாம்.

வைணவத்தில் இறைவனும் இறைவியும் பிரிக்கப்பெறாது ஒன்றாய்க் கருதப்பெற்றாலும், செயல்முறையில் அவர்களைத் தனித்தனியாய்க் கருதும் மரபும் உண்டு. சட்டத்தின் அடிப் படையில் ஆட்சிபுரியும் இறைவனும், அன்பின் (கருணையின்) அடிப்படையில் ஆட்சிபுரியும் இறைவியும் இணைந்து செயற் படுவதால், சட்டத்தின் அன்பும் அன்பின் சட்டமும் உயிர் நிலையாய் ஒன்றோடொன்று பிணைந்து தெய்விக இயல்பாய்க் காட்சி அளிக்கின்றன. அறநூல்கள் வினையின் ஆட்சியை வலியுறுத்துகின்றன. சமயம் கருணையின் வரம்பற்ற நிலையை உணர்த்துகின்றது. அறத்தின் அடிப்படையில் அமைந்த சமயம் இரண்டன் உரிமைகளையும் சீர்தூக்கிப் பொருத்தமுறச் செய் கின்றது. இதனையே வேதாந்த தேசிகரும், 'ஒண்டொடியாள் திருமகளும் தானும் ஆகி' (தே.பி.85) என்று இறைவன் நிலையைக் குறிப்பிட்டார். திருமகள் - பெரிய பிராட்டியார்; தான் - இறைவன், நாராயணன். மணிவாசகப்பெருமானும் 'அம்மையே அப்பா' (திருவா.536) என்பதில் அம்மையை முதலில் விளித்தார். வள்ளல் பெருமானும் 'அம்மை அப்பன் என் ஆருயிர்த் துணைவன்' (திருவருட்பா - இரண்டாம் திரு முறை 1333) என்ற தொடரில் முதலில் அம்மையைக் குறிப் பிடுதல் காணலாம். வைணவத்திலுள்ள பிராட்டியின் புருஷ காரம் (= தகவுரை கூறுதல்) ஓரளவு பிற சமயங்களிலும் ஊடுருவி நிற்றல் காணலாம். தேவி வழிபாடு சைவத்திலும் உண்டு, வைணவத்திலும் உண்டு. சைவத்திற்கு எடுத்துக்காட்டு **அபிராமி அந்தாதி;** வைணவத்திற்கு எடுத்துக்காட்டு முத்தமிழ்க்கவி வீரராகவ முதலியார் இயற்றிய **திருக்கண்ணமங்கை மாலை.**

இவையெல்லாம் முற்றிலும் சமய அடிப்படையில் அமைந்த பெண் தெய்வ வழிபாட்டுத் தெய்வப்பனுவல்கள். அறிவியல் காலத்தில் வாழ்ந்த பாரதியாரின் சக்தி தத்துவத்தையும் சக்தி வழிபாட்டையும் இனிக் காண்போம்.

நம் நாட்டுச் சண்மதங்களுள்[63] சாக்தம் என்பது ஒன்று. சக்தியை அடிப்படையாய்க் கொண்டு எழுந்தது. 'சர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்ற மரபு ஒன்று உண்டு. சாக்த மதம் தோன்றிய பிறகு **'சர்வம் சக்தி மயம் ஜகத்'** என்ற தத்துவம் தோன்றிய தாய்க் கருதலாம். இதுவே பாரதியாரின் பேச்சாகவும் மூச்சாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். சக்திபற்றி அதிகமான எண்ணிக்கையில் பாடல்கள் காணப்படுவதே இக்கருத்திற்கு அரணாய் அமைந்துவிடுகிறது. பாரதியாரின் வாரணாசி வாழ்வும், கல்கத்தா வாழ்வும், புதுச்சேரியில் வாழ்ந்தபோது கொண்ட அரவிந்தரின் தொடர்பும் கவிஞரைச் சக்தி வழி பாட்டில் ஈடுபடுத்தியதாய்க் கருதுவது பொருத்தமே யாகும். அறிவியல் வளர்ச்சி பெற்ற உலகில் வாழும் நமக்குப் பாரதியின் பாடல்கள் அனைத்தும் அறிவியல் அடிப்படையில் அமைந் திருப்பவையாய்க் காணப்படுகின்றன. 'மூன்று காதல்'[64] என்ற பாடலில் மூன்றாவதாய் அன்னை பராசக்தியின்மீது இவர் காதல் கொண்டதாய்க் கூறுவர். இவள் ஒருநாள் இரவில் வருகின்றாள்; கன்னி வடிவமாய் வருகின்றாள்; இவளைக் கண்ட களிப்பில்,

"அன்னை வடிவமடா! - இவள்
ஆதி பராசக்தி தேவியடா! - இவள்
இன்னருள் வேண்டுமடா! - பின்னர்
யாவும் உலகில் வசப்பட்டுப் போமடா"[65]

என்று எக்களிப்பில் மகிழ்ச்சிப் பெருக்கை வெளியிடுகின்றார். வாணி, சீதேவி, பார்வதி ஆகிய இம்மூன்று தேவியரும் ஒன்றாய் இலங்குபவளே மாதா பராசக்தி என்பது கவிஞரின் அதிராக் கொள்கையாகும். எனவே,

"மாதா பராசக்தி வையமெல்லாம் நீநிறைந்தாய்,
ஆதாரம் உன்னையல்லால் ஆரெமக்குப் பாரினிலே"[66]

என்று கூறுவர்.

---

63. சண்மதங்களாவன; சைவம், வைணவம், கௌமாரம், காணாபத்தியம் சாக்தம் என்பனவாகும்.
64. தோ. பா.63 மூன்று காதல் - 4
65. தோ. பா. 63 - மூன்று காதல் - 8
66. தோ. பா. நவராத்திரிப்பாட்டு - 1

"யாது மாகி நின்றாய் - காளி!
எங்கும் நீநி றைந்தாய்!
தீது நன்மை யெல்லாம் - காளி
தெய்வ லீலை யன்றோ."[67]

"யாது மாகி நின்றாய் - காளி!
எங்கும் நீநி றைந்தாய்!
தீது நன்மையெல்லாம் - நின்றன்
செயல்க ளன்றி இல்லை"[68]

"எண்ணிலாப் பொருளும் எல்லையில் வெளியும்
யாவுமாய் நின்றனை போற்றி"[69]

"எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாய்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெல்லாம் - பண்ணியதோர்
சக்தி "[70]

என்ற பாடற்பகுதிகளில் **'எல்லாம் சக்தி மயம்'** என்ற கருத்து தெளிவாவதைக் காணலாம்.

இதே கருத்தை வேறு மூன்று பாடல்களில் விரிவாய் விளக்குவர்.

"பரிதி என்னும் பொருளிடை ஏய்ந்தனை,
பரவும் வெய்ய கதிர்எனக் காய்ந்தனை;
கரிய மேகத் திரளெனச் செல்லுவை,
காலும் மின்னென வந்துயிர் கொல்லுவை;
சொரியும் நீரெனப் பல்லுயிர் போற்றுவை,
சூழும் வெள்ளம் எனஉயிர் மாற்றுவை;
விரியும் நீள்கடல், என்ன நிறைந்தனை,
வெல்க காளி எனதம்மை வெல்கவே.

"வாயு வாகி வெளியை அளந்தனை,
வாழ்வெ தற்கும் உயிர்நிலை ஆயினை;
தேயு வாகி ஒளிஅருள் செய்குவை;
செத்த வற்றைக் கருப்பொருள் ஆக்குவை;

---

67. தோ.பா. 29 காளிப்பாட்டு
68. தோ.பா. 30 காளி ஸ்தோத்திம் - 1
69. தோ.பா. 17 மகாசக்தி பஞ்சரம் - 2

*பாயும் ஆயிரம் சக்திக ளாகியே*
*பாரி லுள்ள தொழில்கள் இயற்றுவை;*
*சாயும் பல்லுயிர் கொல்லுவை. நிற்பன*
*தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை.*

*நிலத்தின் கீழ்பல் லுலோகங்கள் ஆயினை;*
*நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை;*
*தலத்தின் மீது மலையும் நதிகளும்*
*சாரும் காடும் சுனைகளும் ஆயினை;*
*குலத்தில் எண்ணற்ற பூண்டு பயிரினம்*
*கூட்டி வைத்துப் பலநலந் துய்த்தனை;*
*புலத்தை யிட்டிங் குயிர்கள்செய் தாய்,அன்னே!*
*போற்றி! போற்றி! நினதருள் போற்றியே!"*[71]

என்பவற்றில் இது விரிவாய் விளக்கப்படுதலைக் கண்டு மகிழலாம்.

**'எல்லாம் சக்திமயம்'** என்ற கருத்து பிறிதொரு கோணத்திலும் காட்டப்பெறுகின்றது:

*"துன்ப மிலாத நிலையே சக்தி,*
*தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி;*
*அன்பு கனிந்த கனிவே சக்தி,*
*ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி;*
*இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி,*
*எண்ணத் திருக்கும் எரியே சக்தி :*
*முன்புநிற் கின்ற தொழிலே சக்தி,*
*முத்தி நிலையின் முடிவே சக்தி."*[72]

இதனைத் தொடர்ந்து வரும் பாடல்களிலும் சக்தியின் பரிணாமம் பல்வேறு விதமாய்க் காட்சியளிக்கின்றது, முத்தாய்ப்பாய்.

*"வீழ்வு தடுக்கும் விறலே சக்தி,*
*விண்ணை அளக்கும் விரிவே! சக்தி;*
*ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி,*
*உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி",*[73]

---

71. தோ.பா. 33 மகாசக்தி வாழ்த்து - 3, 4, 5
72. தோ.பாட. 20 சக்தி - 1
73. தோ.பா.20 - சக்தி - 3

என்று கூறிக் களிக்கின்றார் கவிஞர். மேலும்,

*"பூதம் ஐந்தும் ஆனாய் - காளி!*
*பொறிகள் ஐந்தும் ஆனாய்;*
*போத மாகி நின்றாய் - காளி!*
*பொறியை விஞ்சி நின்றாய்."*[74]

என்று, அன்னை இந்திரியங்களாகவும் நிற்கின்றாள், அவற்றைக் கடந்தும் நிற்கின்றாள் என்று காட்டுவர்.

**'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'** என்பது பெரியோர் வாக்கு. இதனையொட்டியே, எல்லாத் தொழில்களும் செயல்களும் சக்தி தேவியின் அருளால்தான் நடைபெறுகின்றன என்று நம்புபவர், பாரதியார்.

*"செய்யும் கவிதை பராசக்தி*
*யாலே செயப்படுங்காண்"*[75]

என்று தாம் படைக்கும் கவிதைகளும் அன்னை பராசக்தியின் அருளால்தான் வெளிவருகின்றன என்று கூறுவதைக் காணலாம். பிறிதோர் இடத்தில்,

*"பாட்டினிலே சொல்லுவதும்*
*அவள்சொல் லாகும்*
*பயனின்றி உரைப்பாளோ?*
*பாராய், நெஞ்சே!"*[76]

என்று இக்கருத்தினையே மீண்டும் உரைப்பதைக் காணலாம். எனவே, பாடுவதும் அவள் அருளே என்று உணர்ந்த கவிஞர்,

"பாட்டுத் திறத்தாலே - இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்."[77]

என்று தம் 'பேராசை'யை வெளியிடுகின்றார். பராசக்தியைத் தமிழ் வாணியாகப் பாவித்து,

---

74. தோ.பா. 25.காளிப் பாட்டு - 1
75. வி.நா.மா.- 26
76.. தோ.பா.26 பேதை நெஞ்சே - 5
77. தோ.பா.11 காணி நிலம் - 3

*"வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொரு*
*ளாக விளங்கிடுவாய்!*
*தெள்ளு கலைத்தமிழ் வாணி! நினக்கொரு*
*விண்ணப்பம் செய்திடுவேன்;*
*எள்ளத் தனைப்பொழு தும்பய னின்றி*
*இராதென்றன் நாவினிலே*
*வெள்ள மெனப்பொழி வாய்சக்தி வேல்,சக்தி*
*வேல்,சக்தி வேல்,சக்தி வேல்!"*[78]

என்று வேண்டுகின்றார். இன்னும்,

*"நண்ணும் பாட்டினொடு தாளம் - மிக*
*நன்றா வுளத்தழுந்தல் வேண்டும் - பல*
*பண்ணிற் கோடிவகை இன்பம் - நான்*
*பாடத் திறனடைதல் வேண்டும்."*[79]

என்று, தாம் பாடும் பாடல் செவ்வனே அமைதல் வேண்டும் என்று விழைகின்றார். அப்படி அமைய அன்னையின் அருளை வேண்டி நிற்கின்றார்.

*"எந்த நாளும் நின்மேல் - தாயே!*
*இசைகள் பாடி வாழ்வேன்"*[80]

என்று தம் நினைவை வெளியிடுகின்றார். இன்னுமோரிடத்தில்,

*"நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்*
*நானி லத்தவர் மேனிலை எய்தவும்*
*பாட்டி லேதனி யின்பத்தை நாட்டவும்*
*பண்ணி லேகளி கூட்டவும் வேண்டி,நான்*
*மூட்டும் அன்புக் கனலொடு வாணியை*
*முன்னு கின்ற பொழுதி லெலாங்குரல்*
*காட்டி அன்னை பராசக்தி ஏழையேன்*
*கவிதை யாவும் தனக்கெனக் கேட்கின்றாள்."*[81]

78. ஓம் சக்தி - 5
79. 31. யோகசித்தி - 7
80. 31. காளி ஸ்தோத்திரம் - 2
81. தோ.பா.18 பராசக்தி - 3

என்று தம் பாடல்களையெல்லாம் பராசக்தி கேட்பதாய்க் கூறுகின்றார்.

சக்தி வழிபாடு இவர்தம் மூச்சாய் அமைகின்றது; அதுவே பேச்சாகவும் இவர்தம் கவிதையில் வழிந்தோடுகின்றது.

"உயிரெனத் தோன்றி உணர்வுகொண் டேவளர்ந்
தோங்கிடும் சக்தியை ஓதுகின்றோம்
பயிரினைக் காக்கும் மழையென எங்களைப்
பாலித்து நித்தம் வளர்க்கவென்றே."[82]

என்று 'வையம் முழுதும் படைத்தளிக்கின்ற' அன்னை பராசக்தியை வாழ்த்துகின்றார். பிறிதோரிடத்தில்,

"அம்புக்கும் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்சமில் லாதபடி
உம்பர்க்கும் இம்பர்க்கும் வாழ்வு தரும்பதம்
ஓம்சக்தி ஓம்சக்திஓம்"[83]

என்று பராசக்தியின்மீது தாம் கொண்டுள்ள நம்பிக்கையை - மன உறுதியைத் - தெளிவாக்குகின்றார்.

தம் உடல்பொருள் ஆவியனைத்தையும் சமர்ப்பணமாக்கி விடுகின்றார்.[84] இஃது ஒரு நீண்ட பாட்டு; படித்து அநுபவிக்க வேண்டியது. இன்னொரு பாடலில்,

"சக்தி சக்தி வாழீ என்றால்
சம்பத் தெல்லாம் நேராகும்;
சக்தி சக்தி என்றால் சக்தி
தாசன் என்றே பேராகும்."[85]

என்று சக்திதேவியை வாழ்த்தித் தம்மைச் **சக்திதாசன்** என்று கூறிக் கொள்ளுகின்றார். சக்தி என்றால் அது முக்திக்கும் வேராகும் என்பது இவர்தம் உயிராகிய கொள்கை. பிறிதொரு பாடலில்[86] சக்தியையும் தம்மையும் ஐக்கியப்படுத்திக் கொள்ளுகின்றார்.

82. தோ.பா. 21, வையம் முழுதும் - 4
83. தோ.பா. 17, ஓம்சக்தி - 3
84. தோ.பா.23, சக்திக்கு ஆத்ம சமர்ப்பணம்.
85. தோ.பா.25, சக்தி திருப்புகழ் - 9
86. தோ.பா.25, சிவசக்தி புகழ்.

"இன்ப மாகி விட்டாய் - காளி!
என்னு ளேபு குந்தாய்!
பின்பு நின்னை யல்லால் - காளி!
பிறிது நானும் உண்டோ?"[87]

என்ற பாடற்பகுதியில் இதனை அறிந்து தெரியலாம். இது,

"உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன்
என்னை உன்னில் இட்டேன்"[88]

என்ற பெரியாழ்வார் வாக்கையும் (விஷ்ணுசித்தர் அல்லவா?),

"புவியும் இருவிசும்பும் நின்அகத்த; நீஎன்
செவியின் வழிபுகுந்து என்உள்ளாய்; அவிவுஇன்றி
யான்பெரியன் நீபெரியை என்பதனை யார்அறிவார்"[89]

என்ற நம்மாழ்வார் வாக்கையும்,

"தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம் ஒன்றுஇல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன்று என்பால்?"[90]

என்ற மணிவாசகப்பெருமானின் திருவாக்கையும் நினைவுகூரச் செய்துவிடுகின்றது. வைணவ தத்துவமாகிய அந்தர்யாமித் துவத்தை நிலை நாட்டுவது போலக் காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி என்ற மூன்று சக்தி தேவதைகள் பேர் போனவை. காஞ்சி காமகோடி பீடம் உலகப் பெயர் பெற்றது. எல்லாத் தெய்வ தத்துவங்களையும் நன்கு அறிந்த காஞ்சிப் பெரியவர், காமகோடி பீடத்தை நிறுவி வழிபடுவது சிந்திக்கத்தக்கது. பெண்ணாய் உருவகம் செய்த பெரியோர்களின் சிந்தனையை வியக்கின்றோம். ஒவ்வொருவர் வாழ்விலும் வாழ்க்கைத்துணைவியின் பங்கையும் இது சிந்திக்கச் செய்கின்றது. இந்த அடிப்படையில்தான் மனிதன் இறைவனையும் கற்பனை செய்தான் என்று எண்ணத் தோன்றுகின்றது.

**முடிப்புரை :** இன்றைய பொழிவு மூன்று பிரிவுகளாய் அமைந்தது. **முதற்பிரிவு** 'அறிவியல் தோற்றமும் வளர்ச்சியும்'

87. தோ.பா.29 காளிப்பாட்டு - 2
88. பெரியாழ். திரு.5:4:5
89. பெரி.திருவந். 5
90. திருவா. கோயிற்றிருப்பதிகம் - 10

என்பது. ஆதிமனிதன் அநுபவத்தில் அனைத்தையும் படிப்படியாய் அறிந்துகொண்டான்; கூட்டு வாழ்க்கை - சமுதாய வாழ்க்கை - அமைந்த பிறகு அடிப்படைத் தேவைகளை வேளாண்மையால் நிறைவுசெய்துகொண்டான் உறையுள், உடை, பாதுகாப்பு முறைகள், அணிகள் முதலியவை படிப்படியாய் வளர்ந்தன. அறிவியல் போக்கில் என்று சொல்லக்கூடிய உயிரியல், மருத்துவம், கணிதம், வாணியல், போக்குவரத்து முறைகள் யாவும் படிப்படியாய் வளர்ந்தன.

'சமயங்களின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற **இரண்டாவது பிரிவில்**, பல்வேறு சமயங்களைக் கூறி, அவற்றில் ஏற்பட்ட ஒருமைப்பாட்டை விளக்கினேன். ஐம்பெரும் பூதங்களால் இந்த அகிலத் தோற்றம் நிகழ்ந்தது என்ற பண்டையோரின் சிந்தனைகளை எடுத்துக்காட்டினேன். அடுத்து, வைதிகச் சமயங்களாகிய சாங்கியம், யோகம், வைசேடிகம், நியாயம் என்பவைபற்றியும், வேதாந்த சமயங்களாய் அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம் என்பவைபற்றியும்; ஆகமங்களை முக்கிய அடிப்படையாய்க் கொண்ட சைவ சித்தாந்தத்தைப்பற்றியும் சுருக்கமாய் எடுத்துரைத்தேன். புறச்சமயங்களாகிய உலகாயதம் (சாருவாகம்), ஆசீவகம், சமணம், பௌத்தம் ஆகியவற்றையும் அவற்றின் கொள்கைகளைப் பற்றியும் சற்று விரிவாகவே எடுத்துரைத்தேன். வைதிகச் சமயங்கள் யாவும் உலகப் படைப்புக்கு இறைவனே நிமித்த காரணமாய்க் கொள்வதையும் புறச்சமயங்கள்யாவும் அணுக்களி லிருந்தான் உலகம் தோன்றுவதாய்க் கொள்வதையும் வலியுறுத்தினேன்.

**மூன்றாவது பிரிவில்** அறிவியல், சமயம், தத்துவம் இவை இணைந்து கிடப்பதை விளக்கும் போக்கில் அண்டங்களின் அமைப்பையும் அணுவின் அமைப்பையும் விளக்கி, இரண்டன் அமைப்புகளையும் பொருத்திக் காட்டி, 'அண்டத்தைப் போலவே பிண்டமும்' என்ற முதுமொழியின் உண்மையையும் விளங்கச் செய்தேன். 'ஆதவனே ஆற்றல் மூலம்' என்பதையும், அந்த ஆற்றலையே ஆருயிர்கள் (விலங்குகள், பறவைகள் உட்பட) பல்வேறு வடிவங்களில் நுகர்கின்றன என்றும், இதற்கு அறிகுறியாய்த்தான் உழவர்கள் பொங்கல் திருநாளாய் - தமிழர் திருநாளாய் - கொண்டாடுகின்றனர் என்றும் விளக்கினேன்.

அணுவின் தத்துவமே ஆடலரசனின் தத்துவமாய் - ஒரு குறியீடாய் - எழுந்தது என்றும் விளங்க வைத்தேன். அணுவாற்றலே சக்தி தத்துவமாய் உருவெடுத்தது என்றும், அறிவியல் யுகத்தில் தோன்றிய பாரதியார் அறிவியல் அடிப்படையில் தம் பாடல்களைப் படைத்துள்ளார் என்றும், காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி சக்தியின் உருவ வழிபாடாய் அமைந்த தெய்வங்கள் என்றும் விளக்கி, என் இன்றைய பொழிவைத் தலைக்கட்டுகின்றேன்.

கரும்பு தின்னக் கூலி கொடுப்பதற்காக அமைந்தவை பல்கலைக் கழக அறக்கட்டளைகள்; புலவர்கட்கு மரியாதை செய்வதற்காக ஏற்பட்டவை. அடியேன் என் வறுமை நிலையில்கூட என் 81ஆவது பிறந்த நாள் நினைவாய் (27-8-96) இருபத்தைந்தாயிரம் வெண்பொற்காசுகள் தந்து, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறையில் ஓர் அறக்கட்டளை அமைத்துள்ளேன். கடந்த பத்தாண்டுகளுக்கு முன்னர்த் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் இத்தகைய ஓர் அறக்கட்டளையை நிறுவியுள்ளேன். இன்றைய பேச்சுக்கு ஊற்றுவாயாய் இருக்கும் அறக் கட்டளையை நிறுவியவர் இப்பல்கலைக் கழகத்து முதல் இந்திப் பேராசிரியர் - துறைத்தலைவர் பேராசிரியர் எஸ்.சங்கரராஜு நாயுடு அவர்களுக்கும், இந்த அறக்கட்டளையின் ஆதரவில் பேசுவதற்கு வாய்ப்புத் தந்த பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கும், சிறப்பாய் அதன் துணைவேந்தர் பேராசிரியர் ப.க. பொன்னுசாமி அவர்களுக்கும், டாக்டர் இராதாகிருஷ்ணன் உயர்நிலை தத்துவ மைய இயக்குநர் பேராசிரியர் இரா.கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கும், இரண்டு நாள்களாய் என் உரைகளைச் செவிமடுத்த பேராசிரியப் பெருமக்களுக்கும் அறிஞர்கட்கும் மாணவச் செல்வங்களுக்கும் என் இதயங்கலந்த நன்றியைப் புலப்படுத்தி,

> "எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
> எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
> எண்ணினேன் மற்றோர் களைகண் இல்லேன்
> கழலடியே கைதொழுது காணின் அல்லால்

*ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்*
*ஒக்கஅடைக் கும்போது உணர மாட்டேன்*
*புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்*
*பூம்புகலூர் மேவிய புண்ணியனே" (6.9 9.11)*

என்ற அப்பர் பெருமான் திருத்தாண்டகத் திருப்பாடலுடனும்,

*"ஒண்மிதியில் புனல்உருவி ஒருகால் நிற்ப*
*ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து*
*எண்மதியும் கடந்து,அண்டம் மீதுபோகி,*
*இருவிசும்பி னூடுபோய் எழுந்து, மேலைத்*
*தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி,*
*தாடகையின் புறந்தடவி அப்பால் மிக்கு,*
*மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை*
*மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே" (திருநெடுந் 5)*

என்ற திருமங்கையார் திருநெடுந்தாண்டகப் பாசுரத்துடனும் என் இன்றைய பொழிவை நிறைவு செய்கின்றேன்.

நன்றி.

அனைவருக்கும் வணக்கம்.

## பின்னிணைப்பு – I

### பயன்பட்ட நூல்கள்

#### (அ) தமிழ்

1. ஆழ்வார்கள் : நாலாயிரத் திவ்விய பிரபந்தம்
(1) மர்ரே ராஜம் பதிப்பு
(2) கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு

2. இராமலிங்க சுவாமிகள் : திருஅருட்பா (இராமலிங்கர் பணி மன்றம், சென்னை)

3. இளங்கோ அடிகள் : சிலப்பதிகாரம் (கழக வெளியீடு)

4. கந்தசாமி, S.N. : தமிழும் தத்துவமும் (மணிவாசகர் பதிப்பகம்)

5. கபிலர் : கபிலரகவல்

6. கம்பர் : இராமாயணம்
வை.மு.கோ. உரை பதிப்பு, திருவல்லிக்கேணி.

7. சங்கப்புலவர்கள் : புறநானூறு, ஒளவை துரைசாமி, பிள்ளை - கழக வெளியீடு.

8. சங்கப்புலவர்கள் : பத்துப்பாட்டு, நச்சினார்க்கினியர் உரை, உ.வே.சா. பதிப்பு.

9. சமண முனிவர்கள் : நாலடியார், வை.மு.கோ. உரை பதிப்பு

10. சாமிநாதய்யர்(பதி) : தமிழ்விடு தூது (குறிப்புரையுடன்)

11. சித்பவானந்த அடிகள் : பகவத்கீதை (விளக்க உரை)

12. சீத்தலைச்சாத்தனார் : மணிமேகலை, உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு.

13. சுப்பு ரெட்டியார், ந : சைவ சமய விளக்கு (கிடைக்கு மிடம் சை.சி.நூ.கழகம், சென்னை 18)

14. சுப்பு ரெட்டியார், ந.: முத்திநெறி (மேற்படி)

15. சுப்பு ரெட்டியார், ந.: வாழையடி வாழை - (மணிவாசகர் நூலகம், சென்னை - 108)

16. சுப்பு ரெட்டியார், ந.: அணுக்கரு பெளதிகம் (தமிழ்ப் புத்த காலயம், திருவல்லிக்கேணி)

